# "ஸ்..ஸ்..பாரும்மா, ரொம்ப அரிக்குது..எரியிதும்மா."



உபயோகியுங்கள்
**நைஸில்.**
உடனடி நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு பவுடர்.






2 திணுசு
டப்பாக்களில்
கிடைக்கிறது
'நீலம்' மற்றும்
'சந்தனம்'.

மருந்துப் பொருட்கள்
அடங்கிய —நைஸில்:

1. அதிக வியர்வையைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

**வாங்குவீர்
நைஸில்
விரட்டுவீர்
வியர்க்குருவை.**

CASGLN-4-182 TAM

# மங்கையர் மலர்

ஜூன் 1981





அடுத்த இதழில் —

## அனுராதா ரமணன்

எழுதும்

# சாதகப்பறவை

முழு நாவல்

சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-


Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kasturi Rangan

சென்னை நகரத்தில் வந்து நீண்ட காலமாகத் தங்கியதில் என் மனசில் மிருந்த கிலேசம் உண்டாக்கியுள்ள ஓர் அம்சத்தைச் சொல்லத்தான் இத்தனை பீடிகையோடு ஆரம்பிக்கிறேன். இங்கே என்னிடம் வயது வந்த எத்தனையோ பெண்கள் தங்களுக்குக் கல்யாணம் ஆகவில்லை என்ற குறையோடு கண்ணும் கண்ணீருமாக வந்து முறையிடுகிறார்கள். அவர்கள் மனசில் எத்தனை கஷ்டமும் தாபமும் இருக்கின்றன என்று எனக்குத் தெரிகிறது. இந்தப் பரிதாபமான காட்சி என்னை ரொம்பவும் வேதனைப்படுத்துகிறது.

இந்தக் குழந்தைகள் வயது முற்றிய பின்னும் கல்யாணமாகாமல் நிற்கும் காரணம் என்ன? சாரதாச் சட்டத்தின் தலையில் பழியைப் போடுவதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. சாரதாச் சட்டம் பதினாலு வருஷங்களுக்குக் கீழ் கல்யாணம் செய்யக் கூடாது என்றுதான் கட்டுப்படுத்துகிறது. இருபத்தைந்து முப்பது வயசு வரை பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்காமல் இருப்பதற்கு அந்தச்சட்டம் காரணமாகாது. கல்யாண வயசுக்குத்தான் கட்டுப்பாடு இருக்கிறது. உபநயனம் முதலிய மற்ற சம்ஸ்காரங்களைச் சட்டம் எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாமலிருந்தும் கூட நாம் அவற்றையும் உரிய காலத்தில் செய்யாமல்தானே இருக்கிறோம்? எனவே பெண்கள் கல்யாணமாகாமல் கஷ்டப்படுவதற்குச் சட்டத்தை இழுக்க வேண்டியதில்லை. நம் அசிரத்தைத காரணம்.

கல்யாணம் என்றால் ஆடம்பரமாகச் செலவழிக்க வேண்டும் என்றாகி விட்டது. இதைவிட முக்கியமாகப பிள்ளை வீட்டார் வரதட்சிணையும், சீர் வரிசையும் ஏராளமாகக் கேட்கிறார்கள். அன்றாட வாழ்க்கைக்கே கஷ்டமாயிருக்கிற நிலையில் இத்தனை செலவுக்கு ஈடு கொடுத்துச் சேமித்து வைக்கப் பெண்ணைப் பெற்றோருக்கு முடியாமல் போகிறது. பணக் கஷ்டம் காரணமாகவே குழந்தைகள் கல்யாணமாகாமல் மாளாத மனக் குறையுடன் நிற்கிறதுகள்.

பிள்ளையைப் பெற்றவர்கள் ஒருகாலும் வரதட்சிணை வாங்குவதில்லை என்று தீர்மானம் செய்ய வேண்டும். மற்ற விஷயங்கள் திருப்தியாக இருந்தால் கல்யாணத்தை முடிக்க முன்வர வேண்டும். வரதட்சிணை கேட்டால்தான் தங்களுக்கு மதிப்பு, வரதட்சிணை கேட்கா விட்டால் தங்கள் பிள்ளைக்கு ஏதோ குறை என்று நினைப்பார்கள் என்பது போன்ற எண்ணங்களை விட்டு விட்டு எல்லோருக்கும் சந்தோஷம் தரும் வகையில் கல்யாணத்தை முடிக்க வேண்டும். தேசத்துக்காக, பாஷைக்காக, அரசியல் கொள்கைகளுக்காக ஏதேதோ தியாகங்கள் செய்கிறார்கள். நம் தர்மத்துக்காக இந்த வரதட்சிணையைத் தியாகம் செய்யக் கூடாதா?

வரதட்சிணைப் பழக்கமும் கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற வழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு, தான தருமங்கள் செய்வதை விட, பணக்காரர்கள் தங்கள் ஏழை பந்துக்களின் விவாகத்துக்குத் தாராளமாகத் திரவிய உதவி தரவேண்டும். உரிய காலத்தில் நம் பெண் குழந்தைகளுக்குக் கல்யாணமாகி, ஸ்திரீ தர்மமும் சமூக தர்மமும் கெடாமல் இருக்க வேண்டும் என்பது என் ஆசை. ஸ்திரீகள்தான் தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறார்கள். அவர்களின் பண்பு கெடுகிறதற்கு இடமே தரக் கூடாது. அப்புறம் தேசம் பிழைக்காது.

பெண்கள் காலத்தில் கல்யாணமாகி க்ருஹ லக்ஷ்மிகளாக இருக்க வேண்டியது சமூக க்ஷேமத்துக்கு ரொம்பவும் அவசியம். இதற்கு ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிற வரதட்சிணை வழக்கத்தை நாம் கைவிட்டேயாக வேண்டும்.

உங்களை இப்படிச் செய்யப் பண்ண எனக்கு எந்த அதிகார சக்தியும் இல்லை. என்னால் முடிந்தது, ஒரு ஆயுதப் பிரயோகம் பண்ணுகிறேன். இப்போது ரொம்பப் பேர் கல்யாணப் பத்திரிகைகளில் "ஆசார்ய ஸ்வாமிகள் அநுக்ரஹத்தோடு நிச்சயிக்கப்பட்டிருப்பதாக"ப் போடுகிறீர்கள் அல்லவா? இனிமேல் வரதட்சிணை வாங்குகிறவர்களும் கொடுக்கிறவர்களும் அப்படிப்பட்ட கல்யாணப் பத்திரிகைகளில் என் அநுக்கிரகத்தோடு நிச்சயித்ததாகப் போட வேண்டாம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்



# என் பெயர் வேண்டாம்!



# நான் மனங்களை நேசிப்பவள்!

—அனுராதா ரமணன்

நான் இந்த எழுத்துத் துறைக்கு வந்து நீண்ட காலம் ஆகிவிடவில்லை. ஆனால் இதற்குள்ளே மக்களின் பார்வைக்கு ஒரு பிரச்னையாகி விட்டேன், 'சிறை' என்ற கதையினை எழுதியதன் மூலமாக. இக்கதை சமீபத்தில் ஆனந்த விகடன் பொன் விழா சிறுகதைப் போட்டியில் முதற் பரிசு பெற்றது.

ஒரு பிராமணப் பெண், ஒரு 'கிறிஸ்துவனால் ஒரு பகல் நேரப் பொழுதில் கெடுக்கப்படுகிறாள். அவள் தன் புனிதத்தை இழந்த பிறகு வந்து நிற்கும் புருஷன், அவளை வெறுத்து ஒதுக்கிவிட்டு ஊரை விட்டே போய்விடுகிறான். அந்தப் பெண்ணுக்கு எதிர்காலத்துக்கு யாரும் திக்கு இல்லை.

வேறு வழியில்லாமல், ஊருக்கு முரடனான அந்தக் கிறிஸ்துவனின் வாசற் படியிலேயே போய் நிற்கிறாள். அவளுக்கென்று தனியறை ஒதுக்குகிறான் அவன். அவளுடைய சிறை வாழ்வைக் கண்டு அவனும் தன் வாழ்வைத் திருத்திக் கொள்கிறான். நியாயத் தீர்ப்புக்காகக் காத்திருக்கும் குற்றவாளியாக இறக்கும்போது தன் சொத்தில் சிறிதளவை அந்தப் பெண்ணின் எதிர் கால வாழ்வுக்காக எழுதிச் செல்கிறான்.

'தொட்டுத் தாலி கட்டி, காலம் முழுவதும் காப்பாற்றுவேன்' என்று அக்னி சாட்சியாகச் சத்தியம் செய்து கைவிட்டு ஓடிப் போனவருக்கு மனைவியாக வாழ்வதை விட என்றோ ஒரு பத்து நிமிடம் தொட்டதற்காகக் காலம் முழுவதும் பாவச் சிலுவையைச் சுமந்த இந்த முரடனுக்கு விதவையாகலாம்' என்று அவன் இறந்த அந்த நேரத்தில் தன் தாலியைக் கழற்றி அவன் துப்பாக்கிக்கு மாலையாக்குகிறாள். இது கதை.

அப்பப்பா! இதற்குக் கிளம்பிய எதிர்ப்புக்கள்தான் எத்தனை! ஒரு பிராமணப் பெண்ணான நீ, உன் சமுதாயத்தை இப்படியா இழிவு படுத்துவது? என்றுதான் எல்லோரும் கேட்டார்கள்.

பிராமண இளைஞர்கள் என் கதையைக் கொளுத்தியது, கண்டன ஊர்வலம் நடத்தியது, இடம் கிடைத்த மேடைகளில் எல்லாம் என்னை வைதது, ஒரு நாள் மோட்டாரில் என் வீட்டுக்குக் கூட்டமாக வந்து நான் ஆனந்த விகடன் மூலம், இப்படியொரு கதை எழுதியதற்கு மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று வற்புறுத்தியது...

இந்த அளவுக்கு ஒரு கதை ஒரு எழுத்தாளருக்குப் பிரச்னையாகியிருக்குமா என்பது சந்தேகம்தான். ஆனால் இதற்கெல்லாம் நான் பயப்படவில்லை. என் வருத்தமெல்லாம் என் கதையை இவர்கள் எல்லாம் புரிந்து கொள்ளவில்லையே என்பதுதான்.

எனக்கு வந்த நூற்றுக் கணக்கான கண்டனக் கடிதங்களில் பல விஷயம் புரியாமலே எழுதப்பட்டவை.

'இது போல நீங்கள் ஏதோ ஒரு மாதப் பத்திரிகையில் எழுதியுள்ள நாவலான இது கண்டனத்துக்குரியது...'

இப்படி....! என்ன, ஏது என்று அந்தச் சிறு கதையைப் படிக்காதவர்கள் கூட கூட்டத்தோடு சேர்ந்து கல்லெறிவது போல நடந்து கொண்டார்கள்.

நான் எந்தச் சமுதாயத்தையும் இழிவு படுத்தவோ அல்லது உயர்த்தவோ இல்லை. நான் பிறந்து வளர்ந்த ஒரு சமூகத்தின்

சிறப்புக்களையும் குறைகளையும் நன்முக உணர்ந்தவள் நான்.

சிறப்பாக நான் பிராமணர்களைப் போற்றி எழுதிய வலி, சந்தியா காலத்துச் சலனங்கள், கணபதி குருக்கள் பொய் சொல்கிருர் என்ற இந்தக் கதைகளை எத்தனை பேர் படித்திருக்கிருர்கள்? படித்து விட்டு உடனே இவர்கள் பாராட்டுக் கூட்டம் போட்டார்களா? குறைகளைச் சொல்லும்போது மட்டும் ஏன் கோபம் வருகிறது? என்னைப் போற்றவும் வேண்டாம், தூற்றவும் வேண்டாம். நான் சொல்ல வந்ததைப் புரிந்துகொண்டால் சரி.

மேல் மட்டத்தில் இது போன்ற ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தால் வெளியே தெரியாமல் அமுக்கி விருப்பார்கள். இதுவே கீழ் நிலையில் இருப்பவர்களிடையே நடந்திருந்தால், உடனே உணர்ச்சி வசப்பட்டு கணவன், கெடுத்தவனையும் மனைவியையும் ஒன்முக வெட்டுவான். இரண்டும் கெட்டான் சமுதாயத்தில்தான் இது போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறும்.

இந்தப்பிராமணனின் மனைவிதானே அவள், அவனுடைய முழு வாழ்வுக்கும் பொறுப்பானவன். தன் பொறுப்பை விட்டு ஓடியது என்ன நியாயம்? ஒன்று, தேவனாக இருந்து குறையை மன்னிக்கலாம். அல்லது மனிதனாகஇருந்து அவளை ஆற்றிலேயும் தள்ளலாம். இரண்டும் இல்லாமல் எதிர்கால இருட்டில் அவளைத்தள்ளிவிட்டு ஓடிஞல் என்ன அர்த்தம்?

'அவள் குளத்திலோ ஆற்றிலோ விழுந்து சாகலாமே?' என்ருர் என்னுடன் சண்டை போட்ட ஒருவர்.

''ஏன் சார், உங்கள் வீட்டில் சகோதரிகளுக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் நீங்கள் அப்படித்தான் செய்வீர்களா?'' என்று கேட்டேன். ''ஆமாம்'' என்ருர் அவர்.

ஆனல் நான் அப்படிச் செய்ய மாட்டேன். அவள் ஏன் சாக வேண்டும்? தவறு அவளுடையது அல்ல. ஒரு ஆண் தவறு செய்தான் என்று இன்னொரு ஆண் மேலும் அவள் வாழ்க்கையைச் சூறையாடும்போது இந்தப் பெண் இறப்பதுதான் வழியா? நான் மனிதாபிமானம் கொண்ட எழுத்தாளி. என் கதைகளில் மட்டுமல்ல, வாழ்க்கையில் யாருக்கும் அப்படியொரு தவருன தீர்ப்பை வழங்க மாட்டேன்.

இன்னும் எத்தனையோ விவாதங்கள் எழுந்தன. ஆனல் நான் சொல்ல விரும்புவதெல்லாம், தயவு செய்து மேலெழுந்தவாரியாக என் எழுத்தைப் படித்து விட்டு ஆர்ப்பாட்டம் செய்யாதீர்கள். நான் இவர்களிடம் இது போன்ற ஒரு தவருன போக்கு இருக்கிறது என்று சுட்டிக் காட்டுகிறேன். அதைப் புரிந்து கொள்ளுங்கள். நான் மனிதர்களைத்தான் விமரிசிக்கிறேன். மதங்களைவிட, மனங்களை நேசிப்பவள் நான். யாரையும் தனிப்பட்ட முறையிலோ, எந்தச் சமூகத்தையோ ஏசவில்லை. அதைக் கொஞ்சம் கவனியுங்கள் என்றுதான் கேட்கிறேன்.

பேட்டி: வி. மஞ்சுளாரமேஷ்.

## 'எப்போதும் பெண்'

முன் கதைச் சுருக்கம்

அவள் எப்போது பெண் என்று நிர்ணயிக்கப் பட்டாள்?

ஒரு நாள் இரவு கரண்ட் நின்று போனதால் அப்பாவும் அம்மாவும் மொட்டை மாடிக்குப் போய்ப் படுத்துக் கொண்டிருந்தார்கள். குழந்தைகள் பாட்டியுடன் கீழே படுத்திருந்தன. அப்பாவும் அம்மாவும் இப்போது எல்லாம் சேர்ந்தே படுத்துக்கொள்வதில்லை. அப்பாவுக்கு நாற்பத்தி ஐந்து வயது. அம்மாவுக்கு முப்பத்தி ஏழு. மூன்று குழந்தைகளும், பாட்டி கூட இருப்பதும், வீட்டின் குறுக்களவும் உபரிக் காரணங்கள். இதனுல் அம்மா அப்பாவுக்கு அலுத்து விட்டாள் என்றில்லை...

அம்மா அசதியில் இருந்தாள். தனக்கு நிகழ்ந்ததில் பாதிதான் அவளுக்குத் தெரிந்தது. கொஞ்ச நேரத்தில் தூங்கிப் போய் விட்டார்கள்.

அம்மாவின் உள்ளுக்குள் இந்த முற்றுப்புள்ளி அளவுக்கு ஒரு சின்ன சஞ்சல முட்டை காத்திருந்தது. அதன் அளவு சரியாகச் சொல்லப் போனல் 0.132 மில்லி மீட்டர். அந்த புள்ளியை நோக்கி அப்பா விடுவித்த லட்சக்கணக்கான குட்டி யாத்திரிகர்கள் அந்தப் புராதான உள்ளிருட்டில் குருட்டுயாத்திரிகர்களாக நெளிந்து நெளிந்து சென்றனர்.

அதில் ஒரு யாத்திரிகனைக் கவனிப்போம். குட்டி என்றால் படு குட்டி, ஒரு மில்லி மீட்டரின் நாலின் கீழ் நூறுபாகம் அதன் நீளம். சின்ன தட்டையான முட்டை வடிவத் தலை. கயிறு போல் வால். தலைக்குள் க்ரோமோஸோம்கள். அதற்கும் உயிர் இருக்கிறது. அதற்கு ஒரு குறிக்கோள், ஞாபகம் இருக்கிறது. அது தேடுவது, அதற்கு அந்த ஆச்சரிய நீச்சலை யார் சொல்லிக் கொடுத்தார்கள். முட்டை சமர்த்தாக நகராமல் எதிர்காலக் கருவாகக் காத்திருக்க நம் யாத்திரிகன் அதை அடைய ஆசைப்பட்டு நெளிந்து நெளிந்து நீந்துகிறுன். அவனுடன் அதை அடையப் போட்டியாக இன்னும் எத்தனை பேர்? ஒருத்தியை அடைய 200,000,000 காதலர்கள்! எல்லாம் நான் நீ என்று முண்டி அடித்துக் கொண்டு முன்னேற யார் அடையப் போகிருர்கள்? முட்டைக்குள் இருப்பது எக்ஸ் வகை க்ரோமோஸோம். தாக்க வரும் லட்சோப லட்சம் யாத்திரிகர்களில் பேர் பாதி எக்ஸ். மற்ற பாதி ஒய். எக்ஸ் உள்ளே சென்ருல் பிறக்கப் போவது பெண். ஒய் நுழைந்தால் பிறக்கப்போவது ஆண்.

அம்மாவின் கர்ப்பம் அடுத்த வாரம் ஊர்ஜிதம் செய்யப்பட்டு ஆபரேஷனுக்கான தேதியும் நிர்ணயிக்கப்பட்டது.

அன்று அம்மா தயாராக இருந்தாள். புறப்படும் நேரத்தில் பாத்ரூமுக்குப் போன பாட்டி வரவில்லை. அங்கே எசகேடாக விழுந்து விட்டாள். முறிந்து போன காலைச் சரிப்படுத்த இரண்டு மாதம் ஆகி விட்டது. ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்கும் நடக்கவே சரியாக இருந்தது. அப்புறம் டாக்டரை அணுகிஞர்கள்.

அவள் பரீட்சை பண்ணிப் பார்த்துவிட்டு ''பெரிசா வளர்ந்துடுத்து. ரிஸ்க்'' என்ருள். அம்மா முதலில் அழுதாள். அப்புறம் தன் விதிக்குப் பழகிக் கொண்டாள்...'

கதை பக் ... 52ல்

# கவிதை பாடும் கண்களுக்கு...

## ஐடெக்ஸ்

விழிகள் மொழிபேச ஐடெக்ஸ்

பெண்மை பளிச்சிட.., இளமை எழில்
கொஞ்சிட... கவிதையாய் வதனம்
கவர்ச்சி மிளிர்ந்து கண்கள்
களிநடம்புரிய ஐடெக்ஸ் கண்மை
சாஸ்திரீய முறையில் தயாராகும்
ஐடெக்ஸ் மை கண்களுக்கு
குளுமையூட்டி பாதுகாக்கிறது
எவ்வித தீங்கும் விளைவிக்காது

ஐடெக்ஸ் 38 ஆண்டுகளாக உங்கள்
நம்பிக்கையின் மகத்தான சின்னம்







அரவிந்த் லாபரட்டரீஸ் சென்னை 600033

Imageads AL 1293 Tam



# காஸ்., காஸ்..! காஸ்..?

— வி. மஞ்சுளா ரமேஷ்

காலை நேரத்தில் அலுவலகம் செல்லும் இல்லத்தரசி ஒரு நடனமே ஆடி வருகிறாள். அஷ்டாவதானிகள் எல்லாம் இவள் முன் எம்மாத்திரம்? சமையல் வேலைகள், குழந்தைக் கவனிப்பு, கணவனின் பராமரிப்பு, தன்னை அலுவலகம் போகத் தயாரித்துக் கொள்ளல் அத்தனையும் காலை ஐந்திலிருந்து எட்டுக்குள் ஆக வேண்டும்.

இவளுக்கு உற்ற தோழியாக ஒன்று உண்டு, அது 'உஸ்' என்று சத்தம் போடுவதில்லை. வீட்டை அழுக்குப் படுத்துவதில்லை; நேரம் கடத்துவதில்லை; அதுதான் காஸ்!

அடுப்பு, கும்முட்டி, ஸ்டவ் போய் இது காஸ் யுகமாகி விட்டது. ஏன், பெண்ணின் சீர் வரிசைகளில் காஸையும் ஒன்றாகக் கேட்கும் அளவுக்கு இது வீட்டுக்கு இன்றியமையாத பொருளாகி விட்டது.

ஆனால் இதைச் சுற்றித்தான் எத்தனை பிரச்னைகள்..? காஸ்., அது ஒரு முற்றுப்புள்ளியாகாமல் கமா போல வருவதற்குத் தாமதமாகிக்கொண்டே இருக்கிறது என்பது ஒன்று.

காஸ்..! அதன் ஆச்சரியமான பயன்படும் விதம் அனைவரையும் பிரமிக்க வைக்கிறது. காஸ்..? அது விபத்துக்குள்ளாகிப் பெண்களுக்கெல்லாம் கேள்விக் குறியாகிறது.

**காஸ்...,**

இன்றைக்கு இந்தியாவில் காஸ் உபயோகிப்பவர்களின் எண்ணிக்கை ஏறத்தாழ முப்பத்தொரு லட்சம் இல்லத்தரசிகள் ஆவர். அதற்காகக் காத்திருப்பவர்களின் எண்ணிக்கை லட்சம் பேர்கள்.

காஸைப் பற்றிய புள்ளி விவரங்களின் கணக்கைப் பார்க்கும்போது சில ஆச்சரியமான விஷயங்கள் தெரிய வருகிறது. தமிழ்நாடு முழுவதும் உள்ள சிலிண்டர்களின் எண்ணிக்கையை விட டெல்லி மாநகரில் மட்டும் உள்ள சிலிண்டர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. ஏன் இந்த ஏற்றத் தாழ்வு என்பது தெரியவில்லை. (படம் கவனித்தீர்களானால் இன்னும் பல புள்ளி விவரங்கள் கிடைக்கும்.)

காஸைப் பற்றிச் சொல்லும்போதே பெரும்பாலோரின் குறை, 'காஸ் தீர்ந்து போன உடனே மாற்று சிலிண்டர் கொண்டு

⌘ பம்பாயில் இந்துஸ்தான் பெட்ரோலியம் கட்டும் காஸ் கொள்கலன்

பர்னரை இயக்குவதங்க:






பொதுவான சமையல் முறை



வடக்கத்திய சமையல் முறை



மாதிரி அதப்பு

—HOT PLATES

வருவதில்லை' என்பதுதான். இதற்கு விநியோகிப்பவர்களைத்தான் பொதுவாகக் குறை கூறுவார்கள்.

'இவர்கள் என்ன ஸார், அங்கே உட்கார்ந்து கொண்டு போனைக் கூட எடுக்க மாட்டேன் என்கிறார்கள். சிலிண்டரை வைத்துக்கொண்டே இல்லை என்கிறார்கள்'' என்று புலம்புவார்கள். இதைப் பற்றித் தென்னக இன்டேன் விநியோகிப்பவர் சங்கத் தலைவர் திரு முனிவேலுவைக் கேட்டால் சிரிக்கிறார்.

''இதுவும் எங்களுக்கு வியாபாரம்தான். சிலிண்டர்களை விற்றால்தானே பணம் வரும்? நாங்கள் சேர்த்து வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறோம்?''

அப்படியானால் அடிக்கடி சிலிண்டர் தட்டுப்பாடு வரக் காரணமென்ன?

**1** காஸ் தயாரிக்கும் சுத்திகரிப்பு ஆலைகளில் வருடத்துக்கு ஒரு முறை 10, 15 நாட்கள் முழுமையாகப் பராமரிப்பு வேலை செய்கிறார்கள். ஏனெனில் காஸ் எத்தனைக்கெத்தனை உபயோககரமானதோ அத்தனைக்கத்தனை அபாயமானதும் கூட. சிறிது எங்கேனும் ஓட்டை இருந்தாலும் அதன் வழியே வாயு வெளியேறி மிகப் பெரும் விபத்துக்கள் ஏற்படும்.

அதனால் காஸ் தயாரிக்கும் பெரும் டேங்குகளிலிருந்து அது செல்லும் குழாய்கள், சிலிண்டர்கள், ட்யூப்கள் என அத்தனையும் மிக நுணுக்கமாக, துல்லியமாகப் பரிசோதனைக்கு உள்ளாக்கப்படுகிறது.

எனவே இந்த மாதிரி நேரத்தில் வருடத்துக்குப் பதினைந்து நாட்கள் உற்பத்தி இருப்பதில்லை.

**2** சில சமயங்களில் 'க்ரூட் ஆயில்' தட்டுப்பாடு ஏற்பட்டு விடுகிறது. அந்தச் சமயங்களில் 'காஸ்'ஸுக்கும் தட்டுப்பாடு ஏற்பட்டு விடுகிறது. சரி, க்ரூட் ஆயிலுக்கும் காஸுக்கும் என்ன சம்பந்தம்?

க்ரூட் ஆயிலிலிருந்து பெட்ரோல், டீசல், நாப்தா, கெரோசின் போன்றவை தயாரிக்கப்பட்டு, கடைசியாகக் கழிவாக வெளியேறும் ஒரு பொருள்தான் இன்டேன் காஸ். அதைப் படம் விளக்குகிறது.

**3** லட்சக் கணக்கான மக்கள் காஸ் உபயோகிக்கிறார்கள். ஆனால் அதற்குச் சமமாக சிலிண்டர்கள் உற்பத்தி இல்லை. இந்தச் சிலிண்டர்கள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் மிகவும் உயர்ந்த இரும்புத் தகடுகளால் தயாரிக்கப்படுகிறது.

அதில் சிறிது தவறு ஏற்பட்டு விட்டாலும் பெரும் விபத்துக்கள் ஏற்படும் என்பதால்

✖ இன்டேன் எரிபொருள்



மிகவும் கவனமாகத் தயாரிக்கிறார்கள். எனவே இத்தனை சிரத்தையுடன் தயாரிக்கப்படும் சிலிண்டர்கள் போதுமான அளவு இல்லை என்பதால் சப்ளை செய்ய முடிவதில்லை.

இவையெல்லாம் தான் மாற்று சிலிண்டர்கள் உடனடியாக வராததற்குக் காரணம் என்கிறார்கள் விநியோகஸ்தர்கள்.

அது சரி, இரட்டிப்புக்கும் மேல் கவனத்துடன் காஸை ஏன் தயாரிக்கிறார்கள்? அது அவ்வளவு அபாயகரமானதா? என்று பார்த்தோமானால் பல ஆச்சரியகரமான செய்திகள் கிடைக்கின்றன.

## காஸ்...!

சிலிண்டரும், அடுப்பும் ஒரு ட்யூபின் மூலம் இணைக்கப்பட்டிருக்கிறது. இதில் என்ன என்ன பொருள்கள் எப்படி எப்படி இருக்கிறது என்று தெரியுமா?

சிலிண்டருக்குள் என்ன இருக்கிறது? காஸ்...!

அதாவது வாயு என்றுதானே சொல்வீர்கள். அதுதான் இல்லை. அதனுள் ஒரு குறிப்பிட்ட அளவு காஸை உற்பத்தி செய்யும் திரவப் பொருள் அடைக்கப்பட்டுள்ளது. இதனை லிக்விபைட் பெட்ரோலியம் காஸ் (LPG) என்பார்கள். அதன் மேற்புறம் சிறிதே வெற்று வெளி உள்ளது.

சிலிண்டரின் வாய்ப்புறம் 'ரெகுலேட்டர்' வைத்திருக்கிறார்கள். இதன் பணி மிகவும் மகத்தானது. இதனுடைய அபாயகரமான முக்கியத்துவத்தைப் புரிந்து கொண்டீர்களானால் பல விபத்துக்கள் தவிர்க்கப்படும்.

எப்படி?

நாம் முதலில் வால்வைத் திறக்கிறோம் இல்லையா? உடனே சிலிண்டருக்குள் பெரும் மாற்றம் ஏற்படுகிறது. அதனுள் மிக அழுத்தத்தில் வைக்கப்பட்டுள்ள திரவப் பொருள் 70லிருந்து 80 பவுண்டு அழுத்தத்துடன் வாயுவாகப் பீறிட்டு வெளி வருகிறது.

இதனை, நடுவில் இருக்கும் ரெகுலேட்டர் அடக்கி 4லிருந்து 5 பவுண்டு வரும்படியாகச் செய்து டியூப் வழியாகப் பர்னருக்குள் செலுத்துகிறது. அதுவே நீல நிற ஒளியாக மாறுகிறது.

**Indane LPG Statistics**

| REGION | DISTRIBUTORS | CONSUMERS |
|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] |
| TOTAL | [illegible] | [illegible] |

| SOUTHERN REGION | CONSUMER | WAITING LIST |
|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] |

| METROPOLITAN CITIES | CONSUMERS | WAITING LIST |
|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] |

AVERAGE IN SOUTHERN REGION

| | CONSUMER | WAITING LIST |
|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] |

TOTAL CONSUMERS

[illegible]

AVAILABILITY

[illegible]

இவ்வளவு மகத்தான மாறுதலைச் செய்யும் ரெகுலேட்டரின் முக்கியத்துவத்தை நாம் புரிந்து கொள்வதில்லை. தவிரவும் சிலிண்டர் கொண்டு வரும் ஆட்கள் அதைத் தரையில் 'கடகட'வென்று உருட்டுகிறார்கள். அந்தச் சமயத்தில் வால்வு பழுதாகலாம். இதனால் கசிவு ஏற்படும்.

ஏதேனும் காஸ் தகராறு செய்யுமானால் வால்வின் மேல் கத்தியால் அடிக்கிறோம். அந்தச் சமயத்திலும் வால்வ் பழுதாகலாம். இது பழுதானால் என்ன ஆகும்? அபாயகரமான விளைவுகள் ஏற்படும்.

சிலிண்டரிலிருந்து வெளிப்படும் வாயு அதே 80 பவுண்டு வேகத்தில் அடக்குவாரில்லாமல் சீறிக் கொண்டு வெளிவரும். இது மற்ற எரி வாய்வுகளை விடவும் சீக்கிரம் தீப்பற்றிக் கொள்ளும் தன்மையுடையது.

தவிரவும், இந்த வாயு காற்றை விடக் கனமானது. அதனால் மேலே போகாமல் தரையில் சூழ்ந்து கொள்ளும். எனவே தீப்பிடிப்பதும் கீழிருந்துதான் தீப்பிடிக்

வணக்கம்!

[illegible]










கும். மேலே கூரை பற்றிக் கொண்டாலாவது வெளியே ஓடுவதற்கு வாய்ப்புண்டு. தரையில் முழுவதும் சூழ்ந்து கொண்டு எரியும் நெருப்பி லிருந்து தப்பவே முடியாது. சன்னல் வழி யாக வாயு வெளியேறவும் செய்யாதாகை யால் எந்த விதத்திலும் தப்பிக்க வழி கிடையாது.

எனவே இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ரெகுலேட்டரை மிகவும் முக்கியமாகப் பாது காக்க வேண்டும்.

இது போல வேறு சில வகைகளிலும் விபத்து ஏற்பட வழியுண்டு. பொதுவாக இல்லத்தரசிகள் பர்னர்களையும் சுற்றியிருக் கும் அடுப்பையும் துடைத்துச் சுத்தமாக வைத்துக் கொள்வார்கள். அநேகமாக சிலிண் டரையும், பர்னரையும் இணைக்கும் ரப்பர் டியூபைக் கவனிக்க மாட்டார்கள்.

சாதம், சாம்பார் முதலியவை கொதிக் கும்போது இந்த ரப்பர்களின் மேல் படும். இவற்றை நாம் •விட்டு விடுகிறோம். இரவில் சாம்பார் ருசி காணும் எலிகள் அவற்றைக் கடித்துவிடும். இந்த வகையில் டியூபில் ஏற் படும் ஓட்டையில் காஸ் கசிந்தும் விபத்து ஏற்பட வாய்ப்புண்டு.

எனவே காஸ் விபத்தை எப்படியெல்லாம் தவிர்க்கலாம்? அதை எப்படியெல்லாம் பாது காக்க வேண்டும்? எப்படிச் சிக்கன மாக உபயோகிக்கலாம்?

### காஸ்...?

#### விபத்தை தவிர்ப்பதற்கு

1. முதலில் சிலிண்டர் வரும்போது முழு வதும் பரிசோதித்து வாங்குங்கள். சப்ளை செய்யும் ஆள் அதைத் தரையில் உருட்டா மல் எடுத்து வரச் சொல்லுங்கள். சிலிண் டரை இணைக்கும்போது அருகே எந்தவிதத் தீப்பொறியும் இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒருவேளை சிலிண்டர் கசிவுள்ள தாக இருந்தால் ஒரு சிறு தீப்பொறி போதும், விபத்து ஏற்பட.

2. சிலிண்டரைச் சாய்த்து வைக்கவோ, படுக்க வைக்கவோ கூடாது. ஏனென்றால் அதனுள் இருக்கும் திரவப் பொருளைப் பற்றி யும், அது வாயுவாக மிக வேகமாக வெளி யேறும்போது அதை ரெகுலேட்டர் கட்டுப் படுத்துகிறது என்பதையும் பார்த்தோம்.






சிலிண்டரைச் சாய்த்தோ, படுக்க வைத்தோ உபயோகித்தால் அந்தத் திரவப் பொருள் வெளிவர வாய்ப்புண்டு. 4 பவுண்ட் அழுத்தத்தில் வெளிவர வேண்டிய வாயு 80 பவுண்டு அழுத்தத்துடன் திரவமாக வெளிவந்தால் எவ்வளவு பெரிய விபத்து ஏற்படும்?

எனவே காஸ் தீர்ந்து விட்டது என்று சிலிண்டரை ஆட்டுவதோ படுக்கவைப்பதோ கூடவே கூடாது.

3. அடுப்புச் சாதனங்களையும், ரப்பர் குழாயையும் அடிக்கடி பரிசோதித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். அதை வீட்டில் உள்ளோர் செய்கிறேன் என்று வந்தால், எந்தக்காரணத்தைக்கொண்டும் விடாதீர்கள். ஏனென்றால் வீட்டு மெக்கானிக்குகள் தங்கள் திறமையைப் பரிசோதித்துக் கொள்ளும் இடமல்ல இது. ஒரு சிறு தவறும் ஏற்படக் கூடாத இடம்.

4. யார் ரிப்பேர் செய்தாலும் முரட்டுத்தனமாக சிலிண்டரை அடிக்கவோ, கசிவு ஏற்பட்டிருக்கிறதா என்பதைத்தீக்குச்சி பொருத்திப் பார்க்கவோ விடாதீர்கள். முரட்டுத்தனமாக வால்வுகளை அடிப்பதால் வளைந்து கசிவு ஏற்பட வாய்ப்புண்டு.

கசிவு உள்ளதா என்பதை ஆராய சோப் தண்ணீரைத்தான் உபயோகிக்க வேண்டும். தீக்குச்சியால் உடனே தீவிபத்து ஏற்பட வாய்ப்புண்டு.

5. காஸ் அடுப்பினால் சமையலறை மற்ற எரியும் சாதனங்களால் அழுக்காவது போல அழுக்காவதில்லை. சாம்பலோ, கரியோ ஏற்படுவதில்லை. நமக்கு இவ்வளவு சுத்தமாகச்




சமையல் செய்ய உதவும் காஸ் அடுப்பையும் நாம் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

இணைக்கும் ரப்பர் குழாய்களைச் சுத்தம் செய்வது போலவே பர்னர்களையும் சுத்தம் செய்ய வேண்டும். ஏனெனில் பர்னர்களில் பருக்கை அடைத்துக் கொண்டு விடுமானால் தீச்சுவாலை வராமல் வாயு மட்டும் கசிந்து கொண்டே இருக்கும். அதனாலும் விபத்து ஏற்படும்.

6. காஸ் அடுப்பின் பக்கத்தில் மெழுகு வர்த்தியோ, லாந்தர் தீபமோ, எந்தவொரு எரியும் சாதனமோ வைக்காதீர்கள்.

### அடுப்பை மூட்டுவதற்குச் சரியான வழி எது?

முதலில் சிலிண்டரின் வால்வைத் திறக்க வேண்டும். பின்னர் தீக்குச்சியைக் கொளுத்திக் கொண்டு, அதன் பின்னரே ஸ்விட்சைத் திறந்து தீயைப் பற்ற வைக்க வேண்டும்.

மூடும்போதும் சிலிண்டரை மூடிவிட்டுப் பின்னர் ஸ்விட்சை மூடிவிடுங்கள்.

சரி, வாயு கசிந்து விட்டது; கசிவு கண்டிப்பாக நம்முடைய மூக்குக்கு வரும். ஏனெனில் கசிவு தெரியவர வேண்டும் என்பதற்காகவே நெடி மிகுந்த ஒருவித வாசனைப் பொருளை இதில் சேர்க்கிறார்கள்.

அப்படிக் கசிவு ஏற்பட்டது தெரிய வருமானால் முதலில் எல்லா சன்னல்களையும் நன்றாகத் திறந்து விடுங்கள். சிறு தீப்பொறி கூட இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்த வாயு காற்றை விடக் கனமானது என்பதால் மேலே எழும்ப வாய்ப்பில்லை.

WHILE CONNECTING CYLINDER

தரையில் சூழ்ந்து கொள்ளும் இந்த வாயு வெளியேறச் சிறந்த வழி தரையில் சிறுவெண்டிலேட்டரை வைப்பதுதான். இனி கட்டும் வீடுகளிலாவது இது போன்ற அமைப்பை வைக்க வேண்டும் எனப் பெண்கள் கேட்டுக் கொள்ளலாம்.

எல்லாவற்றையும் விட முக்கியமானது இரவில் படுக்கப் போகு முன்னர் சிலிண்டர் வால்வு, பர்னரின் ஸ்விட்ச் எல்லாம் இறுக மூடியிருக்கிறதா என்பதை நன்றாகப் பரிசோதிக்க வேண்டும்.

**எரிபொருளைச் சிக்கனமாக எப்படி உபயோகிக்கலாம்?**

1. அடுப்பைத் திறப்பதற்கு முன்னே எல்லாச் சமையல் பொருட்களையும் தயார் நிலையில் வைத்துக் கொள்ளுங்கள். அடுப்பைப் பற்றவைத்துக் கொண்டு பின்னர் அரிசி கழுவுவதோ, காப்பி கலப்பதோ மிகவும் விரயமானது. இப்படி அனாவசியமாக எரிய விடுவது ஒரு 'நேஷனல் வேஸ்ட்' என்றுகூடச் சொல்லலாம்.

2. பிரஷர் குக்கரை உபயோகப்படுத்தலாம். சாதம், காய்கறி, பருப்பு எல்லாம் ஒரே சமயத்தில் வெந்துவிடும்.

3. சமையல் ஆகும்போது பாத்திரங்களை மூட வேண்டும். இதனால் சீக்கிரம் ஆவதுடன், எரிபொருள் ஏராளமாக மிச்சமாகும்.

4. சாதத்துக்கோ, பருப்புக்கோ, குடிநீருக்கோ ஏராளமான தண்ணீரை ஏற்றாதீர்கள். அளவான தண்ணீரை வைப்பதனால் கணிசமான அளவு எரிபொருள் மிஞ்சும்.

5. உயரமான பாத்திரங்கள் சூடாக நேரமாகும். பெரும்பாலும் அகலமான பாத்திரங்களை உபயோகியுங்கள்.

6. முடிந்த அளவுக்குக் குடும்பத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து சாப்பிடுங்கள். இதனால் குடும்பப் பிணைப்பு அதிகமாகும் என்பது மட்டுமில்லை. தனித் தனியே சாப்பிட்டால் உணவுப் பொருள்களைத் தனித் தனியே சூடுபடுத்த வேண்டும் என்பதும் முக்கியம்.

**Indane Gas Clyinders Selling Rates at Madras**

| DATE | [illegible] | [illegible] | [illegible] |
|---|---|---|---|
| 1-9-69 | 25·96 | 3·68 | 19·14 |
| 1-6-71 | 24·83 | 3·68 | 17·39 |
| 23-6-71 | 24·97 | ,, | 17·28 |
| 2-7-71 | 24·90 | ,, | 17·34 |
| 7-8-72 | 19·11 | 3·37 | 21·41 |
| 16-6-73 | 19·38 | ,, | 20·41 |
| 19-7-73 | 19·37 | ,, | 20·42 |
| 3-11-73 | 20·60 | ,, | 18·48 |
| 3-3-74 | 22·69 | ,, | 17·44 |
| 16-8-74 | 22·82 | ,, | 17·32 |
| 23-9-74 | 23·94 | ,, | 16·38 |
| 16-7-75 | 26·66 | ,, | 14·45 |
| 24-10-75 | 26·65 | ,, | 14·47 |
| 3-12-75 | 29·36 | ,, | 12·96 |
| 2-2-76 | 29·17 | ,, | 13·06 |
| 2-3-78 | 29·67 | ,, | 12·81 |
| 1-3-79 | 31·90 | ,, | 11·81 |
| 16-8-79 | 37·32 | ,, | 9·92 |
| 15-9-79 | 37·18 | ,, | 9·96 |
| ·80 | 37·81 | ,, | 8·96 |
| Jan.-81 | 43·26 | ,, | 7·80 |

7. முடிந்த அளவு சிறிய பர்னரையே உபயோகப்படுத்துங்கள்.

8. அடுப்புச் சாதனங்களை அடிக்கடி துடைத்துச் சுத்தப்படுத்தி வையுங்கள்.

உயர்ந்த எரிபொருள் சாதனமான காஸ் அபாயகரமானது என்று பயப்படத் தேவையில்லை. இதைச் சரியான முறையில் ஜாக்கிரதையாகப் பயன்படுத்தினால் சிக்கனமானது; சுத்தமானது; அபாயமற்றது.

காஸின் பெருமையை அனைவரும் அறிந்துவிட்டார்கள். அதனால்தான் காஸுக்காகக் காத்திருப்பவர்களின் எண்ணிக்கை லட்சக் கணக்கில் உள்ளது.

'இந்தப் பெரும் கட்டுரை யெல்லாம் கரெக்ட்தான். நாங்கள் காஸுக்கு ரிஜிஸ்டர்

செய்து அஞ்சு வருஷமாச்சு, இன்னும் வரக் காணோமே' என்று முணு முணுக்கிறீர்கள் இல்லையா? ஒரு சம்பவம் கூடச் சமீபத்தில் நடந்தது.

ஒரு தாயும், எட்டு வயதுப் பெண்ணும் ரிஜிஸ்டர் செய்யும் க்யூவில் நின்றார்களாம். தாய் ரிஜிஸ்டிரேஷன் முடிந்தவுடன், எட்டு வயதுப் பெண்ணும் ரிஜிஸ்டர் செய்யக் கேட்டாளாம். பதிவு செய்பவருக்கு ஆச்சரியம்.

. ''இத்தனை சிறிய பெண்ணுனை உனக்கு எதற்கம்மா காஸ்...?'' என்று கேட்டிருக்கிறார்.

அம்மா சொன்னுள், ''இப்போ ரிஜிஸ்டர் செய்தால் பத்து வருஷம் கழிந்துக் கிடைக்கும். அப்போ இவளுக்குப் பதினெட்டு வயதாகும். சரியாக இருக்கும்!''

இது உண்மையில் நடந்தது.

பலவருஷங்களாக காஸுக்காகக் காத்திருப்பவர்களுக்கு ஒரு நற்செய்தி. அண்மையில் மத்திய பெட்ரோலிய அமைச்சர் திரு. சேத்தி கூறினர், பதிவு செய்தவர்களுக்கு இந்த ஆண்டின் இறுதிக்குள் சப்ளை செய்து விடுகிறார்களாம்!

---

சில சமயம் காஸ் ஒரு மாதம் வருகிறது; சில சமயம் 20 நாளில் தீர்ந்து விடுகிறது. விநியோகிப்பவர்கள் மேல் தப்பு சொல்கிறோம். அவர்கள் சிலிண்டரிலிருந்து எடுப்பதற்கு வாய்ப்பே கிடையாது.

ஒவ்வொரு சிலிண்டரும் காஸுடன் பதினைந்து கிலோ எடையுள்ளது. காஸை அடைக்கும்போது பதினைந்து கிலோ, என்று எடைகாட்டும் கருவியை நம்புகிறார்கள். ஒரு நாளைக்கு லட்சக் கணக்கில் எடைபோடும் மெஷின் சிறிது தேயல் ஏற்பட்டாலும் தவறு ஏற்பட வாய்ப்புண்டு. அடிக்கடி பழுது பார்த்தாலும் தேய்ச்சல் வரும்போது எடை சரியாக நிறுப்பதில்லை. காஸும் குறைகிறது. அதுதான் காரணம்.

---

## இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள் : உருளைக் கிழங்கு

முடிவு தேதி : 10 - 6 - 81

### சமையல் கூபன்

இத்துடன் .......... என்ற தலைப்பில் சமையல் குறிப்புக்களை அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# சுத்தம் சுகந்தம் தரும்!






சுத்தம் சோறு போடும்—பழமொழி
சுத்தம் சுகந்தம் தரும்—'ரேணு'மொழி

ஆம்! 'ரேணு'வை உபயோகிப்பதால் சுகந்தமான சுத்தம் பெற முடியும். அதுவும் மலிவான விலையில்! எல்லாவிதமான பாத்திரங்கள், தரை, வாஷ் பேசின், கழிவறை முதலியவற்றை ரேணு க்ளீனிங் பௌடர் சுத்தமாக துலக்குகிறது. வெறும் பேச்சை விட அனுபவம் சிறந்ததல்லவா?

நித்தமும் சுகந்த சுத்தம்!

'ரேணுகா எண்டர்பிரைஸஸ்'
1-டேனியல் தெரு, தி.நகர்,
சென்னை-600 017.
தொலைபேசி: 446952



# மருமகளின் குழந்தை

**ப**ஸ்ஸைவிட்டு இறங்கி ஓட்டமும் நடையுமாக வீட்டுக்குள் நுழைந்தாள் சுபா.

நடு ஹாலில் குழந்தை கத்தி விரைத்துக் கொண்டிருந்தது. ஹாண்ட் பாக்கை மூலையில் வீசி எறிந்து விட்டுக் குழந்தையைக் கைகளில் அள்ளிக் கொண்டாள். உள் அறைக்குச் செல்கிற அளவுக்குக் கூட அவளுக்குப் பொறுமை இல்லை. இடது கையால் ஜாக்கெட்டின் கொக்கிகளை அவிழ்த்தபடி அங்கேயே உட்கார்ந்து விட்டாள், பாவம்.

குழந்தையின் அழுகை பட்டென்று நின்று விட்டது. தடை நீங்கிய அமுதப் பிரவாகம் 'அப்பாடா!' என்று சுபாவின் உள்ளம் விசித்தது. அலுவலகம் அருகிலேயே இருந்திருந்தால் இடையில் ஒரு தடவை வந்து போக முடியும். அப்படி இல்லாததால் தாய்—சேய் இருவருக்குமே துன்பம்தான்.

''கரைச்சு எடுத்துண்டு வரதுக்குள்ளே எப்படிக் கத்தி வெரைக்கிறது பாரு... சனியன்'' என்று புலம்பியபடியே பீடிங் பாட்டிலுடன் வருகிறாள் மங்களம்.

மருமகளைக் கண்டதும் என்ன தோன்றியதோ என்னமோ?

''வந்துட்டியா... என்னடாப்பா அழுகை சத்தத்தைக் காணோமேன்னு பார்த்தேன். கரைச்சுண்டு வந்துட்டேனே, இதை என்ன பண்ணறது....'' என்றவாறே பாட்டிலை சுபாவின் அருகில் வைத்தாள். .

மாற்றி மாற்றி இரு பக்கத்திலும் குடித்து விட்ட திருப்தியில் தன்னை மறந்து அப்படியே தூங்கிவிட்டான் குழந்தை ரகு. அவனை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு உள்ளே சென்றாள் சுபா.

''அவன் சம்பாதிக்கிற காசிலே பாதி இப்படித்தான் பாழாகப் போறது'' — பீடிங் பாட்டிலை நகர்த்தி வைத்து விட்டு அப்படியே தரையில் கால்களை நீட்டிக் கொண்டு படுத்து விட்டாள் மங்களம். தன் 'டியூட்டி' நேரம் முடிந்து விட்ட திருப்தியோடு.

சுபா தன் ஹாண்ட் பாக்கை எடுக்க வந்தபோது.

''உடம்பை என்னமாய் வலிக்கிறது தெரியுமா? தெரியாமலா 'பிள்ளை எடுத்துப் பிழைப்பதை விடப் பிச்சை எடுத்துப் பிழைக்கலாம்'னு சொன்னா.'' என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தாள் மங்களம்.

இதுவே தன் அம்மாவாக இருந்திருந்தால் 'நான் சம்பாதிக்கிற காசு மட்டும் வேண்டியிருக்கு... குழந்தையைப் பார்த்துக்கொள்ள மட்டும் முடியலையாக்கும்' என்று படபடவென்று பொரிந்து தள்ளியிருப்பாள் சுபா. தள்ளியும் இருக்கிறாள். மாமியாராச்சே! ஆத்திரத்தை ஒரு பெருமூச்சோடு வெளியேற்றி விட்டு உள்ளே வந்து விட்டாள்.

சேயின் பசியை ஆற்றிய பின் தன் பசியை உணர்த்தியது அவள் வயிறு. குறைந்தபட்சம் ஒரு கப் காப்பியாவது சூடாகச் சாப்பிட வேண்டும் போலிருந்தது. புடவையைக் கூட மாற்றிக் கொள்ளாமல் சமையலறைக்குள் நுழைந்தாள்.

அது வெறிச்சோடிக் கிடந்தது.

தீப்பெட்டியைத் தேடி எடுத்துக்கொண்டு மேடையருகில் வந்து பார்த்தாள். டிபன் செய்யப் போவதற்கான அறிகுறியைக்கூடக் காணோம். பிளாஸ்டிக் பையில் பால் அப்படியே இருந்தது. காஸ் அடுப்பைப் பற்ற வைத்துப்பாத்திரத்தில் தண்ணீரைப்போட்டு விட்டு பில்டரை எடுக்கப் போனாள்.

ஷெல்பில் பில்டர் இல்லை. வெளித் தாழ்வாரத்தில் வேலைக்காரி தேய்த்துக் கழுவி வைத்தது வைத்தபடி இருந்தது. பாத்திரங்களை யெல்லாம் உள்ளே எடுத்துப் போய் வைத்து விட்டு வந்தாள். வேலைக்காரி காலையில் துவைத்துக் காயப்போட்ட துணிகள் யாவும் கொடியில் அப்படியே தொங்கிக் கொண்டிருந்தன. அவைகளை எடுத்து வந்து உள்ளே போட்டுச் சமையலறைக்குவந்தாள்.

பாலை அடுப்பில் வைத்து விட்டுச் சர்க்கரை டப்பாவை எடுக்கப் போனபோது அது சரியாக மூடப்படாமல் எறும்பு மொய்த்துக் கிடந்தது. அதை எடுத்து ஒரு எவர் சில்வர் தட்டில் கொட்டினாள்.

''மன்னி! தலைவலி மண்டையைப் பிளக்கிறது. காப்பி கிடைக்குமா?'' என்றபடி பரட்டைத் தலையும் ஜீன்ஸுமாக உள்ளே வந்தாள் நாத்தனார் ப்ரியா.

''எனக்குக்கூட ஒரு வாய் கொண்டாடி ப்ரியா'' ஹாலிலிருந்து குரல் கொடுத்தாள் மங்களம்.

''இப்பத்தான் காலேஜிலிருந்து வருகிறாயா ப்ரியா?'' என்றபடியே காப்பி டம்ளரை அவளிடம் கொடுத்தாள் சுபா.

''உஸ்... அம்மா கிட்ட ஸ்பெஷல் கிளாஸுன்னு சொல்லியிருக்கேன். மாட்டினி ஷோவுக்குப் போனோம் மன்னி.'' என்றாள் ப்ரியா.

மாமியாருக்கும் காப்பியைக் கொடுத்து அனுப்பிவிட்டுப் பில்டரைத் திறந்து பார்த்

## திருமணங்கள் பலவிதம்

ரெட்டியார் திருமணச் சடங்கின்போது மாப்பிள்ளைக்குப் பெண் வேஷம் போட்டு மணப் பெண்ணின் அருகில் நிறுத்துகின்றனர். —களந்தை நடேஷ்கண்ணு



## கே.ஜெயலக்ஷ்மி

தான் சுபா. அது சொட்டுச் சொட்டென்று சொட்டிக் கொண்டிருந்தது.

வாசலில் ஸ்கூட்டர் சப்தம் கேட்டது.

பில்டரைக் கோபமாகப் பார்த்து விட்டுப் பானையிலிருந்து ஒரு தம்ளர் பச்சைத் தண்ணீரை எடுத்துக் குடித்து விட்டுத் தோசைக் கல்லை எடுத்து அடுப்பில் போட்டாள். அவளுக்கு இப்போது எப்படிப் பசிக்க முடியும்?

• • •

அடித்துப் போட்டது மாதிரி தூங்கிக் கொண்டிருந்தாள் சுபா. அவன் வாங்கி வந்த பூப் பொட்டலம் டீப்பாயின் மீது பிரிக்கப்படாமலே கிடந்தது. படித்துக் கொண்டிருந்த வாரப் பத்திரிகையைக் கீழே போட்டுவிட்டு மனைவியின் பக்கம் திரும்பினான் வாசு.

ஆசையாக அவள் மீது கையைப் போட்டான்.

ஊஹூம். அவளிடம் சலனமே இல்லை. வேறு வழியில்லை. அவளைத் தன் பக்கம் திருப்பிக் கொள்ள முயன்றான்.

''ப்ளீஸ்... என்னைக் கொஞ்சம் தூங்க விடுங்களேன்....'' அரை விழிப்பில் கெஞ்சினாள் அவள்.

கசக்கி முகருகிற பழக்கம் என்றைக்குமே அவனுக்கு இருந்ததில்லை.

''சரி தூங்கு!'' என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டான். திருமணமாகி ஒருவருடம்தான் அவர்கள் இளமை இன்பங்களையெல்லாம் ஜாலியாகச் சுவைக்க முடிந்தது. அதன் பிறகு சுபா தாய்மையுற்றாள். அதன் தளர்ச்சியை மீறிக்கொண்டு அவனுக்கு ஈடு கொடுக்க அவளால் முடியவில்லை. குழந்தை பிறந்த பிறகு எல்லாம் சரியாகிவிடும். பழையபடி இருக்கலாம்என்று எதிர்பார்த்தான். அந்த ஆசையிலும் மண் விழுந்தது.

ரகு பிறந்த பிறகு வேளா வேளைக்கு ஆகாரம் கிடைப்பதே அரிதாகி விட்டது. ''குழந்தையைப் பார்த்துக்கொண்டு என்னால் வேறு எதுவும் செய்ய முடியாது. எனக்கு வயசாகவில்லையா?'' என்று அம்மா புலம்பத் தொடங்கினாள்.

அலுவலகத்துக்குப் போவதற்கு முன்பும் திரும்பி வந்த பிறகும்கூட சுபாவே எல்லா வேலைகளையும் செய்ய வேண்டியதாயிற்று. அவனுடைய அளவு கடந்த அசதிக்கு அது



தான் காரணமாக இருக்குமோ என்று அவன் சிந்திக்க ஆரம்பித்தான். அதன் விளைவு?

• • •

**ம**ணி ஒன்பதரை ஆகி விட்டது.

அவசரம் அவசரமாகப் புடவையை மாற்றிக்கொண்டு புறப்பட்டாள் சுபா.

''சுபா! குழந்தையை எடுத்துக்கொள். அவனுக்குத் தேவையான சாமான்களையும் எடுத்துக்கொள்.'' என்று சொன்னான் வாசு.

''எதுக்கு...?'' என்று அவனை வியப்புடன் பார்த்தாள் சுபா.

''குழந்தைகள் காப்பகத்திலே ஏற்பாடு பண்ணி விட்டேன். சுபா. நாம்ப ஆபீசுக்குப் போகும்போது குழந்தையைக் கொண்டு போய் அங்கே விட்டு விடுவது. திரும்பி வரும்போது அழைத்து வந்து விடலாம்....''

''செலவு....''

''அதைப் பார்த்தால் முடியுமா? எப்படியாவது சமாளித்துக் கொள்ளவேண்டியது தான்.''

இருவரும் குழந்தையை எடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

மங்களம் வாயைத் திறக்கவில்லை.

அன்று மாலை சுபா திரும்பி வந்தபோது வீட்டில் எல்லாம் அழகாக நடந்திருந்தது. மேஜையில் டிபன் காப்பி தயாராக இருந்தது. பசியை ஆற்றிக் கொண்டு இரவுச் சமையலை நிதானமாக அவளால் கவனிக்க முடிந்தது.

''அன்றிரவு வாசுவின் ஆசைகள் மதிப்பிழக்கவில்லை.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சங்கரன் கோவில் அருகே ஆலங்குளம் என்ற ஊரில் ஒருபசு, கன்று ஈனுமலே தினமும் ஒரு லிட்டர் பால் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

—களந்தை நடேஷ்கண்ணு



தன் குழந்தையைப் பார்த்துக் கொள்ளுரே என்பதற்காக மாமியாரிடம் பயப்படவும் சுபாவுக்குத் தேவை யிருக்கவில்லை. பாசம் அங்கேயும் இருக்கவில்லை. ஆனால் இங்கே இல்லாத கடமை அங்கே காசுக் காசுவேனும் அரவணைத்துக் கொண்டது.

நான்கு நாட்கள் நகர்ந்தன.

நிம்மதியாக இருந்தான் வாசு. தெரியாமலா 'காசு இருந்தால் போதும் அம்மா அப்பாவைத் தவிர மற்றதையெல்லாம் விலைக்கு வாங்கிவிடலாம்' என்று சொல்லி இருக்கிறார்கள். சில அம்மா—அப்பாக்களைக் கூட விலைக்கு வாங்கிவிடக் கூடிய சூழ்நிலை தான் இப்போது உருவாகிக் கொண்டிருக்கிறது என்பது அவனுக்குத் தெரியும்.

அன்று சுபா குழந்தையுடன் வீட்டுக்குத் திரும்பியபோது வீட்டுக் கதவில் பெரிய பூட்டுத் தொங்கியது.

இவளைக் கண்டதும் பக்கத்து வீட்டு மாமி ஓடி வந்தாள்.

''சுபா! உன் மாமியாரும் நாத்தனரும் மாட்னி ஷோ போயிருக்கா. இந்தா சாவியும் பாலும்'' என்று சொல்லிச் சாவிக் கொத்தையும் பால் கவரையும் சுபாவிடம் கொடுத்தாள்.

மறுநாள் கோவிலுக்குப் போனுள் மாமியார். அதற்கு மறு நாள் பெரம்பூரிலே இருக்கிற தன் தம்பி வீட்டுக்குப் போயிருந்தாள்.

இப்படியே ஒரு வாரம் ஓடிவிட்டது.

சுபாவுக்குப் பூட்டி யிருந்த கதவைத் தினமும் திறக்கிற ஒரு வேலையும் கூடுதலாயிற்று. வேலை அதிகமானதும் உடலில் அசதி. உல்லாசத்தை நாடாத நிலை மீண்டும் புத்தொளி பெற்றது.

வாசு பொறுமையை இழக்கும்படியாயிற்று.

''என்னம்மா இது! நீயும் தினமும் வெளியில் கிளம்பி விடுகிறாய்?'' என்று கேட்டு விட்டான்.

''இத்தனை வருஷமா வேலை து உழைச்சாச்சே... இனிமேலாவது அங்கே இங்கேன்னு நாலு இடங்களுக்குப் போகக் கூடாதுங்கிறியா?... வீட்டிலேயே அடைஞ்சு கெடக்கச் சொல்றியா'ன்னு சண்டைபோடத் தொடங்கி விட்டாள். அவள் சொல்வதிலும் நியாயம் இருக்கத்தானே செய்கிறது?

வாயை மூடிக் கொண்டு விட்டான் வாசு. வேலை பார்க்கிற மனைவியை நாடியது அவன் குற்றம்தானே?

• • •

**அ**ன்று மாலைத் தபாலில் வனஜாவிடமிருந்து கடிதம் வந்தது. ஆசையாகப் பிரித்துப் படித்தாள் மங்களம்.

அன்புள்ள அம்மாவுக்கு,

நமஸ்காரம். உன் மாப்பிள்ளைக்குச் சென்னைக்கு மாற்றலாகி விட்டது. குவார்ட்டர்

லோம் காலி இருக்கிறதாம். நானும் என்னைச் சென்னைக்கே மாற்றல் செய்து விடும்படி என் ஆபீசில் கேட்டிருந்தேன். சம்மதித்து விட்டார்கள். முதல் தேதி அங்கு வருகிறோம். மற்றவை நேரில். அன்புடன் வனஜா

மகளுக்குச் சென்னைக்கு மாற்றலாகிவிட்டதில் மங்களத்துக்குத் தாங்க முடியாத சந்தோஷம்.

வனஜாவின் குடும்பம் எழுதியபடியே வந்து விட்டது. ஒரு வாரம் லீவு போட்டு விட்டு வனஜாவும் அவள் கணவனும் ஓடி ஓடி வேலை செய்தார்கள். மூன்று வயதுப் பையன் சுரேஷுக்கு எல். கே. ஜி.யில் அட்மிஷன் கிடைத்து விட்டது. இரண்டாவது பெண் குழந்தைக்கு ஒரு வயதுதான். அதனால் அட்மிஷன் பிரச்னை இருக்கவில்லை.

சுரேஷின் பள்ளிக்கூடம் தெரு முனையில் இருந்ததால் அவனைப் பிறந்த வீட்டிலேயே விட்டு விட்டுக் கைக் குழந்தையுடன் தங்கள் குவார்ட்டர்ஸுக்குப் போனார்கள், வனஜா தம்பதியர். கைக் குழந்தையையும் தாங்களிருவரும் ஆபீசுக்குப் போகும்போது அம்மாவிடம்கொண்டு விடுவதாக ஏற்பாடு.

சுரேஷுக்கு மத்தியானம் சாப்பாடு கொண்டு போய்க் கொடுத்து விட்டு வர வேண்டும். திரும்பவும் மாலை மூன்றரை மணிக்குப் போய் அழைத்து வரவேண்டும். இந்த இரண்டு நேரங்களிலும் வீட்டையும் பூட்டிக் கொண்டு கைக் குழந்தையையும் கையில் எடுத்துக் கொண்டு போய் வர வேண்டும்.

மங்களம் மூச்சு விட வேண்டுமே! கிடையாது!

● ● ●

அன்று சுபா அலுவலகத்திலிருந்து திரும்பி வந்தபோது வீடு திறந்தே இருந்தது. அதைவிட அதிசயமாய் சமையல் மேடையில் டிபன் காப்பியும் தயாராகஇருந்தன. அசந்து போய் நின்று விட்டாள் அவள்.

''சாயங்காலம் வனஜாவும் மாப்பிள்ளையும் களைச்சுப் போய் வருவாளேன்னு டிபனும் காப்பியும் பண்ணி வச்சுட்டேன். நீ மூணுதோசை எடுத்துக்கோ'' என்றபடியே உள்ளே வந்த மாமியாரைப் பொருள் பொதிந்த புன்னகையுடன் நோக்கினாள் சுபா.

புடவை மாற்றிக் கொள்ள உட் பக்கம் சென்றாள் சுபா.

''ரகுவையும் நானே பார்த்துக் கொள்ள மாட்டேனு என்ன...சம்பாதிக்கிற பெருமை. எங்கேயோ கொண்டு போய் விட்டாகிறது'' என்றாள் அங்கிருந்து நகர்ந்தபடி.

'என் அம்மா உள்ளூரில் இல்லை. அதனால் என் குழந்தை காப்பகத்திலேயே இருக்கட்டும்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் சுபா.



## சிறுநீர்ப் பிரச்னை!

● சிறு குழந்தைகள் படுக்கையில் சிறுநீர் கழிப்பது இயற்கைதான். ஆனால் ஐந்து ஆறு வயதான பின்பும்கூட சில குழந்தைகள் படுக்கையை ஈரமாக்கி விடுகிறார்கள். இத்தகைய பழக்கம் ஏற்பட உடல் நோய்கள் காரணமாகவும்இருக்கலாம். ஆனால் பெரும்பாலும் குழந்தைகளின் உள்ளத்தில் ஏற்படும் பொறாமை, எரிச்சல், இயலாமை ஆகிய மனோதத்துவ காரணங்களாலேயே பெரிய குழந்தைகள் படுக்கையை நனைக்கும் பழக்கமுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

பெற்றோரின் அன்பில் பங்கு போட ஒரு தம்பியோ தங்கையோ பிறந்தால் மூத்தவனுக்குப் பொறாமை உணர்ச்சி ஏற்படுகிறது. முன்போல் தாய் தன்னைக் கவனிக்க மாட்டாள் என்ற எண்ணம் அவனது சிறிய உள்ளத்தில் சலனம் ஏற்படுத்துகிறது. உங்களது கவனத்தைப் பெற நானும் இருக்கிறேன் என்பதைச் சுட்டிக் காட்ட வளர்ந்த அக் குழந்தை பிறந்த குழந்தையின் நிலைக்கு மானசீகமாகச் சென்று படுக்கையை நனைக்கிறது. Refer orginal என்ற இந்தப் பிற்போக்கு நிலையிலிருந்து பிள்ளையைத் திருத்தப் பெற்றோர் அன்பான முறையைக் கையாள வேண்டும்.

மிஸஸ் கிரிஜானந்த்
(நன்றி: சத்துணவு மாத இதழ்)



# நான் சாக விரும்பவில்லை — நடிகை லட்சுமி

சின்ன வயதில் பெற்றோர்கள் பாசமே தெரியாத அளவுக்கு நான் வளர்க்கப்பட்டேன். அதற்குக் காரணம் இரண்டு பேருமே அவரவர்கள் வேலையில் புகழ் பெற்றிருந்தார்கள். எங்கப்பா ஒய்.வி. ராவ் பணக்கார அப்பாக்களைப் போலவே வேலை, கிளப், பெண்கள் என்றிருந்தார். எங்கம்மாவோ நடிகை. சின்ன வயதிலேயே நான் மாற்றாத பள்ளியில்லை. காரணம் கிடையாது. எனக்குப் பிடிக்கலே, அதனாலே அதில் படிக்கவில்லை என்பேன்.

ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும் போது ஒரு நாள் என்னை எங்கம்மா அப்பா பார்க்க வந்திருப்பதாகக் கூப்பிட்டார்கள். நான் அவர்களைப் பார்க்க மறுத்து விட்டேன். அதென்ன அவர்கள் விரும்பும்போது நான் அவர்களைப் பார்ப்பது? எனக்குப் பார்க்கவேண்டும் என்கிறபோது பார்க்கவே முடியவில்லை. இப்படி நான் சொன்னவுடன் எங்கம்மாவுக்கு என்னைப் புரிந்து விட்டது என நினைக்கிறேன். பெற்றோரின் பாசமே இல்லாமல் அவளை வளர்த்து விட்டோம் என்று என் அம்மா ஓரளவுக்குப் புரிந்து கொண்டு விட்டாள். அடுத்த வாரமே நான் அந்தப் பள்ளியிலிருந்து விடுதலை பெற்றேன்.

அந்தக் காலத்திலேயே இதுதான் படிக்க வேண்டும் என்பதில்லாமல் எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசை. அப்பொழுது என்னுடைய விருப்பம் எல்லாம் சட்டம் படிக்க வேண்டும். அரசியல்வாதியும் சட்டம் படித்தவருமான அனந்தநாயகி அவர்களைப் போல் புகழ் பெற வேண்டும் என இப்படி ஒரு ஆசை. ஆனால் வீட்டிலோ 'சட்டம் படிக்கப் போறியா, யாரோடு பல்லுக்கு நிக்கப் போறே? அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். சீக்கிரம் கல்யாணம் பண்ணிடலாம்' என்பார்கள்.

அவர்களைப் பொறுத்தவரை பதினாறு, பதினைந்து வயதுக்குள் ஒரு பெண் வந்துவிட்டால் கல்யாணம் முதலில். பிறகுதான் எல்லாம். ஆனால் நானோ திருமணம் என்றால் அப்பொழுது வெறுத்தேன். நான் மேலே படிக்கப் போகிறேன் என்று அவர்களிடம் சொன்னபொழுது என்னை அடக்குவதற்காகவோ என்னவோ வீணை முத்தையா என்பவரிடம் வீணை கற்றுக் கொடுத்தார்கள்.

எனக்கு இந்த ஜாதகத்தையெல்லாம் கண்டால் வெறுப்பு. எவனோ ஒருத்தன் நாலு ரூபாய் கொடுத்தால் ஜாதகத்தை மாற்றி எழுதிவிடுவான். அவனை நம்பிக்கொண்டு ஜாதகப் பொருத்தம் வேறு பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்தக் காலத்திலே எனக்கு மிகவும் நெருங்கிய நண்பன் என்று கூறவேண்டுமானால் இன்று நடிகனாக இருக்கும் ஒய். ஜி. மகேந்திராவைக் கூறவேண்டும். என் அம்மா

வும் திரு ஒய். ஜி. பி.யும் மிக மிக நெருங்கிய வர்கள். அவர்களின் வீட்டில் ஏதாவது என்ருல் நாங்கள் இல்லாமல் நடக்காது. எங்கள் வீட்டில் ஏதாவது என்ருல் அவர்கள் இல்லாமல் நடக்காது.

அந்த இளம் வயதிலேயே நானும் மகேந்திரனும் நல்ல நண்பர்களாக இருந்தோம். நல்ல படங்கள் பார்க்க வைத்ததே மகேந்திரன்தான் என்று கூறினுல் அது மிகையாகாது. இடீரென்று ஒரு நாள் வருவான். நேராக என்னிடம் வந்து 'இன்றைக்கு ஒரு நல்ல ஆங்கிலப் படம் பார்க்கப் போகிறேன்' என அந்தப் படத்தின் பெயரைச் சொல்வான். நானும் வரேண்டா என்பேன். அது அடல்ஸ் ஒன்லி பிக்சர். சரி போனுப் போறது. எப்படியாவது உள்ளே அழைத்துப் போகிறேன். பணம் மட்டும் எடுத்துக் கொள் எனக் கூறிவிட்டுப் போய்விடுவான்.

இப்படித்தான் பல படங்கள் பார்த்திருக்கிறேன். அவன் கிளாஸ் கட் செய்துவிட்டு இங்கு வருவது தெரிந்தாலேயே இருவரும் படம் போக முடிவு செய்திருக்கிருேம் என அந்த அளவுக்கு மகேந்திரன் உண்மையான, ஆரோக்கியமான நட்புக்கு உற்ற தோழன்.

எனது பள்ளி நாட்களிலேயே நான் நடிக்க ஆரம்பித்து விட்டேன். என்னை முதலில் சீதையாக நடிக்க அழைத்தார்கள். ஓரிரு நாட்களுக்குப் பிறகு சுகந்தி என்ற பெண்ணை அந்தச் சீதை வேடத்திற்குப் போட்டு விட்டு என்னை நாடகத்திலிருந்தே தூக்கிவிட்டார்கள். எனக்கோ வருத்தமான வருத்தம். என்னைவிட அந்தப் பெண் என்ன அதிகமாய் நடித்து விட்







டாள் எனப் பார்ப்பதற்காக அந்த நாடகத்திற்குப் போனேன். ராமர் வில்லை ஒடிக்கும் சமயம் சீதையாக நடிக்கும் அந்தப் பெண் எச்சிலை விழுங்கியவாறே ஆச்சரியகரமான நடிப்பை மிகச் சிறப்பாக அந்த வயதிலேயே செய்து காட்டினாள். அன்றுதான் நான் எச்சிலை விழுங்கி நடிக்கும் நடிப்பையே தெரிந்துகொண்டேன். அதைப்பல படங்களில் செய்தும் பெயர் பெற்றிருக்கிறேன்.

பள்ளியில் பரிசளிப்பு விழா அன்று நெடுஞ்செழியன் வந்திருந்தார். நான் அன்று பேச்சு, பாட்டு என எல்லா போட்டிகளிலும் பங்கு கொண்டு வெற்றி பெற்றிருந்ததால் முதல் இரண்டு முறை மேலே பரிசு வாங்க வந்ததைப் பார்த்து மூன்றாவதுமுறை அழைக்கப்பட்டவுடன் 'நீங்கள் மேடையிலேயே உட்கார்ந்து கொள்ளுங்கள். பரிசுகள் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு செல்லலாம்' என்று கூறினார். அதேபோல் பேச்சினிடையே லக்ஷ்மியுடன் கலைவாணியும் கூடி இருக்கிறாள் என்றார். இன்று பலர் பாராட்டலாம். ஆனால் அன்று நான் ஒன்றுமே இல்லாத நிலையில் அவ்வளவு பெரிய பாராட்டை எனக்கு அவர் கொடுத்தது என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத ஒன்று.

இந்த நிலையில்தான் நான் நாடகங்களில் நடிக்க ஆரம்பித்தேன். முதலில் ஒய். ஜி. பி. நாடகம் சோ நாடகம் என்று பல நாடகங்கள், சோ நாடகத்தில் நூறு நாடகம் 200 நாடகம் என விழா நடத்துவார்கள். அப்படி ஒருமுறை விழா நடக்கும் போது உனக்கு என்ன வேண்டும் எனக் கேட்டார்கள். கோகோ சாக்லட் என்றேன் நான். வேறெதுவுமே வேண்டாமா? இது அவர்களின் கேள்வி. ஆனால் அன்று எனக்குக்கிடைத்தது பன்னிரண்டு பவுன் நகைகள். இச்சமயத்தில் தான் என் சினிமாவுலகப் பிரவேசமாயிற்று.

எனது திரை உலகப் பிரவேசமே மிகவும் நகைச்சுவையானது. நானும், எஸ். வி. சகஸ்ரநாமத்தின் மகள் கௌரியும் நெருங்கிய தோழிகள். நானும் கௌரியும் தினம் மாலை டென்னிஸ் ஆடுவோம். டென்னிஸ் மைதானத்தின் பக்கத்து மாடி வீட்டில்தான் மல்லியம் ராஜகோபால் குடியிருந்தார். என்னைப் பார்த்து அவர் நேராக என்னிடம் வந்து 'நீ யார் பொண்ணு அம்மா?' என்றார். 'நான் என் அம்மா பொண்ணு' எனச் சொல்லிவிட்டுப் போய் விட்டேன். அந்தப்பதில் அவருக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது.

என்னைப்பற்றி மேலும் பல விவரங்களைத் திரட்ட ஆரம்பித்தார். எஸ். வி. எஸ்.ஸிடம் கேட்டிருக்கிறார், அந்தப் பெண் படத்தில் நடிப்பாளா என்று. அவர், ஐயய்யோ அவளிடம் யார் போய்க் கேட்பது? எனக் கூறினார். ஆனாலும் அவர் என்னைப் பற்றிய விவரங்களைக் கேட்டுக்கொண்டு என்னிடம் வந்தார். அப்பொழுது என்ன செய்வது எனத் தெரியாத நிலையிலிருந்தேன். நாடகத்தில் நடிப்பதும் பிடிக்கவில்லை. இந்த நிலையில்தான் எனக்கு சினிமா உலகத்திலிருந்து அழைப்பு வந்தது. முதலில் மாட்டேன் என்றுதான் சொன்னேன். பிறகு ஒய். ஜி. பி. தம்பதியினர் கலந்து பேசியதிலிருந்து திருமதி ஒய். ஜி. பி. கூறினார்.

''நீயாக சினிமாவில் நடிக்கச் செல்லவில்லை. அழைப்புத் தானாக வருகிறது. ஒரு படத்தில் நடி. பிடிக்கவில்லை எனில் விட்டுவிடு.''

எனக்கு அப்பொழுது இருந்த ஒரே ஆசை ஒரு வைர மூக்குத்தி போட்டுக் கொள்ள வேண்டுமென்று.



முதல் நான் படப் பிடிப்பின் போது 'உனக்கு எவ்வளவு பணம் வேண்டும்' என அவர்கள் கேட்ட பொழுது, எனக்கு இரண்டாயிரத்து ஐநூறு ரூபாய் வேண்டும் என கேட்டேன். அவர்களுக்கு ஒரே ஆச்சரியம். அது என்ன சரியாக இரண்டாயிரத்து ஐநூறு எனக் கூறுகிறாய் எனக் கேட்டார்கள். இரண்டாயிரத்து முந்நூறு மூக்குத்திக்கும், இருநூறு கைச்செலவுக்கும் எனக் கூறினேன். அவர்களுக்குச் சிரிப்பை அடக்க மட்டுமே பல நிமிடம் பிடித்தது. நடித்துக் கொண்டே

விருப்பேன். மாலை ஐந்து மணி ஆகி விட்டால் திடீரென்று கிளம்பி விடுவேன். ஏனெனில் நான் பார்க்க வேண்டிய ஆங்கிலப் படம் அன்றுதான் கடைசியாக இருக்கும். அதனால் படம் பார்க்கக் கிளம்பி விடுவேன், நேராக. உடை மாற்ற வீட்டிற்கு வந்தால் ஷூட்டிங் முடிந்து விட்டதா எனக்கேட்பார்கள். ஓ எனச் சொல்லி விடுவேன்.

நான் சினிமாவுக்குச் சென்ற பிறகு ஸ்டுடியோவிலிருந்து போன் வரும், லட்சுமி அங்கு வந்தாளா? இப்பொழுது தானே வந்து விட்டுச் செல்கிறாள். ஷூட்டிங்கே இன்னும் முடியவில்லை. திடீரெனக் காணாமல் போய்விட்டாள்என அங்கலாய்ப்பார்கள்.

ஜெய்சங்கரும், மேஜரும் திரைப்பட உலகத்தில் எனக்கு உற்ற நண்பர்கள். மேஜர் அன்றே நான் ஒரு சிறந்த நடிகை ஆகுவேன் எனக் கூறியவர். எனக்கு ஊர்வசி பட்டம் கிடைத்தவுடன் தமக்குக் கிடைத்தது போல் சந்தோஷப்பட்டவர்களில் ஜெய்சங்கரும் ஒருவர். இதன் காரணமாகவே அவர் ஒரு பெரிய விழாவை ஏற்படுத்திப் பாராட்டியது என்னால் மறக்க முடியாது ஒன்று.

1973ஆம் வருடத்திற்குப் பிறகு திரை உலக வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை ஏற்பட்



பட்டது என்றால் அது மிகையல்ல. ஆம். 'தீக்கற்ற பார்வதி' என் திரைப்பட உலக வாழ்க்கையையே மாற்றியது. அதுவரை பல படங்களில் பல்வேறு விதமான பாத்திரங்களில் வந்து கொண்டிருந்த நான் நல்ல படங்களில் நல்ல வேடங்களை ஏற்று நடிக்கும் நிலைக்கு என்னையே மாற்றிக் கொண்டேன்.

இன்று நினைத்தாலும் எனக்குச் சிரிப்பு வருகிறது. தீக்கற்ற பார்வதி படத்தில் ஒரு காட்சி. என்னை ஒய். ஜி. மகேந்திரன் கற்பழிக்கிறார். இந்தக் காட்சியைப் பற்றி அன்றுவரை எங்களுக்கு விவரம் தெரியாது. டைரக்டர் எங்களுக்குக் காட்சியைப் பற்றிச் சொன்னவுடன் இருவருக்குமே சிரிப்புத் தாங்கவில்லை. காரணம் சிறு வயதிலிருந்தே நாங்கள் இருவரும் நண்பர்களாகப் பழகி விட்டு இப்படி ஒரு காட்சியில் நடிக்க வேண்டுமென்றால் எப்படி?

அந்தக் காட்சி எடுக்கும்பொழுது இருவருமே சிரித்துக் கொண்டுதான் இருந்தோம். மகேந்திரன் பார்க்கும் பார்வையும் சரி, நடக்கும் நடை எல்லாமே என்னைக் கற்பழிக்க வருகிறார் என்ற பயத்தை விட சிரிப்புத்தான் அதிகம் வந்தது. மிகவும் கஷ்டப்பட்டுத்தான் அந்தக் காட்சியில் இருவருமே நடித்தோம். அன்று எந்த நேரத்தில் நான் 'தீக்கற்ற பார்வதி' படத்தை ஒப்புக் கொண்டேனோ அதற்குப் பிறகு எனக்குச் சில நல்ல படங்கள் வர ஆரம்பித்தன. அதில் சொல்லத் தக்க அளவுக்கு ஒரு நிறைவைத் தந்தது 'சில நேரங்களில் சில மனிதர்கள்'தான். இந்தப் படத்தில் படப்பிடிப்பு என்றால் ஒருவித சந்தோஷம் எனக்கிருந்தது. ஏனென்றால் நான் ஒரு வாயாடி. அந்த வாயாடிக்கேற்ற வாய்ச் சொல் வீரர்கள் இந்தப் படத்தில் நடித்தார்கள். அறுவை மன்னன் ஸ்ரீகாந்த், ஒய். ஜி. பி. கேட்க வேண்டுமா? செட் கலகலப்பாக இருக்க. ஆனால் பேச்சுக்கு நடுவே வேலைகளையும் நாங்கள் ஒழுங்காகத்தான் செய்தோம்.

இதே போன்ற என். இதற்குத் தொடர்ச்சி எனக்கூடச் சொல்லலாம். 'நடிகை நாடகம் பார்க்கிறாள்' படம் நல்ல சமயத்தில்தான் வந்தது. சில நேரங்களில் சில மனிதர்களுக்கும், நடிகை நாடகம் பார்க்கிறாள் படத்துக்கும் ஒரே வித்தியாசம் அன்று சில நேரங்களை இயக்கிய மேதை பீம் சிங், அடுத்த படத்திற்கு இல்லை. இயக்குனர் பீம்சிங்கைப் பொறுத்தவரை மென்மையானவர். கோபம் வந்து பார்ப்பது மிக மிக அபூர்வம். காட்சி அமைப்பைச் சொல்லிக் கொடுக்கும்போது இப்படித்தான் நடிக்க வேண்டும் எனச் சொல்லாமல் அதை நடிக்கும் கலைஞர்களிடமே விட்டு விட்டு, தவறிருந்தால் மட்டுமே திருத்தும் பண்புடையவர். தவற்றைக் கூடத் தட்டிக் கொடுத்துத்தான் திருத்துவாரே ஒழிய அதட்டி அல்ல.

நான் டைரக்டரானதற்குக் காரணம் இயக்குனர் சிகரம் பாலசந்தர். அவர்தான் என்னை 'மழலைப் பட்டாளம்' படத்தை இயக்கச் சொன்னவர். நான் டைரக்ட் செய்வேனு, எனக்கு அதற்குத் திறமை இருக்கிறதா? இந்தச் சந்தேகங்கள் எனக்கு இருந்ததே ஒழிய பாலசந்தருக்கு இல்லை. நான் இந்தப் படத்தை டைரக்ட் செய்யப் போகிறேன் எனத் தெரிவித்தவுடன் எப்படி முடியும்? என்றுதான் நான் அவரைக் கேட்டேன். ஏன் முடியாது? இது அவரது பதில். அதுமட்டு மல்லாமல் கலாகேந்திராவைச் சேர்ந்த எல்லாருமே நான் டைரக்ட் செய்வதை ஆமோதித்தார்கள். விரும்பினார்கள். நானும் டைரக்டரானேன்.

கமலஹாஸன் என்னைவிட சீனியர்.. நடிப்பிலோ அல்லது வயதிலோ கூறவில்லை. நான் கூறுவது காதலில். கமலும் வாணியும் காதலிக்கத் தொடங்கி ஒரு வருடத்துக்குப் பின்பே நானும் மோகனும் பழக ஆரம்பித்தோம்.

என்னுடைய கோபதாபங்கள், மனநிலைகள் என என்னைப் பற்றித் துல்லியமாகஆராய்ந்து வைத்திருப்பவர் அவர். எனக்கே என்னைப் புரியவில்லை. அவருக்குப் புரிகிறது. நான் எந்த நிமிஷத்தில் எப்படிப் பேசுவேன் என்பது அவருக்குத் தெரியும். எனக்குத் தெரியாது. திடீரென்று அவரைக் கூப்பிட்டு நாம் சினிமாவுக்குப் போகலாமா என்பேன். ஓ. போகலாமே என்பார். யாரையாவது அனுப்பி டிக்கெட் வாங்கச் சொல்லுங்கள் எனக் கூறிவிட்டு வேறு வேலையைக் கவனிக்கச் செல்வேன்.

மாலை ஆறு மணிக்கு வந்து இன்றைக்குச் சினிமாவுக்குப் போகணுமா, என்ன? நாளை போகலாமே என்பேன் தெரியுமே என்பார். வாங்கியிருக்கும் டிக்கெட்டை இப்போது விற்க வேண்டுமல்லவா என்பேன் நான் வருத்தத்துடன். உன்னைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். அதனால்தான் டிக்கட் வாங்கவில்லை என்பார் அவர். போன் செய்து சொல்லி யிருந்தேன், வந்தால் வருவோம் என்று. அவர் கூறும்பொழுது இப்படிப் பட்டவரை அடைய நானல்லவோ பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்று நினைப்பேன்.

நான் சாக விரும்பவில்லை. அதுவும் இவ்வளவு சீக்கிரத்திலேயே. இன்னும் பல வருடங்கள் ஏன், பல்லாயிரக் கணக்கான வருடங்கள் வாழ்ந்து நிறையப் படிக்க வேண்டும் என்பது விருப்பம். அதற்காகவே வாழணும்.

நாம் மிகவும் நம்புபவள். நம்பிக்கையை நிழலாகக் கொண்டவள்.

நான் படங்களை டைரக்ட் செய்ய விரும்புகிறேன். ஆனால் வேறு மாதிரி. அது எப்படி என்று கேட்காதீர்கள். சொல்வதை விட அதைச் செயலில் காண்பிப்பதைத்தான் நான் அதிகம் விரும்புபவள்.

பேட்டி: சலன்




சட்டப் பகுதி

அஸ்வினி மதுராந்தகம்

**கேள்வி :**

சிறு வயதில் எனக்கு ஏற்பட்ட தீமையான அனுபவங்களின் காரணமாகத் திருமணமே செய்து கொள்ளவில்லை. எனக்கு இப்போது வயது 48. நல்ல வேலையில் கைநிறையச் சம்பாதிக்கிறேன். ஆனால் எனக்கென்று ஆதரவு யாரும் இல்லை. நான் ஏதேனும் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். அதற்கு என்ன செய்யவேண்டும்?

**பதில் :**

தத்து எடுத்துக் கொள்வதற்குப் பல நிபந்தனைகள் உண்டு. ஆனால் அவையெல்லாம் உங்களுக்குத் தேவையில்லாதவை. உங்களுக்கு வேண்டியதை மட்டும் சொல்கிறேன். நீங்கள் தத்து எடுத்துக் கொள்ளப் போகும் குழந்தை 15- வயதிற்குட்பட்டதாக இருக்க வேண்டும்.

பொதுவாக நமது இந்து சமுதாயத்தில் பெண்கள் தத்து எடுத்துக் கொள்ளக் கூடாது என்றிருந்தது. ஆனால் 1956-ம் ஆண்டு இயற்றிய சட்டம் பெண்களுக்கும் அந்த உரிமையை அளித்துள்ளது. அதைப்பயன்படுத்திக் கொண்டு நீங்கள் தத்து எடுத்துக் கொள்ளலாம்.

முன்பெல்லாம் 'தத்தஹோமம்' செய்து தத்து எடுத்துக் கொண்டிருந்தார்கள். கைம் பெண், திருமணமாகாத பெண்கள் போன்றவர்கள் எல்லோரும் கூட தத்து எடுத்துக் கொள்ளலாம் என்று சட்டம் வந்து விட்டது. நீங்கள் தத்து எடுத்துக் கொள்ளப் போகும் பெற்றோரிடம் சம்மதம் பெற்றுப் பதிவாளர் அலுவலகத்தில் உங்கள் தத்தினைப் பதிவு செய்வதன் மூலம், சட்டப்படி குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டவர் ஆகிறீர்கள்.

ஸ்ரீமதி ராகவன் பள்ளிக்கொண்டான்புரம்

**கேள்வி :**

இப்போது தற்கொலைகள் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. அதற்கான தண்டனைகளைப் பற்றி நீண்ட நாட்களாகக் கேட்க வேண்டுமென்று எனக்கு ஆவல். பொதுவாகத் தற்கொலை, தானே செய்து கொள்வதானாலும், குறிப்பிட்ட அந்த நபர் அப்படிச் செய்து கொள்ள ஏதோ ஒரு காரணம் இருக்கவேண்டும் அல்லவா? கணவனாக இருக்கலாம்; மாமியார் கொடுமையோ, வரதட்சிணைக் கொடுமையோ இருக்கலாம். எனவே, மற்றவர்கள் தொல்லை பொறுக்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ளப் போகும் பெண்ணைப் பிடித்து, அவளுக்குத் தண்டனை கொடுப்பது என்ன நியாயம்? சட்டமும் சேர்ந்து அல்லவா அவளுக்குத் தொல்லை கொடுக்கிறது?

**பதில் :**

நீங்கள் சொல்வது சமுதாய நோக்கில் உண்மை தான். ஆனால் சட்டப்படி பார்க்கும்போது 'தற்கொலை முயற்சி' என்பது தண்டிக்கப்பட வேண்டிய ஒன்று. ஒருவர் தன்னுடைய உயிரைப் போக்கிக்கொள்ள அவருக்கு உரிமை கிடையாது.

தற்கொலை செய்து கொண்டுவிட்ட ஒரு ஆணையோ, பெண்ணையோ சட்டத்தால் தண்டிக்க முடியாது. இறந்து விட்ட நபர் மீது வழக்கு எப்படித் தொடர்வது? ஆனால் தற்கொலைக்கு முயன்றவரின் மீது, அரசாங்கம் வழக்குத் தொடரலாம்.

நீங்கள் சொன்னபடி கணவரோ, மாமியாரோ, மற்றவர்களோ துன்புறுத்தினால் அவர்களின் மீது புகார் கொடுக்கலாமே! அதை விட்டுவிட்டுத் தானே தனக்குத் தீர்ப்பு கூறிக் கொள்வது தவறானது தான்.

சுகுமாரி கணேசன் மடிப்பாக்கம்

**கேள்வி :**

எனக்கு வயது 54 ஆகிறது. என் கணவர் ஐந்து வருடங்களுக்கு முன் என்னை நிராதரவாக விட்டுச் சென்று விட்டார். எனக்கு ஒரே மகன். சொந்தத்தில் மருமகளைத் தேடிக் கொண்டும், அவள் மகனையும் அழைத்துக் கொண்டு போய்விட்டாள். என்னால் என்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். எனக்கு யாரேனும் உதவி செய்பவர்கள் இருக்கிறார்களா?

# இதற்கு என்ன செய்வது?

வழக்கறிஞர் T.R. ரமேஷ்

## பதில் :

நீங்கள் யாரிடமும் போய் ஏன் கெஞ்ச வேண்டும்? உங்கள் மகனிடமே உரிமையுடன் நீங்கள் ஜீவனாம்சம் கேட்கலாம். கணவன் மனைவிக்குத் தருவது மட்டும் தான் ஜீவனாம்சம் என்பது இல்லை. ஒருவன் தன்னுடைய மனைவி, குழந்தைகள், பெற்றோர் ஆகியோரை — அவர்களால் அவர்களையே பாதுகாத்துக் கொள்ள முடியாத நிலையில் — காப்பாற்றக் கடமைப் பட்டவன் ஆவான். அவன் தன்னுடைய கடமையிலிருந்து தவறும்போது அவனைத் தாராளமாக நீங்கள் கேட்கலாம்.

உங்கள் வழக்கைக் கிரிமினல் வழக்காகவே நீங்கள் தொடரலாம். ஏனெனில் இப்படி நிராதரவாக இருப்பவர்கள் உடனடியாக நிவாரணம் பெற வேண்டும் என்பதற்காகவே கிரிமினல் வழக்குத் தொடரச் சட்டம் இடம் வகுத்திருக்கிறது. எனவே சட்டத்தின் துணையுடன் உங்கள் மகனிடமிருந்து ஜீவனாம்சம் பெற்று அமைதியாக வாழுங்கள்.



## இவர்கள்

குமாரி சுதா சேஷன். இவர் சென்னை மருத்துவக் கல்லூரியில் நான்காம் வருடம் எம்.பி. பி.எஸ். படிக்கும் மாணவி. இவருக்குக் கட்டுரைகள், கவிதைகள் எழுதுவதிலும் பேச்சுப் போட்டி, மற்றும் பட்டி மன்றங்களில் பங்கேற்பதிலும் பள்ளிக்கூட நாட்களிலிருந்தே மிகுந்த ஆர்வம் உண்டு. இது வரை பல்வேறு போட்டிகளிலும் கலந்து கொண்டு இவர் பெற்றுள்ள பரிசுகள் இருநூறுக்கும் மேல். சென்னை நகரக் கல்லூரிகளில் மட்டுமின்றித் திருச்சி போன்ற நகரக் கல்லூரிகளிலும் நடந்த போட்டிகளில் பரிசு பெற்றுள்ள இவருக்கு இசையில் ஆர்வம் உண்டு. வீணை வாசிக்கவும் தெரியும்.

—கலா மூர்த்தி




### தேவையான பொருட்கள் :

| | | |
|---|---|---|
| பாகற்காய் | — | 3 (மீடியம் அளவில்) |
| வத்தல் மிளகாய் | — | 5 (காரம் கூடுதல் வேண்டும் என்பவர்கள் எண்ணத்தை அதிகரித்துக் கொள்ளலாம்) |
| உளுத்தம் பருப்பு | — | 2 ஸ்பூன் |
| கடலைப் பருப்பு | — | 2 ஸ்பூன் |
| புளி | — | நெல்லிக்காய் அளவு |
| காயம் | — | சிறிய துண்டு |
| உப்பு | — | ருசிக்கு ஏற்ப |

### செய்முறை:

பாகற்காயைச் சிறிய துண்டுகளாக நறுக்கி நன்றாகக் கழுவித் தட்டில் பரப்பி வெயிலில் வைத்துக் காய்ந்த பின் எடுத்துக்கொள்ளவும். வாணலியில் எண்ணெய் வைத்துக் காய்ந்த பின் பாகற்காய்த் துண்டுகளைப் பொரித்து எடுத்துக் கொள்ளவும்.

சிறிதளவு எண்ணெயில் வத்தல் மிளகாய், உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பு, காயம் முதலியவற்றை வறுத்தெடுத்துக்கொள்ளவும். இக்கலவையுடன் உப்பு, பொரித்த பாகற்காய் துண்டுகளையும் சேர்த்து ஆட்டுக் கல்லில் போட்டு நன்றாக இடித்து ஒரு பாத்திரத்தில் வாரி வைத்துக் கொள்ளவும். சாதத்துடன் பிசைந்து சாப்பிடவும், தயிர் சாதத்திற்கு ஊறுகாயாகவும் உபயோகிக்லாம். வெகு நாட்கள் (3 மாதம் வரை) கெடாமல் இருக்கும். உடம்புக்கு மிகவும் நல்லது. முக்கியமாக டயபிடீஸ் முதலான வியாதிகள் உள்ளவர்களுக்குப் பெரிதும் நல்லது. செலவும் குறைவு.

# பரிசு பெறும் சமையல் குறிப்புகள்

## அவல் தயிர் வடை

**தேவையான பொருட்கள் :**

வடைக்கு :
2 கப் சுத்தமான அவல்;
அரை கப் கடலை மாவு;
தேவையான அளவு உப்பு
வடைக்குள் நிரப்புவதற்கு :
1 மேஜைக்கரண்டி கிஸ்மிஸ்;
2 துண்டு தேங்காய் (சுமார் கால் மூடி);
பச்சை கொத்துமல்லி இலை அரை கப்;
1 துண்டு இஞ்சி;
2 பச்சை மிளகாய்;
தேவையான அளவு உப்பு

**செய்முறை :**

நிரப்புவதற்கான பொருள்களை யெல்லாம் ஒன்றாக மை போலக் கெட்டியாக அரைத்துக்கொள்ளவும். அவலை இரண்டு தரம் தண்ணீரில் கழுவிக் கொஞ்சம் தண்ணீரில் ஊறவைக்கவும். அவல் மிருதுவாகி சற்று குழைந்ததும் அதில் கடலை மாவையும் உப்பையும் சேர்த்து வடை மாவு பதத்துக்குப் பிசைந்து கொள்ளவும்.

மாவின் சிறு உருண்டைகளை 'கப்' போல் பண்ணி அதில் அரைத்த சட்னியிலிருந்து ஒரு பாகத்தை வைத்துப் பத்திரமாக மூடி, வடைகளைக் காய்ந்த எண்ணெயில் பொன் நிறமாகப் பொரித்து எடுக்கவும்.

தயிரையும் தண்ணீரையும் சேர்த்து நன்றாகக் கடைந்து கொள்ளவும். இதில் தேவைக்கேற்ற உப்பும் அரைத் தேக்கரண்டி சர்க்கரையும் சேர்த்துக் கலந்து, பின் பொரித்த வடைகளை ஊறவைக்கவும்.

மிளகாய்த் தூள், வறுத்த ஜீரகப் பொடி, இனிப்புக் கலந்த புளிச் சட்னி ஆகிய பொருட்களை வடைகளின் மேல் அழகாகப் பரப்பி அலங்கரிக்கவும். பரிமாறுவதற்கு முன் ஐஸ் பெட்டியில் சற்று நேரம் வைத்தால் இன்னும் சுவையாக இருக்கும்.

— எஸ். ராதிகா

## அவல் பால்போளி!

**தேவையான பொருட்கள் :**

அவல் : அரை கிலோ.
ரவை : ஒரு கப்.
பால் : இரண்டு கப்.
அஸ்கா : ஒரு கப்.
முந்திரிப் பருப்பு : ஆறு.
குங்குமப்பூ : கொஞ்சம்.
நெய் : 200 கிராம்.
சிறிது பொடி உப்பு.

**செய்முறை :**

அவலை முறத்தில் போட்டு, கல் பொறுக்கிப் புடைத்துத் தூசி நீக்கவும். ரவையைச் சலித்து, சிறிது பொடி உப்புக் கூட்டி, இட்டமாய்த் தண்ணீர் தெளித்து, உதிரியாய்ப் பிசைந்து, சுமார் பத்து நிமிஷம் ஊறிய பின்பு நெய்யைத் தடவி இடித்து, அதனுடன் அவலையும், சேர்த்து சிறிது அளவில் உருண்டைகள் செய்து மைதா மாவில் தோய்த்து நிதான கனத்தில் அப்பளங்கள் செய்து ஒன்றோடொன்று ஒட்டாமல், ஓர் அகலமான தாம்பாளம் அல்லது முறத்தில் போட்டு வைக்கவும்.

முந்திரிப் பருப்பை மசிய அரைத்துப் பாலில் கூட்டவும். ஒரு வாணலியில் நெய் விட்டு, நிதானமாக எரியக் கூடிய அடுப்பில் வைத்து, நெய் காய்ந்த பிறகு, அப்பளங்களை ஒவ்வொன்றாய்ப் பொரிக்கவும். ஒரு வெண்கலப் பாத்திரத்தில் பால், அஸ்கா, குங்குமப்பூ மூன்றையும் போட்டு, அடுப்பில் வைத்துச் சற்றுக் கொதித்த பிறகு அப்பளங்களை நனைத்துத் தாம்பாளத்தில் வைக்கவும். பாக்கி உள்ள பாலை அப்பளங்களின் மீது ஊற்றிவிடலாம்! முந்திரிப் பருப்பு தவிர பாதாம் பருப்பும் உபயோகப்படுத்தலாம்!

— பி. விஜயா

முதல் பரிசு

இரண்டாம் பரிசு

## அவல் பிஸிபேளாபாத்

**தேவையான பொருட்கள் :**

பயத்தம் பருப்பு : 250 கிராம்.
அவல் : 500 கிராம்.
வத்தல் மிளகாய் : 12.
தனியா : 6 ஸ்பூன்.
லவங்கப்பட்டை : 2.
வெந்தயம் : அரை ஸ்பூன்.
எண்ணெய் : 100 கிராம்.
நெய் : 6 ஸ்பூன்.
தேங்காய் : அரை மூடி அல்லது கொப்பரைத் தேங்காய் கால் மூடி.
கறிவேப்பிலை, கொத்துமல்லி.
நிலக்கடலை : 50 கிராம்.
பெருங்காயம்.
புளி : எலுமிச்சை அளவு.

**செய்முறை:**

முதலில் தனியா, மிளகாய், வெந்தயம், லவங்கப் பட்டை முதலியவற்றை வறுத்துக் கொள்ளவும். தேங்காய்த் துருவலையும் வறுவலையும் சற்று சிவப்பாக வறுத்துக்கொள்ளவும். (கொப்பரைத் தேங்காயானால் வறுக்க வேண்டாம்.) பயத்தம் பருப்பை வேக வைக்கவும். அதற்குள்ளாகவே வறுத்த மசாலா சாமான்களை நன்றாக இடித்து எடுத்துக் கொண்டு அதே கல்லுரலில் தேங்காய்த் துருவலையும் இடித்து எடுத்து வைத்துக்கொள்ளவும். பிறகு அவலை நன்றாகக் கழுவி விரித்துப் பயற்றம் பருப்புடன் சேர்த்து வேகவிடவும். புளியையும் கரைத்து ஊற்றி மசாலா பொடி, உப்பு, கொத்து மல்லி கருவேப்பிலையையும் சேர்க்கவும். கடைசியில் எண்ணெயில் கடுகு நிலக்கடலை இவற்றைத் தாளித்து நெய்யையும் ஊற்றிக் கிளறி இறக்கவும். சாப்பிடச் சுவையாக இருக்கும்.

— மீரா

**மூன்றாம் பரிசு**

## ஆறுதல் பரிசு
## அவல் வடாம்

**தேவையான பொருட்கள்:**

அவல் 1 லிட்டர்
பூசணித்துண்டு 1 துண்டு
பச்சைமிளகாய் பதினைந்து
பெருங்காயம், உப்பு, தேவையான அளவு தண்ணீர்

**செய்முறை:**

அவலைச் சுத்தம் செய்து தண்ணீரில் முதல் நாளே ஊறவைக்கவும். பூசணியின் தோலை நீக்கித் துருவலாகச் செய்து வைக்கவும். ஆட்டுக் கல்லில் அவல், பச்சை மிளகாய், பெருங்காயம், உப்பு முதலியவற்றைப் போட்டு நீர் விடாமல் கெட்டியாக அரைத்துக் கொள்ளவும். பாதி அரைத்தவுடன் பூசணித் துருவலையும் சேர்த்து அரைத்து எடுக்கவும். (பூசணித் துருவலில் நீர் இருப்பதால் வடித்துப் பிழிந்து போடவும். இல்லாவிட்டால் வடாத்து மாவு நீர்த்துப் போய்விடும்.) பிறகு பிளாஸ்டிக் பேப்பரில் உருட்டி உருட்டி வைக்கவும். ஒரே நாளில் காய்ந்து விடும். (பூசணிக்குப் பதில் வெங்காயம், வாழைத்தண்டு முதலியனவும் சேர்த்து வடாம் செய்யலாம்.)

நன்கு காய்ந்ததும் இரண்டு மூன்று நாட்கள் வெய்யிலில் உலர்த்தி டப்பாக்களில் போட்டு மூடி வைக்கவும். தேவையான போது எண்ணெயை நன்கு காயவைத்துப் பொரித்து எடுக்கவும். (கோடை முடிவதற்குள் தயாரித்துவிடுங்கள்.)

—ஆர். ஜெயலட்சுமி



● வி. மஞ்சுளா ரமேஷ் அவர்கள் எழுதிய ''கைதிகள்'' என்னும் முழு நாவல் என் இதயத்தில் முழு இடத்தையும் பெற்றுவிட்டது. ஆயிரம் குற்றவாளிகள் தண்டிக்கப் படாமல் போகலாம். ஆனல் ஒரு நிரபராதி தண்டிக்கப்பட்டு விடக் கூடாது என்னும் அற்புதமான கருத்தை மையமாக வைத்து, கணவன் ரவிச்சந்திரன் செய்யாத குற்றத் துக்காகத் தண்டனையை அனுபவிக்க விடாமல் மனைவி நிர்மலா, மாஜி காதலன் சிவராமன் மூலம் வழக்கைத் தொடுத்து இறுதியில் அவள் தர்மத்துக்கு வெற்றி கிடைக்கும் வரையில் படும் கஷ்ட நஷ்டங்களையும், இடையிடையே பழைய நினைவுகளையெல்லாம் நிர்மலாவும், சிவராமனும் நினைத்துப் பார்ப்பது போலவும் கதையினை மிகவும் தெளிவாக எழுதியிருக்கிருர். இக்கதைக்கு ஓவியர் இலகம் மாருதி அவர்களின் ஓவியம் வெகு சிறப்பாக அமைந்திருந்தது.

மேஜர் தாசன் ஈரோடு-10

● மின்னி மறைந்த நடிகை ராதாவின் 'நட்சத்திர வாழ்க்கை' படித்ததும் மனத்தில் சோகத்தை உண்டாக்கியது. சுடர் விட்டுப் பிரகாசிக்க வேண்டியவர்கள் வாழ்வே அவதிப் பட்டு மங்கிப் போகிருர்கள். 'ஊனமுற்ருேர் ஆண்டு' இந்த ஆண்டுடன் முடிந்து விடாது. மனசில் ஊனமுள்ளவர்கள் இருக்கும்வரை விடிவு எப்போது ஏற்படும்?

ரோகிணி ஸ்ரீனிவாசன் ஸ்ரீரங்கம்

● வி. மஞ்சுளா ரமேஷ் அவர்களின் 'கைதிகள்' முழு நீளக் கதை ஆழமாகச் சிந்தித்து அறிவுபூர்வமாக எழுதப்பட்ட அருமையான கதை.

கே.ஆர். மனேகர், தஞ்சை

● ''என் கதையால் எனக்கு வந்த பிரச்னே'' யைச் சுவைபடவே கூறியிருக்கிருர் எழுத்தாளர் கே. ஜெயலட்சுமி.

''சித்திரப்பிரியா'', பெங்களூர்-53

● அட.... ஆச்சரியமாக இருக்கிறதே! சுஜாதா எப்போதும் பெண் தொடர்களின் ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவிலும் 'சஸ்பென்ஸ்'ஸோடு தொடரும் போடுபவர், 'எப்போதும் பெண்'ணின் இரண்டாவது அத்தியாயத்தின் கடைசியில் 'வரப்போகிற பிரசவத்தில் அவள் இறந்துவிடப்போவது அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை' என்ற 'சஸ்பென்'ஸை உடைத்து 'சப்பென்ஸ்' என்று ஆக்கி விட்டாரே? இது நியாயமா அவருக்கு?

● சேலத்தில் தற்கொலை செய்து கொண்ட நாடக நடிகையும், துணை சினிமா நடிகையுமான 'ராதா'வைப் பற்றி எந்த பிற தினசரி, வார, மாத இதழ்களிலும் வெளிவராத ருசிகரமான, விளக்கமான, உண்மையான விவரங்களை 'நான் ஒரு பாடம்' என்ற தலைப்பில் பல படங்களுடன் கட்டுரையாகத் தந்ததோடல்லாமல், அவர் ஏன் தற்கொலை செய்து கொண்டார் என்பதையும் கண்டு பிடித்துத் தெரிவித்து விட்டீர்களே?

ஏ. நார்ஜுந்நான், விருத்தாசலம்

● நீங்கள் நம்பினல் நம்புங்கள்... நம்பா விட்டால் போங்கள். நான் கூறுவது முற்றிலும் உண்மை. 'வாசக நண்பர்' என்ற 'லக்ஷ்மி'யின் கட்டுரையைப் படித்து விட்டு, சிறிது நேரம் உணர்ச்சி வசப்பட்டு அழுகையின் ஆரம்ப நிலைக்கு வந்து விட்டேன். ஆம்! 'உலகில் 'மனிதர்க'ளும் இருக்கிருர்கள் என்பதற்கு 'ஒரு சோறு பத'மாக இந்தப் பார்வையற்ற கோவை வாசக நண்பர் உதாரணமாகத் திகழ்ந்து விட்டார். ஆனல் ஒரு குறை. கடைசியாக நேரில் தன்னை அப் பார்வையற்றவர் சந்தித்தபோது, அவர் மிகவும் நொடித்து விட்டதாகக் குறிப்பிட்டிருந்தார் எழுத்தாளர் லக்ஷ்மி. பிரதிபலனை எதிர்பார்க்காது தன்மீது மாசற்ற அன்பு செலுத்திய அவருக்குப் பிரதியுபகாரமாக ஏதேனும் பொருளுதவி செய்து கௌரவித்திருந்தால் நன்ருக இருந்திருக்கும். ஒரு வேளை பொருளுதவி செய்திருந்து கட்டுரையில் குறிப்பிடாமல் விட்டு விட்டாரோ?

எம். ஏ. பேபி, விருத்தாசலம்



கோவிந்த பந்தும் நிருபாயும் தம் பதிகள்! ஏழைகள்! ஒழுக்க சீலர்கள். கடவுள் பக்தி நிரம்பியவர்கள்.

அவர்களுக்குப் பிறந்தவர்தான் வித்தல் பந்த். பெற்றோர்களுக்கு அவன் சளைத்தவனல்ல. ஒழுக்கத்தில் சிறந்து விளங்கினான். கடவுள் மீது அன்பு பூண்டான். சதா காலட்சேபங்களுக்குச் சென்றான். கடவுள் நாமத்தை கேட்டுத் தன்னை அறியாமல் கண்ணீர் உகுத்தான்.

உரிய வயது வந்தபோது பெற்றோர்கள் அவனுக்குத் திருமணம் செய்து வைக்க நினைத்தார்கள்.

திருமணம் என்பது வெறும் பந்தம் என்று கூறி வித்தல் பந்த் அதை வெறுத்தான்.

சீக்கிரத்தில் பெற்றோரிடமிருந்து அனுமதி பெற்று தீர்த்த யாத்திரை புறப்பட்டான்.

பல புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து விட்டு ஆலந்திக்கு வந்தான். (பூனா அருகில் உள்ளது) அங்குள்ள இந்திராயினி நதியில் நீராடிவிட்டு, கரையில் உள்ள அத்தி மரத்தின் அடியில் அமர்ந்து கொண்டான்.

ஆலந்தியில் சித்தோபந்த் குல்கர்னி என்று ஒருவர் இருந்தார். அவர் அந்த அத்தி மரத்தைப் பிரதட்சிணம் செய்யக் காலையில் வந்தார். மரத்தடியில் பந்த் தியானத்தில் மூழ்கியிருப்பதைப் பார்த்ததும் ஆச்சரியப் பட்டார். வித்தலின் முகத்தில் தேஜஸ் ஜொலித்தது.

மரத்தடியில் காத்திருந்து வித்தல் கண்ணை விழித்ததும் அவனைத் தமது வீட்டுக்கு எழுந்தருள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

வித்தலும் இசைந்து குல்கர்னி வீட்டுக்குச் சென்றார். அங்கே இருவரும் கடவுளைப் பற்றிய கீர்த்தனைகள் பாடுவதில் ஈடுபட்டு,

# வித்தல் பந்த்

## ஸ்ரீவேணுகோபாலன்

பின்னர் உணவு அருந்தத் தொடங்கினார்கள்.

சாப்பிட்டுவிட்டு இளைப்பாறும்போது குல்கர்னியின் பெண் குறுக்கே சென்றாள்.

'இவள்தான் என் மகள்' என்று அறிமுகப் படுத்தினார் குல்கர்னி.

அதி அற்புதமான அழகோடு அந்தப்பெண் மறு அறைக்குள் மறைந்து விட்டாள்.

இரவில் குல்கர்னிக்கு ஒரு கனவு ஏற்பட்டது.

பாண்டுரங்கர் தோன்றி, ''உன் பெண்ணை வித்தலுக்குத் திருமணம் செய்து கொடு. அவர்களுக்குத் தெய்வாம்சமாக நான்கு குழந்தைகள் பிறக்கும்'' என்று கூறினார்.

விடிந்து எழுந்ததும் குல்கர்னி இதை வித்தலிடம் விண்ணப்பிக்க, வித்தலர், 'என் மனம் இல்லறத்தை நாடவில்லை' என்று கூறினார்.

ஆனால் அன்று இரவு அவர் கனவிலும் பாண்டுரங்கன் தோன்றி 'அந்தப் பெண்ணை ஏற்றுக்கொள்' என்று கட்டளை இட,

மறுநாள் எழுந்த வித்தல் பந்த் என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தார்.

அங்கு கூடியிருந்தவர்கள் வற்புறுத்தவே வித்தல் அந்த குல்கர்னியின் மகளான ருக்மாபாயைத் திருமணம் செய்து கொண்டார்.

வித்தல் தம்பதிகள் உடனே பண்டரிபுரம் போய்விட்டு ஊருக்குத் திரும்பினார்கள்.

வருஷங்கள் சென்றன.

வித்தலருக்குக் குழந்தைகளே பிறக்கவில்லை.



'பாண்டுரங்கன் எனக்குத் தெய்வ அம்சங்களாக நான்கு குழந்தைகள் பிறக்கும் என்றாரே, யாரும் பிறக்கவில்லையே'! என்று சோகத்தோடு எண்ணினார்.

இல்லற வாழ்க்கையில் மேலும் இருக்கப் பிடிக்காமல், வித்தல் தமது இல்லறத்தைத் துறக்க விரும்பினார்.

ஒரு நாள் வீட்டை விட்டு நேராக காசிக்குச் சென்றார்.

அங்கே ராமானந்த சுவாமி என்பாரின் காலில் விழுந்து, ''சுவாமி! அடியேனுக்கு சந்நியாசம் தந்தருள வேண்டும்'' என்று வேண்டினார்.

அவர் வெகுவாக வேண்ட, ராமானந்தர் அவரைப் பார்த்து, ''முறையாகத் திருமணம் செய்து கொண்டு குழந்தைகள் பெற்றாயா? அப்போது நான் சந்நியாசம் தர முடியும்'' என்றார்.



வித்தல் பந்துக்குத் திருமணம் ஆகிவிட்டதே தவிர குழந்தைகள் பிறக்கவில்லை.

ஆனால் 'குழந்தைகள் பிறக்கவில்லை' என்று சொன்னால் எங்கே ராமாநந்தர் சந்நியாசம் தராமல் போய்விடுவாரோ என்று பயந்து, ''சுவாமி, திருமணம் ஆகி எனக்குக் குழந்தைகளும் பிறந்து விட்டன.'' என்று பொய் சொன்னார்.

''ஆனால் உமக்கு சந்நியாசம் தருவோம்'' என்று அவரைச் சந்நியாசியாக்கினார் ரமாநந்தர். அவருக்கு 'சைதன்யாச்ரம சுவாமி' என்று தீட்சை நாமத்தையும் கொடுத்தார்.

சிறிது காலம் சென்றவாறே, சுவாமி ரமாநந்தர் தமது ஆச்ரமப் பொறுப்பை சைதன்யாச்ரம சுவாமியிடம் ஒப்படைத்து விட்டுத் தீர்த்த யாத்திரை புறப்பட்டார்.

பல புண்ணியத் தலங்களைத் தரிசித்து விட்டு ஆலந்திக்கு வந்து சேர்ந்தார்.

அங்கே அந்த இந்திரயாணி ஆற்றின் கரையில் உள்ள அத்தி மரத்தடியில் அவர் உட்கார்ந்திருக்கும்போது, வித்தல் பந்தின் மனைவி ருகுமாபாய் அந்த மரத்தைப் பிரதட்சிணம் செய்வதற்கு வந்தாள்.

ஏதோ ஒரு சுவாமி அமர்ந்திருப்பதைப் பார்த்த ருகுமா பாய் அவர் பாதங்களில் விழ்ந்து வணங்கினாள்.

சுவாமியும் அவளை ஆசீர்வதித்து, ''உனக்கு நான்கு குழந்தைகள் பிறக்கும். எல்லோரும் கீர்த்தி பெறுவார்கள்'' என்று அனுக்கிரகம் செய்தார்.

அதைக் கேட்ட ருகுமா பாய் நகைத்து, ''சுவாமி! எனக்குச் சந்தானப் பேறு இந்த ஜன்மத்தில் கிடையாது'' என்றாள்.

''ஏனம்மா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார் ரமானந்த சுவாமி.

''என் கணவர் வடக்கே காசிக்குப் போய் சந்நியாச ஆசிரமம் வாங்கி விட்டார்'' என்று கூறிய அவள் மேலும் கோபம் கொண்டு,

''சுவாமி, இல்லறம் நடத்திக் குழந்தை பெறாதவர்கள் சந்நியாசியாகக் கூடாது என்று விதி அல்லவோ? அது தெரியாமல் எந்த மகானுபவார் அவருக்கு சந்நியாசம் கொடுத்தாரோ தெரியவில்லை'' என்று கூறினாள்.

''அப்படியா?'' என்று கேட்ட சுவாமி, ''உன் கணவர் பேர் என்னம்மா?'' என்று ஆவலுடன் வினவினார்.

''வித்தல் பந்த்'' என்றாள் ருகுமா பாய்.

அவள் அப்படிச் சொன்னவுடன் சுவாமிக்குத் தாம் செய்த தவறு தெரிந்துவிட்டது.

''நல்லது. நன்மையே நடக்கும்'' என்று சொல்லிவிட்டு, ரமானந்த சுவாமி சீக்கிரம் காசிக்குத் திரும்பினார்.

ஆசிரமம் போனவுடன் சைதன்யாசிரம சுவாமியை வரவழைத்து, ''நீ செய்தது இப்படித்தானா?'' என்று கேட்க,

அவரும் தலை குனிந்து அவர் பாதங்களில் விழ்ந்து தமது குற்றத்தை ஒப்புக்கொண்டார்.

''அப்படியானால் நீ உடனே இல்லறம் பூண்டு உன் வீட்டுக்கு உடனே போக வேண்டும். குழந்தைகள் பிறந்த பிறகுதான் நீ சந்நியாசி ஆகலாம்'' என்று அவரை வீட்டை நோக்கி அனுப்பி வைத்தார் ரமாநந்தர்.

சைதன்யாச்ரம சுவாமி பழைய வித்தல் பந்தாகத் தமது ஊர் திரும்பினர்.

மனைவி ரகுமா பாய் அவரை மிக மகிழ்ச்சியுடன் வரவேற்றாள்.

ஆனால் ஊர் ஜனங்கள் ஒரு சந்நியாசி மீண்டும் இல்லறத்தானாக மாறியதை ஏற்றுக்கொள்ளவில்லை. அது பாபம் என்று கருதினார்கள்.

அதனால் அவரை ஜாதியை விட்டுத் தள்ளி வைத்தார்கள்.

இதற்கிடையில் ரகுமா பாயின் தந்தை சித்தோபந்த குல்கர்னி இறக்க,

குடும்பம் மிகவும் கஷ்ட தசையை நோக்கிச் செல்லலாயிற்று.

அன்றாட உணவுக்குப் பஞ்சம் ஏற்பட்டது.

ஊரில் வாழ வழியில்லை என்று அறிந்த வித்தல் தமது மனைவியுடன் பக்கத்திலிருந்த காட்டுக்குள் சென்று குடிசை போட்டு வாழ ஆரம்பித்தார். ஊரில் பிச்சை எடுத்து வாழத் தொடங்கினர்.

சோதனையாக அதே நேரத்தில் அவருக்கு அடுத்தடுத்து நான்கு குழந்தைகள் பிறந்தன.

மூன்று ஆண்கள் ஒரு பெண்.

முறையே அவர்களுக்கு நிவிருத்தி, ஞானேச்வர், சோபான, முக்தா பாய் என்று பெயர்கள் வைத்தார்.

---

ரவா கேசரி போன்ற இனிப்புப் பண்டங்கள் தயாரிக்கும்போது கலருக்காகக் கேசரி பவுடரைக் கலக்குகிறோம். அதற்குப் பதில் மஞ்சள் நிறத்திலுள்ள சாதாரண வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ் வில்லைகளில் ஒன்றோ இரண்டோ கலந்து விட்டால் நிறமும் கிடைக்கும். உடம்புக்கும் நல்லது.

- ப்ரியா பாலு



குடும்பத்தின் கஷ்டங்கள் இதனால் மேலும் அதிகமாயின. போதுமான உணவு கிடைக்கவில்லை. ஊர் ஜனங்கள் அந்த ஒன்றுமறியாக் குழந்தைகளைத் துன்புறுத்தினார்கள். 'சந்நியாசிப் பிள்ளைகள்' என்று கேலி செய்தார்கள்.

இதையெல்லாம் அறிந்த வித்தல் பந்த் மௌனமாகப் பொறுமையைக் கடைப்பிடித்தார்.

ஒரு நாள் த்ரயம்பகேச்வரர் ஆலயத்தில் தேர்த் திருவிழாவுக்குப் போய்விட்டு வித்தல் பந்த தம் குடும்பத்துடன் திரும்பிக்கொண்டிருந்தார்.

காட்டில் வரும்போது புலி ஒன்றின் உறுமல் கேட்கவே பெற்றோர்களும் குழந்தைகளும் சிதறிப் போனார்கள்.

வெகு நேரம் கழிந்த பிறகு அபாயம் நீங்கி ஒவ்வொருவராக ஒன்று சேர, நிவிருத்தி என்ற மூத்த மகன் மட்டும் காணாமல் போய்விட்டான்.

அவனுக்காக மிகவும் விசனப்பட்டு வித்தல் பந்த் தமது மற்றைய குழந்தைகளோடு தமது இருப்பிடத்துக்குத் திரும்பினர்.

அங்கே சிறிது காலம் சென்றுவிட, ஒரு நாள் நிவிருத்தி துறவுக் கோலத்துடன் வீடு வந்து சேர்ந்தான்.

ஆச்சரியப்பட்ட வித்தல் அவனை விசாரிக்க,

நிவிருத்தி காட்டில் புலி வந்த அன்று பயந்துபோய் ஒரு குகைக்குள் ஓடி ஒளிந்ததாகவும்,

அங்கே தவம் செய்து கொண்டிருந்த கஹிநாத் என்ற சுவாமிகளிடம் சரண் அடைந்ததாகவும்,

அவர் அவனைத் துறவில் ஈடுபட வைத்ததாகவும் கூறினர்.

நிவிருத்தி என்று 'நாத்' என்று துறவிக் குழுவில் சேர்ந்த அந்த மூத்த மகன், பின்னர் தன் தம்பி ஞானேச்வருக்குத் துறவிக் கோலம் கொடுத்தான்.

ஞானேச்வர் தமது தம்பி சோபனனையும் சகோதரி முக்தா பாயையும் துறவில் ஈடுபடுத்தினர்.

இந்த நால்வரும் பின்னர் தமது திங்குரல் பாடல்களால் மராட்டிய தேசம் முழுவதையும் உன்மத்தம் ஆக்கினார்கள்.

பண்டிதர்கள் அவர்களை 'சந்நியாசி பெற்ற பிள்ளைகள்' என்று கேலி செய்தாலும் அவர்கள் தங்கள் பக்திப் பெருக்கான பாடல்களால் நிறைய ஜனங்களைத் தங்கள்பால் ஈர்த்துக் கொண்டார்கள்.

ஆனால் தம் குழந்தைகள் கீர்த்தி அடைவதைப் பார்ப்பதற்கு வித்தல் பந்தும், ரகுமா பாயும் உயிரோடு இல்லை.

தங்கள் குடும்பத்தின் மீது ஏற்பட்ட அபகீர்த்தியில் அவர்கள் மிகவும் சோகப்பட்டு ஒரு நதியில் பாய்ந்து மூழ்கித் தங்களை மாய்த்துக் கொண்டார்கள்.

அவர்கள் வாழ்ந்த காலம் 13ஆம் நூற்றுண்டு.

ரத்னா நரஸிம்மய்யா

# காகிதப் பூக்கள்



தேவையான பொருட்கள்:

1. இரேப் பேப்பர். இது பல வர்ணங்களில் கிடைக்கும்.

2. எந்தப் பூவைச் செய்ய விரும்புகிறோமோ, அதைப் பற்றி நன்கு தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். அது என்ன நிறம், எத்தனை இதழ்கள், அதன் அளவு ஆகியவை.

3. ஒட்டுவதற்குப் பசை.

4. கத்தரிக்கோல்.

5. 24 கேஜ், 22 கேஜ், 20 கேஜ் ஆக மூன்று வகைக் கம்பிகள் (Calvanised wire) பூக்களைக் கட்ட நூல் கண்டு (Coats thread)

6. பூக்களின் இலைகளுக்கு என்ன பச்சை நிறம் வேண்டுமோ அந்த நிற இரேப் பேப்பர்.

7. பூக்களைச் செய்த பிறகு வைக்கப் பூச்சாடி.

செய் முறை:

எந்த நிறத்தில் பூக்களைச் செய்ய விரும்புகிறோமோ அந்த நிறத்தில் கேம்ப்ரிக் துணி 2–1—அல்லது 2–2 என்ற அளவில் எடுத்துக் கொள்ள வேண்டும். இதைக் கெட்டியான கஞ்சியில் நனைத்து, காயவைத்து, முறமுறப்பான அந்தத் துணியை இஸ்திரி போட வேண்டும்.

இந்தத் துணியை அரை அங்குல அகலத்துடன் நீளமாக வெட்டிக் கொள்ள வேண்டும்.

(படம் 1) முதலில் இரேப் பேப்பரை 10 செமீ அகலம், 11 செ.மீ. நீளத்துக்கு எடுத்துக்கொள்ள வேண்டும். பிறகு மேல் பகுதியில் படத்தில் காட்டியுள்ளது போல வளைவு வளைவாக வெட்டிக் கொள்ள வேண்டும். நீண்ட கோடுகளாகக் காட்டியுள்ள பகுதியையும் வெட்ட வேண்டும்.

இது மலரின் இதழ்களுக்கான பகுதி.

மலரின் உள்ளே இருக்கும் மகரந்தம் போலச் செய்ய (படம் 2ல்) உள்ளது போல 10 செ.மீ. அகலம், 2 செ.மீ. உயரமும் உடைய மஞ்சள் வர்ணக் இரேப் காகிதத்தை எடுத்துக் கொண்டு, மேல் பகுதியைப் படத்தில் காட்டியுள்ளது போல வெட்டிக்கொள்ள வேண்டும்.

(படம் 3) இலைகளுக்கான அமைப்பு.

(படம் 4) 24 கேஜ் கம்பியை, மகரந்தத்திற்காக வெட்டி வைத்த காகிதத்தின் ஆரம்பத்தில் ஒட்டிவிட வேண்டும். கம்பியின் மேற் பகுதியை வளைத்து மாட்டிவிட்டால் நழுவாமல் இருக்கும். பின்னர் "கம்பியைச் சுருட்டிக் கொண்டே வந்தால் (படம் 5ல்) காட்டியுள்ளது போல் மகரந்தம் கிடைக்கும்.

இதனை 30 கேஜ் கம்பியால் சுற்றி இறுகக் கட்டி விடுக. பின்னர் கஞ்சி போட்டு வைத்திருக்கும் துணியை பசையின் உதவியால் சுருக்கம் இல்லாமல் கம்பி தெரியாமல் சுற்றி ஒட்டிக் கொள்ள வேண்டும். இப்போது பூவின் உட்புறம் இருக்கும் மகரந்தம் தயார்.

(படம் 6) முதல் படத்தில் செய்த இதழ்களை இப்படத்தில் காட்டியுள்ளது போல்




படம் ①




படம் ②


3
1.5CM
6CM
2CM


4
பசை


5
டேப்


6


7


8
டேப்


9
பசை
24 கேஜ் கம்பி


10

மடக்கிக் கொள்ள வேண்டும். பின்னர் அதனை அடிப்புறப் பகுதியை புடவைக்குக் கொசுவம் வைப்பது போல் மடிப்பு மடிப்பாகச் செய்து மகரந்தத்தைச் சுற்றி மெதுவாக அமைத்துக் கம்பியால் இறுக்கிப் பின்னர் துணியால் ஒட்டிவிட வேண்டும்.

(படம் 9) மூன்றும் படத்திலுள்ளது போல் வெட்டினால் இதுபோன்ற அமைப்பு கிடைக்கும். இதன் நடுவிலே கம்பியை வைத்துப் பசையைத் தடவிச் சுருட்டினால் (படம் 10ல்) உள்ளது போன்ற இலை அமைப்புக் கிடைக்கும். இதைப் பூவின் அடியில் வைத்துத் துணி நாடாவினால் கம்பியை மறைத்து ஒட்டிவிட வேண்டும்.

(படம் 12) முழுமை பெற்ற அழகு மலராகும்.

இதை அவரவர் கற்பனைக்குத் தகுந்தாற் போல வெவ்வேறு வித மலராகவும் அமைக்கலாம். இதே போலத் துணி நாடாவுக்குப் பதில் 'சேடின்' ஆக வாங்கினால் அதை ஒட்டிப் 'பார்ப்பதற்கு இன்னும் அழகாக இருக்கும்.'



# சங்கமித்திரை

சசி

அசோகர்மகள் சங்கமித்திரை சிந்தனையே உருவாக அமர்ந்திருந்தாள். அவள் எதிரே வந்தான் தேவதத்தன்.

''சங்கமித்திரை! நான் வந்ததுகூட தெரியாமல் என்ன யோசனை? எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போகிறாய்?''

''எல்லாம் உங்கள் மனக் கோட்டையைப் பிடிக்கத்தான்.''

''ஏற்கனவே பிடித்து விட்டாயே, பிறகு என்னஇருக்கிறது...ஒரு சந்தோஷச்செய்தி.''

''சொல்லுங்கள்.''

''பெரும் போர் நிகழப் போகிறது...''

''போர் என்றாலே போதுமே! பெரும் போர் என்று ஏன் சொல்லுகிறீர்கள்?''

''நான் கலந்து கொள்ளப்போகும் முதல் போர் இது சங்கமித்திரை. என் ஆற்றலைக்காட்டச் சரியான சந்தர்ப்பம்; போரில் நிச்சயம் வெற்றி பெறுவேன். ஆம், தளபதி சதுர்கருடன் நான்தான் போகப் போகிறேன் உதவி தளபதியாக! பெற்ற வெற்றிக்குச் சன்மானமாக....''

''சன்மானமாக....!''

''உன்னை எனக்கு மணம் செய்து கொடுக்கும்படி கேட்கப் போகிறேன். அதற்காகவே இப்போரை நான் மிகவும் வரவேற்கிறேன்.''

''ஆமாம்! எதற்காக இந்தப் போர்?''

''அரசை விஸ்தரிக்க...''

''இருக்கும் அரசு போதாதா! இன்னும் ஏன் விஸ்தரிக்க வேண்டும்?''

''அதை உன் தந்தையிடம்தான் கேட்க வேண்டும்!''

''நானே பதில் சொல்லுகிறேன்'' என்றார் மாமன்னர். மாமன்னரைக் கண்ட மகள்



எழுந்து நின்றாள். தேவதத்தன் மெதுவாக நழுவப் பார்த்தான்.

''நில் தேவதத்தா! சங்கமித்திரை, எதற்காகப்போர்என்றாயே... கேள். போரில்லாமல் எந்த அரசும் நிலைத்து நிற்காது! மிகப்பெரிய அரசை நிறுவவேண்டும்! என் நெடுநாளைய ஆசை! பாரதகண்டம் முழுவதும் என் ஆட்சிக்கு உட்பட வேண்டும்! நமது அரசின் புகழ் எங்கும் பரவ வேண்டும். பல அரசுகள் துண்டு துண்டாக இருந்தால் குழப்பம் தான் ஏற்படும்! அதனால்தான் இந்தப் போரை நான் அவசியமாகக் கருதுகிறேன்!'' என்றார் அசோகர்.

''தந்தையே!'' என்றாள் சங்கமித்திரை.

''போர் மூலம்தான் நமது புகழ் பரவவேண்டுமா? வேறு மார்க்கமே இல்லையா?''

''இருக்க முடியாது என்னைப் பொறுத்த வரையில்!''

''இருக்கிறது தந்தையே! அதுதான் அன்பு. அந்த அன்புதான் புத்தர் போதித்த வழி! அந்த



வழியைப் பின்பற்றினால் புகழ் என்றும் நிற்கும்!''

''சங்கமித்திரை! புத்த பிக்ஷுவா நான்! நான் மாமன்னன். மிகப் பெரிய அரசின் அதிபதி. எனக்குத் தெரிந்தது போர் ஒன்று தான்!''

''போரின் விளைவுகள் தெரியுமா?''

''தெரியும்.....''

''என்ன தெரியும்! வெற்றி தோல்விகள் தான் தெரியும். ஆனால் அதன் விளைவுகள் தெரியுமா! சிறிய நாடான கலிங்கத்தின் மீது பரந்த அரசின் நால்வகைப் படைகள் மோதப் போகிறது! ஆனால் அதனால் ஏற்படும் சேதம் இரு திறத்திலும் உண்டு அல்லவா?''

''சங்கமித்திரை! சேதத்தையும் விளைவுகளையும் எண்ணிப் பார்க்கும் நிலையில் நான் இல்லை! எனக்கு வேண்டியது ஒரு மாபெரும் அரசு. தேவதத்தா! நீ உடனே கிளம்புகிறாய்! தளபதி சதுர்க்கருடன் சேர்ந்து கொண்டு படையெடுப்பிற்கு ஆகவேண்டிய செயல்களை செய்கிறாய். சங்கமித்திரை! வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதே! நம் வரையில் இந்த புத்த உபதேசங்கள் தேவையில்லை. பரந்த அரசின் அதிபதி அசோகனுடைய மகள் நீ! அதை நினைவில் வைத்துக் கொள்! வெற்றியுடன் திரும்பி வர வாழ்த்தி அனுப்பு!''

சென்றார் மாமன்னர் அசோகர். தேவதத்தனும் உடன் கிளம்பினான். போகும் போது திரும்பிப் பார்த்தான். சங்கமித்திரையும் அவன் போகும் திசையையே பார்த்தாள். ஏன் அவள் மனம் கலங்குகிறது? இதுதான் கடைசி சந்திப்பா, இருக்காது. இருக்கவும் கூடாது! மாவீரன் தேவதத்தன்! ஒரு பெரும் யானையையே அடக்கியவன் அவன்! தன் மனத்தைக் கொள்ளைகொண்டவன், நிச்சயம் திரும்பி வருவான்!

அவள் அவனைச் சந்தித்ததே சுவையான நிகழ்ச்சி.

மௌரிய அரசின் தலைநகர் வீதியிலே வந்து கொண்டிருந்தான் தேவதத்தன். சிந்தனையுடன் வந்த அவன், எதைப்பற்றியும் நினைக்காமல் தன் வருங்காலத்தை நினைந்தே வந்து கொண்டிருந்தான்.

அமைச்சர் சொன்னவை அவன் கண்முன் நின்றன.

''வாலிபனே! அரண்மனைச் சேவகம் என்பது நான் உடனடியாகச்செய்யும் செயலல்ல! மன்னர் யாரையும் தேர்வு இல்லாமல், சேவகம் செய்ய அனுமதிப்பது இல்லை! நாளைவந்து பார். அதற்குள்மன்னரிடம்சொல்லுகிறேன்.''

அவன் மனம் குழம்பியது. 'தேர்வா, என்ன தேர்வு. நாளை என்ன நடக்கும்.' அவன் மனம் தத்தளித்தது.

சலசலப்பு... சிந்தனையுடன் நிமிர்ந்தான். அவன் எதிரே வேலைப்பாடுகள் அடங்கிய பல்லக்கு ஒன்று வந்து கொண்டிருந்தது. அதன் முன்னும் பின்னும் பல வீரர்கள் சென்றார்கள்! ஓரமாக ஒதுங்கி நின்றான் தேவதத்தன். பல்லக்கு அவனைத் தாண்டும் பொழுது, காற்றின் விளைவால் திரை சற்று அசைந்தது. உள்ளிருந்த உருவமும் தெரிந்தது. அங்கு அழகிய இரு விழிகளைச்சந்தித்தான் அவன். மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. அவனுடைய வாலிப உள்ளத்தில் அந்த அழகிய விழிகள் அலை மோதத் தொடங்கின!

திடீரென்று ஒரு குரல். ''பட்டத்து யானைக்கு மதம்பிடித்து விட்டது!ஓடுங்கள்!''

அவ்வளவுதான். பலர் ஓட ஆரம்பித்தார்கள். பல்லக்குத் தூக்கிகள் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். அதன் அருகில் இருந்தவர்களும் வெகு வேகமாக ஓடத் தொடங்கினர். தெருவெங்கும் கலவரம்!

தேவதத்தன் சுற்றும் முற்றும் பார்த்தான். இத்தனைக்கும் காரண கர்த்தாவான அந்த யானை பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு, தன் பிரும்மாண்டமான சரீரத்துடன் தும்பிக்கையைத் தூக்கிக்கொண்டு ஓடிவந்தது. பின்னால் ஓடி வந்த மாவுத்தனைக் கண்டது. அவன் அங்குசத்தைக் கையில் கொண்டு வந்தான். அவ்வளவுதான், அடுத்த கணம் மாவுத்தன் ஒரு அலறலுடன் கீழே விழுந்தான். அவனைத் துதிக்கையால் சுழற்றி கீழே தள்ளியது யானை. பல்லக்குத் தூக்கிகள் பல்லக்கை ஒரு ஓரமாக வைத்து விட்டு ஓடி ஒளிந்தார்கள். பின்னால் வந்த வீரர்களின் குதிரைகளோ யானையின் பிளிறலை கேட்டது, மிரண்டுஓடியது. அதனால் பலர் குதிரையிலிருந்து கீழே விழுந்தனர். அவர்களை நோக்கியவாறு ஓடி வந்தது யானை. பல்லக்கு இருந்த பக்கம் திரும்பியது. பல்லக்கில் இருந்த அழகியின் முகம் பயத்தால் வெளிறியது. அவளுடைய உதவிக்கு யாருமே வர முடியாத நிலையில் யானை பல்லக்கை

## யோசனை

கோதுமையை மிஷினில் அரைப்பதற்கு முன் சுமார் ஐந்திலிருந்து எட்டு நிமிடங்கள் கொதிக்கும் தண்ணீரை ஊற்றி வைத்துப் பின் வெய்யிலில் உலர்த்தி, புடைத்து அரைத்தால் சிற்றுண்டிகள் மிருதுவாய் சுவையாய் இருக்கும்.

- விசாலாட்சி பத்மநாபன்

நோக்கி நிலம் அதிர ஓடியது. பல்லக்கை விட்டு வெளியே வந்த அழகியைக் கண்டது யானை.

கத்த நினைத்தாள் அவள். அவள் அழகிய உடல் நடுங்கியது! குரல் எழும்பவில்லை. முடிந்தது தன் வாழ்வு என்று நினைத்தாள். ஆனால் அடுத்த கணம் ஆச்சரியத்தினாலும், அச்சத்தினாலும் வியப்பின் எல்லையை அடைந்தாள். அவள் கண்டது என்ன? ஆமாம்! தேவதத்தன் தன் உயிரையும் லட்சியம் செய்யாமல், கீழே விழுந்து கிடந்த அங்குசத்தைக் கையில் பிடித்தவாறு யானையின் முன் நின்றான்.

தன் சிறிய கண்களால், தைரியத்துடன் தன் முன் வரும் தேவதத்தனைப் பார்த்தது யானை! சிவந்த அதன் விழிகள் பயங்கரத்தை உண்டு பண்ணின. ஆனால், அவன் நின்ற தோரணையோ தனக்குச் சமானமான ஒரு எதிரியின் முன் நிற்கும் மாவீரனைப் போல் தோற்றமளித்தான் அந்த அழகியின் கண்களுக்கு. எதைப் பற்றியும் கவலைப்படாமல், மற்றவர்களின் மனத்தில் தன்னைப்பற்றிய எண்ணம், எங்கு எப்படிச் செல்கிறது என்பதை உணராமலும், தன் கடமையைச் செய்யும் ஒரு சுத்த வீரனைப் போல் நின்றான் தேவதத்தன்.

யானையின் பலம் அறியாது, தற்கொலைக்குச் சமமான இச் செயலைக் கண்ட அழகியின் மனம், அந்த ஆணழகனின் கோர முடிவைக் காணச் சகிக்காது கண்களை மூடிக் கொண்டாள் ஒரு கணம். பயங்கரமான பிளிறல் ஒலி! முடிந்தது அவன் வாழ்வு என்று நினைத்தாள். ஆனால் சுற்றிலும் கேட்ட சலசலப்புச் சத்தம் அவள் கண்களைத் திறக்கச் செய்தது. அவள் கண்டது என்ன?

தேவதத்தன் யானையின் மத்தகஜத்தில் உட்கார்ந்திருந்தான். தன் கையிலிருந்த அங்குசத்தால் மத்தகஜத்தைக் குத்தினான். எல்லையற்ற அவன் துணிவு சுற்றி நின்றவர்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. வலி தாங்காமல் பிளிறியது யானை. துதிக்கையைச் சுழற்றியது தேவதத்தனைப் பிடிக்க. முடியவில்லை. லாவகமாகக் குனிந்து தப்பித்துக் கொண்டு, பலம் கொண்டவரைக் குத்தினான். யானையின் அசுர பலம் குன்றத் தொடங்கியது. வலி பொறுக்க முடியவில்லை. மெதுவாகக் கீழே உட்கார ஆரம்பித்தது. அதன் மதமும் குறையத் தொடங்கியது. முடிவில் சாந்தமாகிக் கீழே உட்கார்ந்தது. குதித்தான் தேவதத்தன். அதைக் கண்ட அந்த அழகி மூர்ச்சையாகிக் கீழே சாய்ந்தாள். அதனைக் கண்ட தேவதத்தன் யாரும் நெருங்கு முன் ஓடிச் சென்று அவளைத் தூக்கினான்.

''இளைஞனே!'' என்ற குரல் அவனைத் திரும்ப செய்தது. மாமன்னர் அசோகர் நின்று கொண்டிருந்தார்.

''உன்னுடைய வீரத்தைக் கண்டு வியப்படைகிறேன். யாரோ ஓர் இளைஞன் நம் சேனையில் சேரும் பொருட்டு வந்திருக்கிறான் என்று அமைச்சர் சொன்னார். தேர்வு வைக்காமல் யாரையும் நம் சேவைக்கு எடுத்துக் கொள்வதில்லை. நான் வைக்க இருக்கும் தேர்வைவிடப் பயங்கரமான தேர்வில் நீ தேறிவிட்டாய்.. உன் பெயர்?''

''தேவதத்தன்!''

''அருமையான பெயர். தேவதத்தா.. யானையின் மதத்தை அடக்கி என் மகள் சங்கமித்திரையை மட்டு மின்றி அதனால் ஏற்படக் கூடிய பல பயங்கரங்களையும் சேதங்களையும் வர விடாமல் காத்த உன் வீரத்தைப் பாராட்டுகிறேன். அதன் பரிசாக உன்னை நான் என் உப தளபதிகளுள் ஒருவனாக நியமிக்கிறேன்.''

திரும்பினார் மன்னர். அமைச்சர் தலையசைத்தார்.

''நாளைமுதல் நம் தளபதி சதுர்க்கருடன் பணி புரிய வேண்டும். மற்ற விவரங்களை சதுர்க்கர் சொல்லுவார்.''

சங்கமித்திரை அசோகருடைய மகள். எத்தகைய சந்திப்பு! இந்தச் சந்திப்புத் தொடருமா? அவள் எங்கே. தான் எங்கே... தவித்தது தேவதத்தனுடைய மனம்.

### 3

போர்க்களத்தில் மிகவும் அருகில் கூடாரத்தில் தங்கியிருந்தார் அசோகர். அவர் மனம் நிம்மதியின்றி இருந்தது. அடிக்கடி தூதுவனிடம், ''போரின் நிலைமை எப்படி இருக்கிறது'' என்று வினவினார்.

''நம் படைகள் மிகுந்த சேதத்துடன் முன்னேறுகின்றன.''

''சேதம் அதிகம்தான்!'' என்றார் மாமன்னர். ''கலிங்கக் காவலன் உத்திராபதியைச்



**யோசனை**

மிக்ஸியில் இட்லி, தோசைக்கு உளுத்தம் பருப்பு அரைக்கும்போது ஃப்ரிஜ்ஜில் வைத்த ஜலம் அல்லது பானை ஜலம் விட்டு அரைத்தால் உளுந்து நன்றாய் பொங்கி உபரியாய்க் காண்கிறது. சிற்றுண்டியும் மிருதுவாய் இருக்கும்.

- விசாலம் பத்மருபன்

சாதாரணமாக எண்ணி விட்டோம். அது தவறு என்பது இப்போது தெரிந்தது. போர்த் தந்திரத்தில் நம்மை விடச் சளைத்த வன் இல்லை என்பதை நிருபிக்கிறான். அது சரி! தளபதி சதுர்க்கன் எங்கிருக்கிறார்?''

''போர்க்களத்தின் முகப்பில். அவருக்குப் பக்கத்தில் இருப்பவர் தேவதத்தன்!''

''அப்படியா?''

''நேற்றைய கடுமையான மோதலில் இருவருக்குமே மிகுந்த காயங்கள் ஏற்பட்டன!''

''தேவதத்தனுக்குப் பதில் வேறொரு தளபதியை அனுப்புவதுதானே?''

''தேவதத்தர்தான் வேண்டாம் என்றார். போர் முனையில் இருக்கத்தான் அவருக்கு விருப்பம்.''

''அப்படியா? நீ போகலாம். ஏதாவது இருந்தால் வந்து சொல்.''

தூதுவன் சென்றான்.

''தேவதத்தன் மாவீரன். இந்தப் போர் முடியட்டும்! அவனுக்கு ஏற்ற பரிசை அளிக்கிறேன்.'' மனத்தில் சொல்லிக் கொண்டார் அசோகர். தேவதத்தனும் சங்கமித்திரையும் ஒருவரை யொருவர் விரும்புவது அவருக்குத் தெரியும்.

'இப்போரில் வெற்றி கண்ட அவனுக்குச் சங்க மித்திரையைப் பரிசாக கொடுக்க வேண்டும்.'

இரண்டு நாட்கள் கடும் போர். கலிங்கத்தை அடிமைப்படுத்துவது அவ்வளவு சுலபமல்ல என்பதை நிரூபித்தது அந்தப் போர். அந்தப் போரில் தேவதத்தன் ஆற்றிய பல வீரச் செயல்கள் வெளியாயின. கலிங்கனின் போர்த் தந்திரத்தைக் கூட மீறியது அவன் வீரம். பலர் அசோகரிடம் புகழ்ந்தார்கள். ஏன், தளபதி சதுர்க்கரும்கூட வியந்தார். அவன் 'வீரத்தைக் கண்டு. மாமன்னரின் மனம் மகிழ்ந்தது. எங்கு சென்றாலும் அவன் பெயர்!

எந்த இலையில் சாப்பிட்டாலும் சரி, ஒருபோதும் தாமரை இலையில் மட்டும் சாப்பிடாதீர்கள்: தாமரை இலையில் சாப்பிட்டால் தாங்கரிய உஷ்ணம் அதிகமாகும்!

எஸ். எஸ். மணியம்



எதிரிகளுக்குக் காலன் போல் விளங்கினான் அவன். எப்பேர்ப்பட்ட வீரப் பெயரைப் பெற்று விட்டான்!

சூரிய அஸ்தமனம். கலிங்கத்தின் சுதந்திரத்துக்கும் அஸ்தமனம் அன்றுதான்!

ஓடிவந்தான் ஒரு தூதுவன். மாமன்னரிடம் ஏதோ சொன்னான். மாமன்னரும் தாமதியாமல் பின்தொடர்ந்தார்.

''மாமன்னா! வெற்றி பெற்றோம்!'' என்றான் சதுர்க்கன். ''தேவதத்தனின் மாசற்ற வீரம்தான் வெற்றிக்குக் காரணம். இல்லாவிட்டால் இந்தப் போர் நமக்கு ஒரு படிப்பினையாக இருந்திருக்கும்!''

'இப்போதும் என்ன! இதுவே நமக்கு ஒரு படிப்பினைதான்' எண்ணினார் மாமன்னர்.

''மாமன்னர் வாழ்க! அசோக மாமன்னர் வாழ்க! கலிங்கத்தை வெற்றி கொண்ட மாமன்னர் வாழ்க!''

கோஷங்கள் எழுந்தன வீரர்களிடையே. ஆனால் வெற்றி பெற்ற அவர் மனம்?

## 4

ஆரவாரம் மிகுந்த பாடலிபுத்திர மக்களின் வெள்ளத்தில் மாமன்னர் காட்சியளித்தார். கலிங்கத்தின் வெற்றி. அவருடைய அரசை மிகப் பெரிய அரசாக்கி விட்டது. அந்த மாபெரும் அரசுக்கு ஏகச் சக்கரவர்த்தியாக அசோகர் பவனி வந்தார்.

அன்னையுடன் மங்கள ஆரத்தி எடுக்கக் காத்திருந்தாள் சங்கமித்திரை. அவள் கண்கள் ஆவல் மிகுந்து காணப்பட்டன.

அதோ மாமன்னர் வருகிறார். அருகில் சதுர்க்கர்... அவளுடைய கண்கள் யாரைத் தேடின? ஆம்! தேவதத்தனைத்தான்! அவர் எங்கே? மிகுந்த காயமோ? ஒருவேளை பின்னால் வருகிறாரோ? இல்லை... நினைக்கவே பயங்கரமாக இருந்தது. அப்படி இருக்காது... இருக்கக் கூடாது. கூடவே கூடாது. மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. கைகள் நடுங்கின. தட்டை எங்கே கீழே போட்டுவிடுவோமோ என்று பயந்தாள்.

அவளைப் பார்த்தார் மாமன்னர்.

''சங்கமித்திரை! என்ன யோசிக்கிறாய்? இப்பெரிய வெற்றியில் கிடைத்தன ஏராளமான பொருட்கள். உனக்குத் தேவையானவற்றை எடுத்துக்கொள்....''

அவளுக்குத் தேவையானது எது? தந்தையே... இன்னுமா புரியவில்லை... அல்லது புரிந்துதான் இப்படிப் பேசுகிறீர்களா? அவள் மனம் நினைத்தது.

''மேலும்!'' என்றார் மாமன்னர். ''இப்பெரும் வெற்றிக்குக் காரணம் யார் தெரியுமா? தெரிந்தால் ஆச்சரியப்படுவாய். தேவதத்தன். ஆமாம். உண்மை!''

பூரிப்பால் முகம் மலர்ந்தது சங்கமித்திரைக்கு.

''வீரம் மிகுந்த அவன் போர்க் களத்தையே தனதாக்கிக் கொண்டு அனைவரையுமே திகைப்பில் ஆழ்த்தி விட்டான்!''

இன்னும் மலர்ந்தது அவள் முகம். ''அவர் எங்கே?'' வாய் பேசவில்லை. மனம் கேட்டது. கண்கள் தேடியது.

''வெற்றியைத் தந்த அந்த தியாகச் செல்வன் வெற்றிச் செய்தியைக் கேட்டவாறு போர்க்களத்திலேயே உயிர் விட்டான்.''

''ஆ!'' என்ற பதறல் கேட்டது. தலை சுற்றியது அவளுக்கு. ஓடினாள். மாமன்னர் கண்களில் கண்ணீர் ததும்பியது.

'போரின் முடிவுகள் பயங்கரமானவை. அது உனக்குப் புரியாது. ஆனால் பின்னால் அதுவே ஒரு பாடமாக இருக்கும்.'

திடுக்கிட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள் சங்கமித்திரை. யாரும் இல்லை. பயங்கரம்தான். நினைத்ததை விட கோரமாகத்தான் இருக்கிறது. தந்தையின் சாம்ராஜ்ய ஆசை தன்னை எந்த நிலைக்குக் கொண்டு வந்து விட்டது என்று நினைத்தாள். ஏன் இந்தப் பயங்கரம்... போரே நடக்காமல் இருந்திருந்தால்... அன்பு தேவதத்தனை இழந்திருக்கக் காரணமில்லை யல்லவா?

மனம் அமைதியின்றி அலைந்தது. 'தன்னைப் போல் எவ்வளவு பேர்...

கணவனை இழந்தவர்கள், காதலனை இழந்தவர்கள், கை கால்களை இழந்தவர்கள், மகனை இழந்த தாய்...அப்பப்பா வேண்டாம்!

சற்றுப் பொறுத்து மனத்தைத் தேற்றிக் கொண்டாள்.

வெண்ணிற ஆடையுடன் தன் முன் நின்ற மகளைப் பார்த்த மாமன்னர் திடுக்கிட்டார். அரண்மனையே அல்லோலகல்லோலப்பட்டது. சங்கமித்திரை துறவறம் மேற்கொண்டாள் என்று.

''சங்கமித்திரை! என்னம்மா இது! மாமன்னனின் மகள் நீ! மனத்தைத் தளர விடலாமா? எதற்காகத் துறவறம்? தேவதத்தனின் மறைவா உன்னை இப்படி ஆக்கியது! அவன் மீது கொண்ட அன்பா உன்னைத் துறவறம் மேற்கொள்ளச் சொன்னது! வேண்டாம்.....''

''தந்தையே, தடுக்க வேண்டாம். மனத்தில் ஏற்பட்ட வைராக்கியத்துடன் தான் இந்தத் துறவறம் மேற்கொண்டேன். நான் என் தேவதத்தரை இழந்தது போல் எத்தனை பெண்களுக்கு இப்படி ஏற்பட்டிருக்கும்! கைகால்களை இழந்தவர்கள்... அப்பப்பா... வேண்டாம் இந்த வேதனை... இனிப் போரே வேண்டாம். இந்த ஒரு போர் போதும்! புத்தருடைய உபதேசங்களைக் கடைப்பிடிப்பதுதான் சரியான வழி. அதைப் பரப்ப வேண்டும். நானே செய்கிறேன்.''

''நில்லம்மா!'' என்றார் மாமன்னர். ''என்னுடைய பிடிவாதத்தினால் விளைந்த பயங்கரங்களுக்கு நீ பலியாகி நிற்கிறாய்! இப்போது உணர்கிறேன். ஆனால் காலம் கடந்த உணர்வு. எத்தனை பேர்களுடைய சாபம் என்னை வந்து சேரும் என்பதை இப்போதுதான் நினைக்கிறேன். எல்லாம் முடிந்த பிறகு. தேவதத்தன் தன் மறைவினால் ஒரு பாடத்தைக் கற்றுக் கொடுத்துவிட்டான். ஆனால் ஒரு வேண்டுகோள். உன் துறவறத்தைத் தடை செய்யவில்லை. அந்தச் சக்தி என்னிடம் இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால் உன்னை என்னால் பார்க்காமல் இருக்க முடியாது. உன் குரலை என்னால் கேட்காமல் இருக்க முடியாது. இங்கேயே இரு. இங்கிருந்து கொண்டு எல்லோருக்கும் உபதேசம் செய்!'' கண்களில் கண்ணீர் வழியக் கெஞ்சினார் மாமன்னர்.

விரக்தியாகச் சிரித்தாள் சங்கமித்திரை' ''தந்தையே! துறவறம் மேற்கொண்ட பிறகு அரண்மனை வாசம் சரியாகுமா? அதுதான் எனக்கு உகந்ததா? அரண்மனை வாழ்வே வேண்டாம் என்று வெறுத்து வெளியேறினார் புத்தர். அவருடைய கொள்கைகளைப் பரப்பப் போகும் நான் அரண்மனை வாசம் செய்வதா? நான் வருகிறேன். நான் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் பல இருக்கின்றன. புத்தர் உங்களுக்கு என் பிரிவால் ஏற்படும் துக்கத்தை மறக்க அருள் புரியட்டும்!''

அவள் போகும் திசையையே கண் கலங்கப் பார்த்துக் கொண்டிருந்தார், கலிங்கத்தைக் கதிகலங்க வைத்த மாமன்னர் அசோகர்.

'இன்று என் மகளின் பிரிவால் எப்படி நான் வருந்துகிறேனோ அதே போல எத்தனை பேர் தன் உற்றார், உறவினர்களை இழந்து வருந்துவார்கள்! போரினால்தானே இத்தனை துன்பங்களும்! இனி இந்தப் போர் வேண்டாம்! என் வாழ்நாளில் இனி போர் கிடையாது. புத்தரின் கொள்கைகளைப் பரப்புவதுதான் என் வேலை! அசோகன் ஸ்தாபித்த இம்மாபெரும் அரசே சின்னா பின்னமாகப் போனாலும் சரி. போர் கிடையாது.''

கதறினார் மாமன்னர் அசோகர்.

வெளியே சங்க மித்திரை புத்த பிக்ஷுக்களுடன் சென்று கொண்டிருந்தாள்.

புத்தம் சரணம் கச்சாமி!
தர்மம் சரணம் கச்சாமி!
சங்கம் சரணம் கச்சாமி!



பருப்பு வேக வைக்கும்போது, சிறிதளவு கடலை எண்ணெயையோ அல்லது இரண்டு பல் வெள்ளை பூண்டையோ போட்டால், பருப்பு வெகு விரைவில் வெந்து விடும். ஏ. நூர்ஜஹான்

# குழந்தைகளின் மனவளர்ச்சி

பொதுவாக நாம் கர்ப்ப காலத்தில் என்னென்ன சாப்பிட வேண்டும், குழந்தை பிறந்த பின் என்ன உணவு உட்கொள்ளலாம், குழந்தைக்கு என்ன கொடுக்கலாம் என்றெல்லாம் படிக்கிறோம்.

குழந்தைக்கு நல்ல ஆகாரத்தைக் கொடுத்து ஆரோக்கியமாக வளர்ப்பதுடன், அதன் மன வளர்ச்சியையும் கவனிக்க வேண்டும். குழந்தையின் முதல் இரண்டு வருடங்களே அதனுடைய அறிவு வளர்ச்சி அதிகமாக இருக்கும். அதை ஊக்கப்படுத்தி வளர்க்க வேண்டியது பெற்றோர்களின் கடமையாகும்.



**முதல் ஏழு மாதங்கள்வரை**

முதல் மூன்று மாதங்கள் வரை குழந்தை பால் குடிப்பதும் தூங்குவதுமாக இருக்கும். கைகாலை அசைக்கும். அவ்வளவுதான்.

நான்காம் மாதத்தில் குழந்தை தலையைத் தூக்கி உலகத்தைப் பார்க்க ஆரம்பிக்கிறது. அந்தச் சமயத்தில் அதன் பெயரைச் சொல்லிக் கூப்பிட வேண்டும். சப்தங்களைக் கேட்க ஆரம்பிக்கிறது. பிரகாசமான வர்ணங்களைப் பார்க்கின்றன.

எனவே அப்போது குழந்தைக்குப் பல வர்ணப் பொம்மைகள், கிலுகிலுப்பைகளைக் காட்டுவதோடு தோட்டம் போன்ற இடங்களுக்கு அழைத்துச் சென்று செடிகள் அசைவதையும், பூக்களையும் காட்டலாம். இதன் மூலம் குழந்தைக்குப் பார்க்கும் சக்தியும் கேட்கும் சக்தியும் அதிகரிக்கிறது.

ஏழாவது மாதத்தில் குழந்தை உட்கார்ந்து கொள்ளும். சாமான்களைக் கையில் பிடித்துக் கொள்ளவும், அவைகளை உணரவும் வாயில் எதையேனும் போட்டுக் கொள்ளவும் ஆரம்பிக்கிறது. இந்தச் சமயத்தில் குழந்தையின் அந்தத் திறனை வளர்க்கப் பல பொருட்களை அதனிடம் கொடுக்கலாம். பிளாஸ்டிக் டப்பாக்கள், பந்து, பெரிய மூடிகள் அவற்றைத் தொட்டுணர ஆரம்பிக்கும். முக்கியமாகக் கவனிக்க வேண்டியது குழந்தையிடம் கொடுக்கும் சாமான்கள் சுத்தமானதாக

# திருமதி சாவித்ரி தேவராஜ்
## (குழந்தை மனவியல் நிபுணர்)

வும், குழந்தைக்கு ஊறு விளைவிக்காததாக வும் இருக்கவேண்டும்.

**எட்டாம் மாதம்**

இந்த மாதத்திலிருந்து குழந்தையைத் தனியாக விடக் கூடாது. ஏனென்றால் சப்தங்களைக் கேட்டுப் புரிந்து கொள்ளவும் அந்தத் திசையை நோக்கித் தாவவும் ஆரம் பித்துவிடும். சூழ்நிலைகளை மிக ஆர்வத் துடன் கவனிக்கிறது.

இறந்து மூடும் மேஜை டிராயரும், துணிகள் வெளியே வருவதும், மீண்டும் பெட்டிக்குள் மறைவதும், கண்ணாடியில் ஒரு குழந்தை தோன்றுவதும் எல்லாம் ஆச் சரியமாக இருக்கும்.

இந்தச் சமயத்தில் மேஜையைக் குடைய விடுவதாலும், சுத்தப்படுத்தப்பட்ட காய் கறிகளைக் கொடுப்பதன் மூலமாகவும் குழந் தையின் ஆர்வம் வளர்க்கப்படும். மேஜை யிலே பிளேடு, கத்தி, சிறு பட்டன்கள் போன் றவை இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண் டும்.

தண்ணீர் என்றால் எந்தக் குழந்தைக்குமே ஆர்வம். நீங்கள் பாத்திரங்கள் துலக்கு வதையும், பாத்திரத்தின் ஓசைகளையும் நன்



ணீர் விழும் சப்தத்தையும் குழந்தைக்குக் காட்டலாம். குழந்தையை ஒரு பத்திரமான இடத்தில் விட்டு விட்டுச் செய்தால், இந்தச் செயல்களை ஆர்வத்துடன் பார்க்கும். கை கொட்டிக் குதூகலத்துடன் சிரிக்கும்.

### ஒன்பதாம் மாதம்

ஒரு பொருளைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ள ஆசைப்படும் மாதம் இது. டப்பாக்களின் மூடியைச் சரியாகப் பொருத்துவது, பாட்டிலை மூடுவது போன்ற வேலைகளை ஆர்வத்தோடு செய்யும். இப்படிப்பட்ட திறனைச் சரியான முறையில் வளர்ப்பதன் மூலம் கையும் கண்ணும் ஒருங்கிணைந்து செயலாற்றும் திறனை வளர்க்கலாம்.

பல்லாங்குழி இருக்குமானால் அதற்குப் பொருத்தமான கட்டைகளை வைத்து எடுத்து எடுத்து வைக்கச் சொல்லலாம். முட்டைகளை வைக்கும் காகித அட்டைகள் எளிதாகக் கிடைக்கும். அந்தக் குழி போன்ற அமைப்புக்குச் சரியான பந்தைப் போட்டு விடுங்கள். குழந்தை உங்களுக்குத் தொல்லை தராமல் விளையாடும். அதன் அறிவுத் திறனும் வளரும்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## தெரிந்து கொள்வோம்!

டாக்டர்கள் நம் உடலைப் பரிசோதித்தபின் மருத்துவச் சீட்டு (Prescription) தருகிறார்கள் அல்லவா? அந்தசீட்டின்மேல் ℞ என்ற குறியைப் பார்த்திருக்கிறோம் இதன் பொருள்: பண்டைய எகிப்து நாட்டில் நோய்தீர்க்கும் கடவுளாக வழிபட்டுவந்த 'ஹோரஸ்'ஐ (Horus) கண்ணின் வடிவத்தில் வரைந்து வழிபட்டனர். அவர்கள் வரைந்த அவ்வடிவமே ℞ நோய் தீர்க்கும் மருந்தைக் குறித்துக் கொடுக்கும் சீட்டில் இந்த எழுத்து ஒருகுறியீடாக மருத்துவர்கள் எழுதும் பழக்கம் இதிலிருந்து தான் ஆரம்பமானது.

-அ. வா. தேவன்






### பத்தாம் மாதம்

தன்னுடைய பிஞ்சுக் கைகளால் சின்னச் சின்னப் பொருட்களைக்கூட எடுக்க ஆரம்பித்துவிடும். சிறு சிறு பொம்மைகளில் கயிற்றைக் கட்டிக் கொடுத்து விடுங்கள். அதை இழுக்க ஆரம்பிக்கும். ஏனென்றால் எதையாவது எடுக்க வேண்டும், இழுக்க வேண்டும் என்ற ஆர்வம் கொள்ளும் பருவம் இது. மேஜையின் மேல் இருக்கும் ஒரு பேனாவை எடுக்க, டேபிள் கிளாத்தை இழுத்து அத்தனையையும் கீழே தள்ளிவிடும்.

### பதினோராம் மாதம்

கைகளைத் தட்டுவதற்கும், பாடல்களைக் கவனிப்பதற்கும் பயிற்சி கொடுக்கலாம். இதைத்தான் நம்முடைய பெரியவர்கள் செய்து வந்தார்கள்.

'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
சாயக்கிளியே சாய்ந்தாடு'

என்ற பாட்டெல்லாம் அந்த அடிப்படையில், எழுந்தவைதான்.

குழந்தை தன் உடலை அசைத்து ஆடவும் பாடலைக் கேட்டு அதற்காக அசையவும் செய்கிறது.

அதுமட்டுமல்லாமல் அலமாரிக்குள், மூடிய டப்பாக்களுக்குள், மேஜைக்குள் என்ன இருக்கிறது என்று ஆர்வம் காட்டும். 'துறு துறு'வென்று அங்கென்ன இருக்கிறது, இங்கென்ன இருக்கிறது என்று அலையும் குழந்தைகளின் ஆர்வத்தை வளர்க்க வேண்டும்.

பந்து, பொம்மை போன்றவற்றை எளிதில் பிரிக்கக் கூடிய பொட்டலமாகக் கட்டி குழந்தையிடம் கொடுங்கள். மிகக் கவனமாகப் பிரித்து உள்ளே என்ன இருக்கிறது என்று ஆராயும்.

இதனால் கண்ணும் கையும், மூளையும் இணைந்து செயலாற்றும் தன்மை வளருகிறது.

### ஒரு வயது

பன்னிரண்டாம் மாதத்திலிருந்து குழந்தைகள் பொம்மைகளைப் பார்க்க ஆரம்பிக்கிறது. பெரிய பெரிய வர்ணப் படங்கள் அச்சிட்ட புத்தகங்களைக் குழந்தைகளிடம் தரலாம். தானே புரட்டவும், பார்க்கவும் ஆரம்பிக்கிறது.

பொதுவாகவே, குழந்தைகளிடம் அதிகமாகப் பேச வேண்டும். நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும், குழந்தை செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் விளக்கம் சொல்லவேண்டும். குழந்தைகளை அதைச் செய்யாதே, இதைச் செய்யாதே என்று அதட்டி அடக்குவதன் மூலம் அதன் மூளை வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. அதனுடைய ஒவ்வொரு வளர்ச்சியையும் புரிந்து கொண்டு, அதற்கேற்ப விளையாட்டுக்களைச் சொல்லிக் கொடுப்பதன் மூலம் குழந்தையின் அறிவைப் பிரகாசிக்கச் செய்யலாம்.



# மஹாராஷ்டிர சமையல்

— நிர்மலா தேசிகன்

**மசாலா பாத்:**

**தேவையான பொருட்கள்:**

2 கப் அரிசி
100 கிராம் கத்தரிக்காய்
அரை கப் எண்ணெய்
அரை டீஸ்பூன் சீரகம்
கால் டீஸ்பூன் மஞ்சள் பொடி
அரை டீஸ்பூன் தனியா
ஒரு டீஸ்பூன் துருவிய கொப்பரை
2 சிவப்பு மிளகாய்.
அரை டீஸ்பூன் சர்க்கரை
5 முந்திரிப் பருப்பு
அரை கப் துருவிய தேங்காய்
அரை கப் தயிர்
2 கிராம்பு
சிறிய துண்டு லவங்கப் பட்டை
அரை டீஸ்பூன் கடுகு
ஒரு பிரிஞ்சி இலை
சிறிது கருவேப்பிலை
சிறிது கொத்துமல்லி

Pancharas Amti

அரை கப் துவரம் பருப்பு
4 வாழைக்காய்
1 சிறிய கத்தரிக்காய்
1 உருளைக் கிழங்கு
சிறிது முந்திரிப் பருப்பு
சில துண்டு நசுக்கிய தேங்காய்
1 கப் துருவிய தேங்காய்
1 சிறிய வெங்காயம்
அரை டீஸ்பூன் மஞ்சள் பொடி
2 ஸ்பூன் தனியா
1 டீஸ்பூன் சீரகம்
1 எலுமிச்சம் பழம்
சிறிது வெல்லம்
2 சிவப்பு மிளகாய்
1 டீஸ்பூன் கடுகு
5—6 பச்சை மிளகாய்
1 டீஸ்பூன் கரம் மசாலா
தேவையான அளவு உப்பு
வதக்குவதற்கு எண்ணெய்

## வளர்ச்சி உசால்:

### தேவையான பொருட்கள்:

1 கப் ஃபீல்டுபீன்ஸ்
1 டீஸ்பூன் ஓமம்
அரை டீஸ்பூன் கடுகு
அரை டீஸ்பூன் மிளகாய்ப் பொடி
அரை டீஸ்பூன் மஞ்சள் பொடி
சிறிய கட்டி வெல்லம்
அரை மூடி துருவிய தேங்காய்
சிறிது கொத்தமல்லி
தேவையான அளவு உப்பு
வதக்குவதற்கு எண்ணெய்

### செய்முறை:

பீன்ஸை தண்ணீரில் 12 மணி நேரம் ஊற வைக்கவும். பிறகு தண்ணியிலிருந்து எடுத்து விட்டு மஸ்லின் துணியில் கட்டித் தொங்க விடவும்.

### மசாலா பாத்:

அரிசியைக் கழுவி 10 மணி நேரம் தண்ணீரில் ஊறவைக்கவும். கத்தரிக்காயைத் துண்டுகளாக்கி நறுக்கி உப்பு கலந்த நீரில் போடவும். தனியா, சீரகம், சிவப்பு மிளகாய், கொப்பறை துருவல், வறுத்து வைத்துக்கொள்ளவும். வாணலியில் எண்ணெய், கடுகு போட்டு வெடித்ததும் பட்டை, கிராம்பு, பிஞ்சு இலை, கருவேப்பிலை போட்டு வறுக்கவும். அதனுடன் அரிசியைச் சேர்த்து சிறிது வதக்கவும். கத்தரிக்காயையும் போட்டு வதக்கவும். அதில் இரண்டரைக் கப் தண்ணீர் விட்டு, பொடி செய்த சாமான்கள், மசாலா பொடி, சர்க்கரை, உப்பு சேர்க்கவும். ப்ரஷர் குக்கரில் போட்டு வைக்கவும்.

### உசால்:

இன்னொரு பாத்திரத்தில் பீன்ஸ் போட்டு 1 கப் தண்ணீர் விடவும்.

### அம்தி

வாழைக்காய் தோல் எடுத்து நீளமாக நறுக்கிக் கொள்ளவும். கத்தரிக்காயையும் நீளமான துண்டுகளாக நறுக்கவும். மூன்றாவது பாத்திரத்தில் துவரம் பருப்பை ஒன்றரைக் கப் தண்ணீரில் நறுக்கிய காய்கறி, மஞ்சள் பொடி போட்டு வதக்கவும். ப்ரஷர் குக்கரை அடுப்பில் வைத்து ப்ரீத் கப் என்றால் ஒன்றரை கப் தண்ணீரும் (6.5 / 7.5) சீனியர் எலிகண்ட் மாடல் கப் என்றால் 2 கப் தண்ணீரும்விட்டு அரிசி, பீன்ஸ், பருப்பு வைத்திருக்கும் பாத்திரங்களைக் குக்கரினுள் வைத்து, 10 நிமிடம் குக்கரை அடுப்பில் வைத்து இறக்கி விடவும். ஆறியவுடன் எடுக்கவும்.

### மசாலா—பாத்

அரிசியை எடுத்துக் கனமான பாத்திரத்தில் போட்டுக் குறைந்த தீயில் சில நிமிடம் வைத்து, துருவிய தேங்காய், கொத்தமல்லி இவைகளினால் அலங்கரிக்கவும்.

### அம்தி

வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு கடுகு ஓமத்தைப் போடவும். கடுகு வெடித்ததும் வெந்த பீன்ஸ், உப்பு, மிளகாய் பொடி, மஞ்சள் பொடி, வெல்லம் போட்டு கலக்கவும். சிறிது வெந்தவுடன் நறுக்கிய கொத்தமல்லி, தேங்காய் துருவலினால் அலங்கரிக்கவும்.

வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு கடுகைப்போட்டுஅதுவெடித்ததும் நறுக்கியவெங்காயத்தை அதில் போட்டு சிறிது நேரம் வதக்கவும். அதனுடன் முந்திரிப் பருப்பு, நசுக்கிய தேங்காய்த் துண்டுகளைச் சேர்த்து வறுக்கவும். வெந்த பருப்பு, காய்கறித் துண்டுகள், ஒரு கப் தண்ணீர் சேர்த்து, குறைந்த தீயில் வைக்கவும். தேங்காய், சீரகம், சிவப்பு மிளகாய், புளி, சேர்த்து நைஸாக அரைக்கவும். அதனுடன் மசாலா உப்பு சேர்த்து, வெல்லம் சிறிது போடவும். பச்சை மிளகாய், கரம் மசாலா அடுப்பிலிருந்து கீழே இறக்குவதற்கு முன் இவைகளைச் சேர்க்கவேண்டும்.

---

**முட்டை, விரிசல் கண்டிருந்தால் வேக வைக்கும் போழுது தண்ணீரில் சிறிது Table Salt கலந்து விட்டால், முட்டை ஒழுகாது.** – ஜனனி முரளி



# கறைகளைப் போக்க.....

### சூயிங்கம்

துவைக்கக் கூடிய துணிகளா யிருந்தால் கறை பட்ட இடத்தில் முட்டையின் வெள்ளையை அதன் மேல் தடவி கறையைச் சுலபமாக எடுக்கலாம். கம் மிருதுவாக இருந்தால் சாதாரணமாகவே துவைக்கலாம். கம்மை ஐஸினால் கீறி எடுத்துவிட்டு துவைக்கலாம்.

### சாக்லேட்

முனை கூர்மையில்லாத கத்தியினால் சாக்லேட் கறையைக் கீறி எடுத்துவிட்டு துவைக்கலாம். அதிகக் கறை ஏற்பட்டிருந்தால் பொரெக்ஸை லேசாக சூடு செய்து கறை மேல் தடவி பிறகு துவைக்கலாம்.

### காப்பி

துணியை மிதமான சுடு தண்ணீரில் பொரெக்ஸ் லொஷனை நனைத்து கறையை ஒற்றி எடுத்துவிட்டு, மிதமான சூடு உள்ள தண்ணீரில் துவைக்கலாம்.

### க்ரீம்

துவைக்கக் கூடிய துணியாயிருந்தால் மிதமான சூடு அல்லது குளிர்ந்த நீரில் சிறிது நேரம் அமுக்கி வைத்து பிறகு துவைக்கலாம்.

### முட்டை - வெள்ளைகரு

முட்டையின் வெள்ளைக் கறையாக இருக்குமானால் அரை ஸ்பூன் சமையல் உப்பை ஒன்றரை கப் மிதமான சூடு தண்ணீரில் கரைத்து தண்ணீரில் துணியைநனைத்து ஒற்றிக் கறையை எடுக்கலாம். பிறகு நல்ல தண்ணீரில் நனைத்து உலர வைக்கவும். அதிக சூடு உள்ள தண்ணீரை உபயோகப் படுத்தினால் வெள்ளைக் கறை அகன்றுவிடும்.

### முட்டை

மிதமான சூடு தண்ணீரில் மருந்து டிடர்ஜண்ட் கரைத்து கறையில் விடவும். பிறகு சாதாரணமாகத் துவைத்து உலர்த்தவும். லேசாகக் கறை பட்டிருந்தால் கார்பன் டெட்ரா குளோரைடினால் ஒற்றி எடுக்கலாம்.

### எமல்ஷன் பெயிண்ட்

குளிர்ந்தநீரில் நனைத்ததுணியால் கறையை ஒற்றி எடுக்கவும். டர்பண்டைனில் நனைத்த துணியை உபயோகப்படுத்தக் கூடாது. துவைக்கும் துணியா யிருந்தால் குளிர்ந்த நீரில் நனைத்து வைத்த பிறகு துவைக்கலாம். பெயிண்ட் உலர்ந்து விட்டால் ஸ்பிரிட்டினால் கறையை ஒற்றி எடுக்கவும். பெயிண்ட் தரையில் இருந்தால் பெயிண்ட் உலருவதற்கு முன்னால் கோணியால் துடைக்கவும்.

### எனமல் பெயிண்ட்

கறை பட்ட உடனேயே டர்பன்டைன் நனைத்த துணியினால் ஒற்றி எடுத்தால் போய் விடும்.

### பெல் பேனா இங்க்

முதலில் வீட்டில் உபயோகிக்கும் சோப், அல்லது கிளிசரினால் கறையை எடுக்கவும். பிறகு கறை மங்கலாக ஆன பின் சாதாரணமாகத் துவைக்கலாம். கறை அதிகமாக இருந்தால் ஸ்பிரிட்டை உபயோகிக்கவும்.

### பழமும் பழச்சாறும்

கறை பட்ட உடனே ஒரு பேஸின் மேல் கறை பட்ட இடத்தைப் பரப்பி உயரத்திலிருந்து சுடு தண்ணீரைக் கறையின் மேல் விடவும். இதில் கறை போகாவிடில், கறையைக் கீறி எடுத்துவிட்டு, எலுமிச்சம் சாறினால் கறையை எடுத்துவிட்டுப் பிறகு துவைக்கலாம். கறை உலர்ந்துவிட்டால் பொரெக்ஸ் லோஷன் கலந்த மிதமான சூடு தண்ணீரில் நனைத்துத் துவைக்கவும். நகத்தினால் கறையைக் கீறி எடுத்துவிட்டு சாதாரணமாகத் துவைக்கவும். கறை போகாவிட்டால் உப்பைக் கறையின் மேல் தூவி கறை பரவாமல் பார்த்துக்கொள்ளவும்.

### தேன்

மிதமான சூடு நீரில் டிடர்ஜண்ட் சோப் தூளைக் கலந்து அதில் கறை பட்ட இடத்தை







நனைத்துக் கசக்கவும். தேன் கறை உலர்ந்து விட்டால் பொரெக்ஸ் கலந்த மிதமான சூடு தண்ணீரில் நனைத்து அரை மணி நேரம் கழித்துக் குளிர்ந்த தண்ணீரில் துவைக்கவும்.

**ஐஸ்கிரீம்**

சூடு உள்ள டிடெர்ஜண்ட் கலந்த நீரில் நனைத்து வைத்து லேசாகக் கிறி, கசக்கவும்.

**இங்க்**

இங்க் கறை பட்டவுடன், டிடெர்ஜண்ட் கலந்த லோஷனுல் எடுத்துவிடலாம். கறை உலர்ந்துவிட்டால் கறை பட்ட இடத்தை தண்ணீரில் நனைத்து, உப்பினுல் கிறி எடுக்கலாம். எலுமிச்சம் பழச் சாற்றை விட்டு 2 மணி நேரத்துக்குப் பிறகு துவைக்கலாம். விரலில் இங்க் கறை பட்டால் வாழைப் பழத்தின் தோலின் உள்ளே இருப்பதால் தடவினுல் கறை போய்விடும்.

**ஜாம்**

கறை பட்டவுடன் டிடெர்ஜண்ட் லோஷனுல் எடுக்கலாம். கறை உலர்ந்துவிட்டால் பொரெக்ஸ் லோஷன் கலந்த மிதமான சூடு தண்ணீரில் நனைத்து, கசக்கிப் பிறகு துவைக்கலாம்.

**பென்சில் முனை**

பென்சில் கறையைக் கிறி எடுக்கவும். கறை அதிகமாக இருந்தால் சோப் கலந்த சூடு தண்ணீரில் ஒற்றி எடுக்கவும்.

**லிப்ஸ்டிக்**

லேசான கறையாயிருந்தால் சுலபமாக சூடு டிடெர்ஜண்ட்டினுல் துவைக்கலாம். அதிக நாளான கறையாக இருந்தால் கிளிசரினுல் நகத்தின் நுனியில் கிறி எடுத்த பிறகு துவைக்கலாம்.

**பால்**

துவைக்கக் கூடியதாக இருந்தால் குளிர்ந்த தண்ணீரில் நனைத்துத் துவைக்கவும். அப்படியும் கறை போகாவிடில் பொரெக்ஸை சூடு தண்ணீரில் கலந்து கறைமேல் விட்டு, ஐந்து நிமிடத்துக்குப் பிறகு கசக்கி துவைக்கலாம். அவசியமிருந்தால் மறுபடி இதே மாதிரி செய்யவும்.



''வேப்பம் பூவை இரசம் வைத்து சாப்பிடலாம்; இதனுல் உடம்பில் ஏற்படும் அதிகப்படியான பித்தம் குறைகிறது! வேப்பம்பூ பச்சடி உடம்புக்கு மிகவும் நல்லது; உடம்பிலுள்ள இருமிகளைக் கொல்லுகிறது!''

**மண்**

மண் உலர்ந்த பிறகு கெட்டியான பிரஷ்ஷினுல் பிரஷ் செய்யவும். தோய்க்கும் சோப் உபயோகித்துத் துவைக்கலாம். மார்க் இருந்தால் மிதான சூடு தண்ணீரில் நனைத்து ஒற்றி எடுக்கவும்.

**நக பாலிஷ்**

அஸிடோன் அல்லது நக பாலிஷ் எடுக்கும் ரேயானுக இருந்தால் உபயோகிக்குமுன்பு பரிட்சை செய்யவும். விஸிடோனினுல் கறையை எடுக்க முடியாவிடில் ஸ்பிரிட் நனைத்த துணியினுல் ஒற்றி, பிறகு டிடெர்ஜண்ட் கலந்த மிதமான சூடு தண்ணீரில் துவைக்கவும்.

**பார்ப்பூம்**

கறை பட்ட உடனே, துவைத்தால் சுலபமாகக் கறை போய்விடும். கறை உலர்ந்து விட்டால் கிளிசரினுல் கிறிவிட்டு துவைக்கவும். ஹைட்ரஜன் கலந்த நீரில் நனைத்து உலர்த்தவும்.











# ராசி பலன் ஜூன் 81

## மேஷம்



ஒரு புதிய துறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, அதிலே மிகுந்த அக்கறையுடன் உழைத்தீர்களானால் உங்களுக்குக் கண்டிப்பான பலன் கிடைக்கும். அதற்காக உங்கள் பழைய வேலைகளை விட வேண்டியதில்லை. பொருளாதார நிலை சுமாராக இருக்கும். அரசாங்க வேலைகளில் இருப்பவர்களுக்கு, மேலதிகாரிகளிடம் நன்மதிப்புக் கிடைக்கும்.

## ரிஷபம்



உங்களுடைய பொறுப்புக்களும் கடமைகளும் அடுத்த மாத இறுதிக்குள் பெரும்பாலும் தீர்ந்து விடும். அதற்கான ஆயத்தங்களை இம்மாதமே காணலாம். உங்களை விடப் பெரியவர்களிடம் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டிய காலம் இது. விடுமுறைக் குதூகலமும், அந்தரங்க நட்பும் சிறப்பாக அமையும்.

## மிதுனம்



நீங்கள் நீண்ட காலமாக நினைத்து வைத்திருந்த திட்டம் எதிர்பாராத விதமாக இம்மாதம் முடியும். பண வரவு இம்மாதத்தின் இறுதியில் உண்டு. வெளியூர்ப் பிரயாணம் உண்டு. அதிக அலைச்சலினால் உடல் நலக் குறைவு ஏற்படக் கூடும். அரசியல்வாதிகளுக்கும், சமூகத்தொண்டர்களுக்கும் சிறிதே சோதனைக் காலமாக இருக்கும் இம்மாதம்.

## கடகம்



உங்களுடைய பிரச்னைகளை நீங்களே முடிவெடுப்பதை விட உங்களை விட மூத்த நிலையில் இருப்பவர்களிடம் கேட்பதன் மூலம், உங்களுக்குத் தோன்றாத நல்ல யோசனைகள் கிடைக்கும். எதிர்பாராத செய்திகள் கிடைக்கும்போது, மிகவும் அதிர்ச்சியடைய வேண்டியதில்லை. அடுத்த மாத முதல் வாரம் வரை பொறுமையுடன் இருந்தால் நல்ல வழிகள் பிறக்கும்.

## சிம்மம்



இன்னும் இரண்டு வாரங்களில் நீங்கள் பெறப்போகும் அனுபவங்களின் மூலமாக உங்களின் மனப்பான்மையே மாறி மனோதத்துவ ரீதியில் உங்கள் பார்வை மாறுபடும். மூன்றாவது வாரம் நீங்கள் சொல்ல நினைத்த இனிய செய்தியை வெளிப்படுத்தலாம். பக்தி உணர்வும், தத்துவமும் உங்களைக் கவர்ந்திழுக்கும் மாதமாக அமையும்.

## கன்னி



ஆடம்பரச் சாதனங்கள், அலங்காரப் பொருட்கள் வாங்குவதில் இம்மாதம் உங்களுடைய நாட்டம் செல்லும். விளையாட்டு வீராங்கனைகளுக்கும், கலைஞர்களுக்கும் இம்மாதம் பரிசுகளைக் கொண்டு வந்து தரும். பொழுது போக்கு அம்சம் சிறப்பான இடத்தைப் பெறும். வெளியூர்ப் பிரயாணங்களுக்

கான வாய்ப்புக்களும் அதிகம். பண வரவு உண்டு.

## துலாம்



இன்னும் இரண்டு வாரங்களுக்கு அமைதியாகவும், இருக்கும் இடம் தெரியாமல் அழுத்தமாகவும், தூர் நண்பர்களும், எதிரிகளும் ஏற்படாமல் இருக்கவும் வேண்டி உள்ளது. உங்களுடைய பொருளாதார நிலையை மிகவும் கவனமாக, கடன் வாங்காத அளவுக்குப் பாதுகாக்க வேண்டியிருக்கும். மிகவும் நெருங்கிய நண்பர்களைக் கூட விமர்சிக்காதீர்கள்.

## விருச்சிகம்



குடும்ப வேலைகளை இம்மாதத்தின் பாதி நாட்கள் பிடித்துக் கொள்ளும். தொழிலதிபர்கள் தொழிலாளர் பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியதாக வரலாம். சிறு சிறு சங்கடங்கள் தோன்றிக் கொண்டிருந்தாலும் அவையெல்லாம் மறைந்துவிடக் கூடிய சாத்தியக்கூறுகள் உண்டு. உடல் நிலையைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.

## தனுசு



இந்த மாதம் இந்த வருடத்திலேயே சிறந்த மாதமாக உங்களுக்கு இருக்கும்.. சுப காரியங்களும், மனத்துக்கு மகிழ்ச்சியான சம்பவங்களும் நிகழும். தல யாத்திரை செல்லவும் வாய்ப்புக்கள் உண்டு. உங்களுடைய ரகசியங்களை யாரிடமும் சொல்லாமல் பாதுகாத்து வைத்திருந்தாலும், எதிர் பாராத நிலையில் வெளிவரலாம். அதனால் நன்மைகளே அதிகம்.

## கும்பம்



உங்களுடைய மனத்துக்கினிய நண்பரிடமிருந்து நல்ல செய்திகள் வரும் காலம் இது. உங்களுடைய அடுத்த திட்டத்திற்கும், எதிர்காலத்துக்கும் மற்றவர்களின் உதவியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். உங்களின்பால் கருணையும், அக்கறையும் தானுகவே மற்றவர்களுக்குப் பிறந்து உதவி செய்யும் சூழ்நிலை உண்டாகும். பண வரவு திருப்திகரமாக இருக்கும்.

## மீனம்



உங்களுடைய எண்ணங்களை மற்றவர்கள் மேல் நீங்கள் கொண்டுள்ள வருத்தங்களை வெளிப்படையாகப் பேசி ஒரு முடிவுக்குக் கொண்டு வரச் சரியான காலம் இது. அமைதியையும், சந்தோஷத்தையும், வாழ்வில் அனுபவிக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. நிலையில்லாமல் அலைந்து கொண்டிருந்த வாழ்க்கை விரைவில் நிலைக்கு வந்துவிடும்.

## மகரம்



உங்களைச் சுற்றி இருப்பவர்கள் அனைவரிடமும் சுமுகமாகவும், நட்புடனும் பழகுங்கள். அதனால் பெரும் வெற்றி வாய்ப்புக்கள் உங்களுக்குக் காத்திருக்கிறது. ஒதுங்கி வாழும் சுபாவத்தைச் சிறிதுசிறிதாக மாற்றிக் கொண்டீர்களானால் வாழ்க்கையில் நல்ல முன்னேற்றம் காணலாம். இம்மாதம் வேலைகள் அதிகமாக இருக்கும். பண வரவு உண்டு.

# பதினாறு வயது பாடகி

ஒரு பாடலுடன் இனித் திரைப் படத்தில் பாடுவதில்லை என்ற தீர்மானத்தோடு ஒதுங்கி விட்ட நஸியா ஹஸனை பாலிடார் நிறுவனம் ஒப்பந்தம் செய்ய முற்பட்டபோது நஸியாவின் தந்தை ஒப்புக்கொள்ளவில்லை. அந்த முயற்சிகள் தோல்வியடைந்த நேரத்தில் லண்டனில் உள்ள எச். எம். வி. நிறுவனம் இவர்களை அணுக அதிர்ஷ்டம் அவர்கள் பக்கம் திரும்பியது. ஒரே சமயத்தில் லண்டன், இந்தியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளில் இந்த இசைத்தட்டுக்களை விற்பனைக்கு வெளியிட வேண்டும் என்றும், ரிகார்டு செய்வதற்கான தொகையில் 50 சதவீதத்தை (சுமார் 3,60,000) கொடுப்பதாகவும் ஒப்பந்தம் செய்யப்பட்டு லண்டனிலேயே டிசம்பர் மாதத்தில் ஒலிப்பதிவு செய்யப்பட்டது. இந்த ஒப்பந்தத்துக்காக பெரு முயற்சி எடுத்துக் கொண்டவர் எச். எம். வி. நிறுவனத்தைச் சேர்ந்த அனில் தத். உடனடியாகக் கல்கத்தாவில் உள்ள எச். எம். வி.யின் மூலம் பாகிஸ்தானிலும் தொடர்பு கொண்டு வெளியிடுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்து விட்டனர்.



ஆரம்ப முயற்சியிலேயே தோல்வி கண்ட பாலிடார் நிறுவனம் உடனடியாகக் காஷ்மீரில் பிறந்து பாகிஸ்தானில் பிரபலமாகியுள்ள முஸ்ரத் நஸீர் என்ற பாடகியை, ஏற்கனவே 'ஹாரிசான்' என்ற இசைத்தட்டின் மூலம் அமெரிக்காவில் புகழ் பெற்று கானடாவில் வசித்து வருபவரை ஒப்பந்தம் செய்து புகழ் பெற்ற 'போனி' எம். பாடல்களை இந்தியில் மகேந்திர கபூருடன் பாட வைத்து வெளியிட முயற்சிகளை மேற்கொண்டனர். முன்பே எடுத்த முடிவுப்படி ஏப்ரல் 8ந் தேதி வெளியிடப்பட வேண்டிய நஸியாவின் 'டிஸ்கோ திவானே' இசைத்தட்டை ஏப்ரல் 3ம் தேதியன்றே எச். எம். வி. வெளியிட்டது. நஸியாவின் அதிர்ஷ்டம் அன்று அவருடைய பதினாறாவது பிறந்த நாள். எதிர்பாராத விதமாக பாலிடார் நிறுவனமும் அவர்களுடைய 'எம் 3' இசைத்தட்டை அன்றே வெளியிட வேண்டியதாகி விட்டது.

வெளியான தினத்தன்றே நஸியாவின் இசைத்தட்டு 1,15,000 விற்பனையாகிப் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. மற்றொரு விசேஷம் இதுவரை திரைப்படப் பாடல்களற்ற தனிப்பட்ட பாடல்களை ஒரு பாடகரோ பாடகியோ பாடி, விற்பனைத் துறையில் அதிகமாக விற்பனையாகி தங்க இசைத்தட்டை நஸியா பெறப் போவதைப் போல் யாருக்கும் கிடைத்ததில்லை. இந்த இசைத் தட்டுக்காக எச். எம். வி. நிறுவனம் விளம் பரத்துக்குச் செலவழித்த தொகை ரூ. 4,50,000. இதுவரை எந்த இசைத்தட்டு நிறுவனமும் தனிப்பட்ட ஒரு இசைத் தட்டுக்காக இவ்வளவு விளம்பரப் படுத்தியதில்லை. இதன் வெளியீட்டை முன்னிட்டு ஏப்ரல் மாதத்தில் நஸியா, பிட்டு, மற்றும் எட்டுப்பேர் அடங்கிய இசைக் குழுவினரை இந்தியாவில் முக்கியமான ஒன்பது நகரங்களில் 'டிஸ்கோ நைட்' நடத்த எச். எம். வி. உத்தேசித்திருந்தது. ஆனால் நஸியாவின் தேர்வுகளை ஒட்டி ரத்து செய்யப்பட்டாலும் ஜூலை மாதத்தில் நடத்த ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

பாலிடார் வெளியிட்ட 'எம் 3' இசைத் தட்டின் நிலைமை எப்படி?

'டிஸ்கோ திவானு'வுக்கு எந்த வகையிலும் குறையற்ற முறையில் சிறப்பாக ஒலிப்பதிவு செய்யப்பட்டு, முஸ்ரத், மகேந்திர கபூரால் பாடப்பட்ட 'எம்3' வெளியான தினத்திலிருந்து இதுவரை சுமார் 50,000 இசைத் தட்டுக்கள் விற்பனையான போதிலும் தங்க இசைத்தட்டைப் பெற்றுத் தருமென்று எதிர்பார்க்கிறார்கள். இசைத்தட்டு அறிமுகத்தன்று முஸ்ரத் நஸீர் பங்கேற்றுக் கொண்ட டி. வி. நிகழ்ச்சியில் 'எம்3' இசைத்தட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களிலிருந்து இரு பாடல்களைப் பம்பாயில் ஒளிபரப்பினார்கள். 'போட்டியாலும் ஆர்வத்தாலும் எச்.எம். வி. நிறுவனம் இப்பாடல்களை ஒலிப் பதிவு செய்ய 20,000 டாலர்களைச் செலவழித்திருப்பதாகவும் மேற்கொண்டு விளம்பரத்துக்காகச் செலவழிக்கப்பட்ட தொகையையும் சேர்த்தால் சாதாரணமாக ஆகும் செலவைவிட அதிகம் என்றும், ஒரு இசைத்தட்டின் அடக்க விலை ரூ. 33 என்றாலும், ஒரு லட்சம் விற்பனைக்கு 33 லட்சம்தான் கிடைக்கும். மேலும் அதிகம் விற்பனையானாலும் செலவழித்த தொகை திரும்புமா என்பது சந்தேகம்தான்' என்று பாலிடார் நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் கருதுகின்றனர்.

ஆதாரம்: நியூடெல்லி, ஸண்டே.

—லட்சுமி குமார்

ஆறும் மாசம் அவளுக்குக் கண் திறந்து கொண்டது. அழகான கண்களைப் பார்க்க முடிந்தால் பார்க்கலாம். அந்த இருண்ட உலகத்தில் எப்படியாவது வெளிச்சம் கசியக் கூடுமென்றால் அவள் கண்கள் அந்த வெளிச்சத்தைத் தொடரும். கண் புருவங்களும் கண் இரைப் பைகளும் அமைய ஆரம்பித்து விட்டன. நாக்கில் ருசி பார்க்கும் முனைகள் எதற்கோ இத்தனை சீக்கிரம் வந்துவிட்டன. அவள் இப்பொழுது பிறந்தால் பிழைப்பது மிக அரிது. பிறக்கும் அவசரத்திலும் இல்லை அவள்.

அம்மா லேடி டாக்டரிடம் போய்ப் பரிசோதித்துப் பார்த்துக்கொண்டதில் ''எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது'' என்றாள்.

''என்ன குழந்தை சொல்ல முடியுமோ டாக்டர்?''

''நானும் இந்தத் தொழில்ல இருபது வருஷம் இருந்திருக்கேம்மா. இதுவரைக்கும் ஒரு தடவை கூடச் சொல்ல முடிஞ்சதில்லே. பகவான் அதை மட்டும் பிறக்கற வரைக்கும் காட்ட மாட்டேங்கறார்!''

''எனக்கு என்னவோ இன்னொரு புள்ளையாப் பொறந்து வைக்கப் போறதேன்னு கவலையா இருக்கு டாக்டர்!''

''நீங்க ஒருத்திதாம்மா பொண்ணு வேணும்னு சொல்ற முதல் தாய். பூஷாவலா அப்பாமாருங்கதான் பொண்ணு பொண்ணுன்னு கேப்பாங்க.''

''எனக்கென்னமோ பொண்ணு இருந்தா பிற்காலத்திலே வீட்டு வேலைக்கு ஒத்தாசையாயிருக்குமேன்னுட்டுத்தான். எல்லாக் காரியமும் நானே பண்ண வேண்டி யிருக்கு. ஆத்திலே பசங்க ஒரு துரும்பை எடுத்து அந்தாண்டை போட மாட்டாங்க.''

''பசங்க பசங்கதாம்மா. எனக்கு ஒரு புள்ளை இருக்கான். பதிமூணு வயசு. இப்பவும் என்கிட்டத் தொட்டுக்கிட்டுத்தான் படுத்துப்பான். சைக்கலாஜிக்கலா இது நல்லது இல்லேன்னு எங்க வீட்டுக்காரர் சொல்றார். இவனுக்கு ரொம்ப அட்டாச்.''

''டாக்டர்! பிரசவம் நார்மலாத்தானே இருக்கும்.''

''கவலையே படாதீங்கம்மா.''

''ஏன்னு வயசாயிடுத்து பாருங்கோ.''

''அப்படியெல்லாம் இல்லேம்மா. கொஞ்சம் கூட ரிஸ்க் எடுக்க மாட்டேன். ஆனா அவசியமா சிஸேரியனும் பண்ண மாட்டேன். நல்லாச் சாப்பிடுங்க. நல்லா வேலை செய்யுங்க. அதுவே போதும்.''

ஏழாம் மாசம் அவள் சிவந்த தோலுடன் சுருங்கிப்போய் வயசான குழந்தை போல் மூன்று பவுண்டு கனமும் பதினாறு அங்குல நீளமும் இருந்தாள். இப்போது அவளுக்கு இருட்டுக்கும் வெளிச்சத்துக்கும் வித்தியாசம் தெரியும். அம்மா உள்ளங் கையால் லேசாகத் தொட்டுப் பார்க்கும்போது அவளுக்குத் தெரிந்தது. இப்போது பிறந்தால் அவள் பிழைத்துக்கொள்ள சான்ஸ் இருக்கிறது.

''லீவுக்கு இப்பவே சொல்லி வெச்சுட்டேன். அப்புறம் ஆடிட் கிடிட்டுன்னு உயிரை வாங்கிடுவான்.... விட மாட்டான். பாட்டி போறுமா? அக்காவைக் கூட்டி வெச்சுக்கலாமா?''

''எல்லாம் பாட்டி போறும். உங்க அக்கா வந்தா எந்த உபகாரமும் செய்யப் போறதில்லே. பாட்டிக்கு இன்னொருத்தருக்குச் சமைக்க வேண்டி வந்துடும். பக்கத்தாத்து சாரு வந்து ஹெல்ப் பண்றேன்னு சொல்லியிருக்கா. கவலையே படாதீங்கோ. நீங்க கூட ஜாஸ்தி லீவு எடுக்க வேண்டாம்.''



# எப்போதும் பெண்

எட்டாம் ஒன்பதாம் மாதத்தில் அவள் உள்ளே கம்மா இருக்க முடியாமல் விஷமம் பண்ண ஆரம்பித்து விட்டாள். கையைக் காலை ஆட்டிக் கொஞ்சம் இடம் மாற்றிக் கொள்ளவும் செய்தாள். இப்போது அவள் எல்லா அங்கங்களையும் அமைத்துக்கொண்டு விட்டாள். சோனிப் பிச்சாளுக இருந்த தன்னை அழகு படுத்திக் கொண்டாள். தசைகளும் சதைகளும் வளர்த்துக் கொண்டுகொஞ்சம் சருமம் பாலிஷ் வாங்கிக்கொள்ள சுருக்கங்கள் எல்லாம் குறைந்து போய் கொஞ்சம் ஷேப்புக்கு வந்து விட்டாள். அந்த 280ம் தினத்துக்குக் காத்திருந்தாள்.

அம்மா சாதாரணமாகத்தான் இருந்தாள். நிறைகர்ப்பமாக இருந்தாலும் வீட்டுக் காரியங்களை விட்டு வைக்காமல் துடைத்துக் கொண்டும் அரைத்துக் கொண்டும் கைக்கா ரியங்கள் செய்துகொண்டுமிருந்தாள். அவ்வப்போது ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டு சற்றே மூச்சு வாங்கும்போது மது ''பூதம்'' என்று கேலி பண்ணுவான்.

''ஆமா! உனக்கு வந்தாத் தெரியும்டா கடன்காரா! எப்பப் பார்த்தாலும் தின்னுண்டே இரு. அம்மாவுக்கு ஒரு ஒத்தாசையும் பண்ணாதே!''

மதுவோடு பேசிக் கொண்டிருந்தபோது, அம்மாவின் உடம்பு ஒன்பது மாசமாகப் போற்றிப் பாதுகாத்ததை வெளியே விரட்டுவதற்குத் தீர்மானித்து விட்டது. இந்தத் தீர்மானம் முதலில் யார் எடுக்கிறார்கள் என்பது மனித குல ஆச்சரியங்களில் ஒன்று. ஆனால் குழந்தை வெளியே வரத் தீர்மானித்து விட்டது என்பதற்குத் தவிர்க்க முடியாத அறிகுறிகள் துவங்கி விட்டன. முதலில் அம்மாவுக்கு 'இடுப்பு வலி'யின் ஆரம்பங்கள் தெரிந்தன. இடுப்பு வலியில்லை இது. யூட்டிரஸ் சுருங்கத் துவங்குவதால் ஏற்படும் வலி. அம்மாவுக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது இதுதான் ஆரம்பம் என்று.

அம்மாவின் உடல் எத்தனையோ விதங்களில் அந்தக் கணத்துக்குத் தயாராகியிருந்தது. அவள் இதயம் சற்றுப் பெரிசாகி இருந்தது. பாப்பாவுக்குத் தேவைப்பட்ட உபரி ரத்தத்துக்காக – அதைச் சமாளிக்க செக்ஸ் ஹார்மோன்களின் அழுத்தத்தால் மார்பகங்கள் பெரிசாகி பால் சுரப்பிகளும் அவைகளுக்கு ரத்தம் தர சின்னச்சின்ன நுண்ணிய ரத்தக் குழாய்களையும் அம்மா புதுசாக அமைத்துக் கொண்டிருந்தாள்.

கருப்பையின் வாய் மெலிசாக இழையத் துவங்கியிருந்தது. சாதாரண தினங்களில் கூல்ட்ரிங்கின் உள் வைத்து நாம் உறிஞ்சும் ஸ்ட்ராவின் அளவிற்கே திறந்திருக்கும் இந்த ஸெர்விக்ஸ் துவாரம் இப்போது பாப்பாவைக் கடத்துவதற்கு ஆறு அங்குலம் அகலமாக வேண்டும். கர்ப்ப வாசலில் உள்ள அத்தனை தசைகளும் மகத்தான மாறுதல்கள் பெறுகின்றன. எல்லாமே நீண்டு மென்மைப்படுகின்றன. பாப்பா போகும்போது கஷ்டப்படாமல் இருப்பதற்குப் புதுசு பண்ணப்பட்ட ரத்தக் குழாய்களின் மூலம் அங்கே உள்ள டிஷ்யூக்களில் கிளைகோஜென் திரவம் கசிகிறது. அது சற்று நேரத்தில் குளுகோசாகி லாக்டிக் அமிலமாகிவிடுகிறது. குழந்தை பிறக்கும்போது அந்த இடத்தில் பாக்டீரியா இல்லாமல் பார்த்துக்கொள்வதற்கு.

ஹார்மோன்களின் பாதிப்பில் பெல்விக் எலும்புகளைப் பிடித்து இழுத்து வைத்திருக்கும் தசைநார்கள் இளகுகின்றன. பெல்விக் இணைப்புகள் அகலப்படுகின்றன.

அம்மா, ''போய் பாட்டியைக் கூப்பிடுடா'' என்றாள்.

''ஏம்மா என்னமோ மாதிரி பாக்கறே?''



சுஜாதா

''பாட்டியைக் கூப்பிடுடா, உங்கப்பாவைக் கூப்பிடு. அம்மா ஆஸ்பத்திரிக்குப் போகணுமாம்னு சொல்லு.''

மது கீழே ஓடிப்போகஅம்மா சற்று வாகாக உட்கார்ந்தாள். அவளுக்குக் கவலை ஏதும் ஏற்படவில்லை. இப்போதுதான் ஆரம்பம். இன்னும் பல மணி நேரங்கள் ஆகும். அவளுக்குத் தெரியும். அம்மா முதல் குழந்தையின்போதுதான்சற்றுச் சிரமப்பட்டாள். மற்றதெல்லாம் டாண்டாண் என்று இடுப்பு வலி ஏற்பட்ட எட்டாவது மணி நேரத்தில் பிறந்திருக்கிறார்கள். ''வாடி பொண்ணே!'' என்று தன் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சொல்லிக் கொண்டாள்.

முதல் வலி லேசாகத்தான் இருக்கும். அம்மாவுக்கு இது தெரியும். லேசாக ஒரு நிமிஷம் வலிக்கும். அப்புறம் சரியாகிவிடும். அரை மணி கழித்துத்தான் அடுத்த முறை வரும். ''எல்லாம் சரியாக இருக்கிறதா? நான் வரப்போகிறேன்'' என்று எச்சரிக்கை வலி அது.

அவள் தலை கீழாக இருந்தாள். கைகளைக் குறுக்கிக் கொண்டு இன்னும் அவசரப்படவில்லை. ஒவ்வொரு வலி, பந்திலும் மெல்ல மெல்லத் தலையை வாசலில் முட்டினாள். கொஞ்சம் கொஞ்சமாக வாசல் பெரிசாகட்டும். அம்மாவுக்கு வலிக்கும் என்று அதற்குத் தெரியுமோ என்னமோ மொத்தம் எட்டு மணி நேரமாகும் என்று தெரியுமோ என்னவோ அவசரப்படுவதாகத் தெரியவில்லை.

ஸெர்விக்ஸ் வாசல் பூராவும் திறந்ததும் அவளைச் சுற்றியிருந்த திரவப் பை உடைந்தது. அவள் வெளியே புறப்படத் தயாராகி விட்டாள்.

வெளியே அம்மா டாக்ஸியில் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச்செல்லப்பட்டாள். உடனே அட்மிட் ஆகிப் பக்கத்தில் நின்ற நர்ஸ் 'முக்கும்மா, முக்கும்மா'' என்று வற்புறுத்திக்கொண்டிருந்தாள். பாப்பா மெல்லத் தலையை ஸெர்விக்ஸ்பெரினியம் என்றுநுழைத்துக் கடந்து அவள் மண்டை எலும்புகள் இன்னும் இளகலாகவே இருந்ததால் அந்த வழிக்கு ஏற்பத் தலை சற்று ஷேப் மாற்றிக் கொண்டது. ஏற்கனவே மூன்று பிள்ளை பெற்றிருந்ததால் இந்தப் பிரசவத்தில் அம்மா அதிகம் கஷ்டப்படவில்லை. சரியாக நாற்பத்தி ஐந்து நிமிஷத்தில் குழந்தை வெளி உலகத்தைச் சந்திக்கத் தயாராகிவிட்டது.

அபாயகரமான கணம் அது. பாப்பாவின் சுவாசப் பைகள் காற்றிழந்த பலூன்போல இருந்தன. இதுவரை அதற்குத் தேவையான பிராண வாயு முழுவதும் அம்மாவிடமிருந்தே கிடைத்து ஜாலியாக இருந்து விட்டது. இப்பொழுது சொந்தமாகச் சமாளிக்க வேண்டும். குழந்தையின் ரத்தம் கூட இதுவரை சுவாசப் பைக்குப் போகவில்லை. இப்போது அனுப்பியாக வேண்டும்.

வெளியே வந்தவள் அழுக்குக் கலரில் கண்களைச் சுருக்கிக் கொண்டு என்ன என்னவோ திரவங்கள் எல்லாம் வழிந்துகொண்டு ஈரமாக, அதைத் தலைகீழாகத் தொங்கப் போட்டுப் பின் பக்கம் தட்ட 'ங்ே' என்று அழ ஆரம்பித்தது. மூக்கு நுனி ரொம்பச் சிவப்பாக இருந்தது. பார்க்க நன்றாகவே இல்லை. தொப்புள் கொடி வேறு! இப்போதெல்லாம் உடனே வெட்டி விடுவதில்லை. பிறப்புக்கு அப்புறம் ஒருசில நிமிஷங்கள் கழித்து அம்மாவிடமிருந்து கடைசி ரத்த சட்டையை வாங்கிக் கொண்ட பின்தான் வெட்டினார்கள்.

இதுவரை சிக்கலில்லாமல் சென்றுகொண்டிருந்த பிரசவம் இப்போது பாதை மாறியது. பிறப்புக்குப் பின்னும் கொஞ்ச நேரம் பிளாசெண்ட்டா கர்ப்பப் பையின் மேற் பகுதியுடன் இணைந்துதான் இருந்தது. இணைந்திருந்த அந்தப் பகுதியில் ஏகப்பட்ட ரத்த நாளங்கள் இணைந்துதானிருந்தன. இந்தச் சமயத்தில் வழக்கமான பிரசவத்தில் உடம்பு கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கொண்டு விட்டு பிளாசெண்ட்டாவை உதறி எறிய –மறுபடி வெளியேற்ற அசைவுகளைத் துவக்க வேண்டும். கர்ப்பப் பை சரிவரச் சுருங்கி அந்த ரத்த இணைப்புக்களை சீல் அடிக்க வேண்டும். அம்மாவுக்கு அப்படி ஆகாமல் எங்கோ அட்டவணையில் தப்பாகி உடனே அந்த அசைவுகள் ஏற்பட்டுப் பெருவாரியாக ரத்தம் கசிய ஆரம்பித்து விட்டது. நர்ஸ் டாக்டருக்குத் தகவல் சொல்ல ஓடிப்போக

---

**உடல் முழுவதும் அரிப்பு எடுத்துச் சொறிந்து கொண்டு இருக்கத் தோன்றுகிறதா?**

**. மருதோன்றி இலையையும் சிறிது மஞ்சளையும் சேர்த்து வைத்து அரைத்து உடல்முழுவதும் தேய்த்து, சிறிது நேரம் ஊறிய பின்பு, குளித்து விடுங்கள்: அரிப்பு நின்றுவிடும்.**

**எஸ். எஸ். மணியம்**



டாக்டர் மற்றொரு பிரசவம் பார்க்கப் போயிருந்ததால் புதிதாகச் சேர்ந்த அவள் அஸிஸ்டண்ட் வந்து பார்க்க, அவள் ''திஸ் ஈஸ் நார்மல்'' என்று சொல்லிப் போய் விட்டாள்.

அம்மா கண்ணை மூடிக்கொண்டு மயக்கத்தில் இருக்க மிக வேகமாக ரத்தம் இழந்து கொண்டிருந்தாள். ஜுரம் வந்து விட்டது. பக்கத்தில் படுத்திருந்து லேசாகக் கத்திக் கொண்டிருந்த அந்தப் புதியவளுக்கு இதெல்லாம் தெரிய நியாயமில்லை. ஒரு பிளாஸ்திரியில் 3456 என்று நம்பர் எழுதி அதன் முழங்கையில் ஒட்டி யிருந்தார்கள். அவள் ஏழு பவுண்டு இருந்தாள். பத்தொன்பது அங்குல நீளமிருந்தாள். அதில் கை கால் எல்லாம் ரொம்பக் குட்டை. இப்போது எலும்பைத் தொட்டுப் பார்த்தால் ரப்பர் போல இருக்கும். முதுகெலும்பைத் தொட்டாலே நீண்டு விடும்போல அவ்வளவு இளக. மணிக்கட்டு எலும்புகள் இன்னும் ஆரம்பிக்கக் கூட இல்லை. தலை மேல் சொட்டையாக ஒரு அவசர முடி. தசைகளில் பலமே இல்லை. அதற்காகத் தேகப் பயிற்சி செய்வது போல இப்போதே கையைக் காலை ஆட்டத் தொடங்கிவிட்டாள்.

பிற்பாடு ஏற்படப்போகும் நிறத்துக்குச் சம்பந்தம் இல்லாமல் இப்போது சற்றே பழுப்புக் கலந்த நீலமாகக் கண்கள். அம்மா பூர்ண மயக்கத்தில் இருந்தாள். அப்பா சாக்லேட் வாங்க எதிர்க்கடைக்குப் போயிருந்தார். பெண் என்றதும் சற்று குஷி. புதியவளின் உடல் சற்று அதிக உஷ்ணமாக இருந்தது. அம்மணமாக, ஈரமாக, வந்தவளை இப்போது துணி சுற்றின நர்ஸ் ''அம்மா! எப்படி இருக்கீங்கம்மா, இப்ப தேவலையா?'' என்று கேட்கக் கேட்கப் பதில் இல்லாமல் போக பல்ஸ் பிடித்துப் பார்த்த போது பல்ஸ் இல்லை. புதிதாக மாற்றப் பட்டிருந்த பெட்ஷீட்டில் அதிகப்படியாக ரத்தக் கறை படிந்திருக்க, படுக்கை ஓரத்திலிருந்து ரத்தம் சொட்டுச் சொட்டாக சொட்டுவதைப் பார்த்துப் பதறிப்போய் ஓடினாள். டாக்டர் வந்து பார்த்தபோது அம்மா இறந்திருந்தாள்.

அப்பா எதிர்க் கடையில் சாக்லேட் வாங்கிவிட்டு, உடுப்பி ஹோட்டலில் பசித்ததால் ஒரு தோசை சாப்பிட்டுவிட்டுப் பெண்ணுக்கு என்ன பெயர் வைப்பது என்று யோசித்துக் கொண்டே சாலையைக் கடந்து நாப்பது வாட் பல்பு வெளிச்ச காரிடாரையும் எத்தனையோ படுக்கைகளில் வயிறுடன் படுத்துக் கொண்டிருந்தவர்களையும் கடந்து கோடி மூலையில் திரும்பினபோது ''எங்க போயிட்டீங்க! உங்களை எல்லோரும் தேடிக்கிட்டிருக்கோம்.'' என்று நர்ஸ் சொல்ல ஏன் என்று கேட்க, ''சீக்கிரம் போங்க அம்மாவுக்கு ஆபத்து'' என்றாள். அங்கே போய்ச் சேர்ந்த போது ஏகப்பட்டபேர் படுக்கையைச் சூழ்ந்



வெந்நீர் போடும் கெட்டிலில் உள்ளே சில சமயம் கறை படிவது உண்டு. இதைத் தடுக்க ஒரு சுத்தமான கருங்கல் அல்லது சலவைக்கல்துண்டை கெட்டிலுள் போட்டு உபயோகித்தால் கறை போய் விடும்.

ஜனனி முரளி

---

இருக்க, பெரிய டாக்டர் ''என்ன சாந்தா ஹௌ கன் யூ கன்க்ட் லைக் தட்!'' என்று சத்தம் போட்டுக் கொண்டிருக்க அப்பா, ''டாக்டர்! என்ன ஆச்சு?'' என்றார்.

''வாங்க! சரியான சமயத்தில எங்கே போயிட்டீங்க? நீங்களாவது கொஞ்ச நேரம் பார்த்துக்கிட்டு இருக்கக் கூடாதா?''

''என்ன டாக்டர்... குழந்தைக்கு ஏதாவது?''...

''குழந்தை நல்லாத்தான் இருக்கு. அம்மாதான்....''

அப்பா, அம்மாவின் மார்பில் நேராக ஊசி ஏற்றப்படுவதையும், அவள் மார்பை மூர்க்கத்தனமாக, முரட்டுத்தனமாக அவர்கள் பிசைவதையும் பார்த்து திட்டுக்கப்போனார். ''அச்சச்சோ! அச்சச்சோ!'' என்பதைத் தவிர சட்டென்று அப்பாவுக்கு ஒன்றும் சொல்ல வரவில்லை. அம்மா கண்ணைத் திறக்காமல், உடம்பை அசைக்காமல் படுத்திருந்ததும், அவர்கள் சிகிச்சையின் அசைவுகளுக்கு ஏற்ப அவள் உடல் ஒரு ஜடப் பொருள்போல் ஆடுவதும் அப்பாவுக்கு வயிற்றில் பயமாக இருந்தது. அம்மாவின் பெயர் சொல்லிக் கூப்பிட்டார். டாக்டர்கள் அவர் இருப்பதைக் கவனிக்கவில்லையோ என்னவோ கூடிக் கூடிப் பேசிக் கொண்டார்கள். அப்பாவுக்கு உள்ளம் பதைத்தது. ஆக்ஸிஜன் சிலிண்டர் வேகமாக உருண்டு வந்தது. அதைப் படுக்கை அருகே கொண்டு வர பெரிய டாக்டர், 'வேண்டாம்ப்பா அவசியமில்லே'

அப்பா அம்மாவின் [illegible] சென்ற போது வெளியே பாட்டியும் [illegible] தகளும் சைக்கிள் ரிக்ஷாவில் வந்து இறங்கினார்கள்.

புதியவள் [illegible] கனபமல தூங்கிக் கொண்டிருக்க... (தொடரும்)

# பெயரில் என்ன இருக்கிறது?

லக்ஷ்மி

பெயரில் என்ன இருக்கிறது? ஒரு ரோஜா மலரை வேறு எந்தப் பெயரால் அழைத்தாலும் அதே மணத்தைத்தானே தரும்? என் தாத்தா ஷேக்ஸ்பியர் படித்தவர் இல்லை. அவரது குலதெய்வம் சீர்காழித் தலத் தெய்வம் திரிபுரசுந்தரி. தமது அருமைப் பேத்திக்கு அந்தப் பெயரைச் சூட்டி விட்டார். பின்னர் பேத்தியான அடியேன் வளர்ந்து பள்ளிக்கூடத்துக்குப் போகத் தொடங்கிய பின்னர்தான் என் பெயரைப் பற்றிய கவலை ஆரம்பமாகியது.

அகல்யா, அமுதா என்ற 'அ' எழுத்தில் தொடங்கியிருந்தால் பெயர் அழைக்கப் 'பிரசண்ட் டீச்சர்' என்று உற்சாகமாக நான் குரலெழுப்பியிருப்பேன். பெயர்ப் பட்டியலில் மூன்றாவது பகுதியில்தான் ஆசிரியை என் பெயரை அழைப்பார். அதுவரை நான் காத்திருக்க வேண்டியிருந்தது.



எனக்கு இது பள்ளி நாட்களில் பெருங் குறையாகத் தென்பட்டது. மேலும் அந்தக் காலத்தில் உஷா, சரோஜா என்ற பெயர்கள் நாகரிகமாகக் கொண்டாடப்பட்டபோது முழு நீட்ட அளவில் கடவுளின் பெயர் என்று எனக்குத் தாத்தா பொறுக்கி எடுத்துச் சூட்டியிருந்த பெயரை எண்ணி நான் குமைந்தேன்.

கான்வென்ட் பள்ளியில் ஹைஸ்கூல் படிப்பை முடிக்கச் சேர்ந்தபோது எனக்கு என் பெயர் கட்டோடு பிடிக்காமலே போய் விட்டது.

கான்வென்டிலிருந்த கன்னிகா ஸ்திரீகளின் (வெள்ளைக்காரிகள்) வாயில் என் பெயர் மிகவும் சிரமப்பட்டது. சரித்திர ஆசிரியரான ஒரு பிரெஞ்சு சிஸ்டர் என்னை 'தர்பர்ஸண்டரி' என்று அழைத்தபோது, வகுப்பில் கலீர் என்ற சிரிப்பு ஓசை எழும்பியது. எனக்குக் கோபமும் அழுகையுமே வந்து விட்டது. இந்தத் தாத்தா இப்படியா சதி செய்வார்? என்று உள்ளூற வெகுண்டு போனேன். அது சமயம் நான் ஒரு தடவை என் தந்தையிடம் என் பெயரை மாற்றி வைக்க வேண்டும் என்றுகூடக் கேட்டுப் பார்த்தேன். ''பள்ளி ரிஜிஸ்டரில் பதிவாகியிருக்கிறது. எஸ். எஸ். எல். சி. புத்தகத்தில் இடம் பெற்று விட்டது. கடவுள் பெயர்... ஏன் மாற்றணும்?'' — அதட்டினார் கோபத்துடன். வாயை மூடிக் கொண்டேன்.

வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தபோது கூட எனக்கு என் பெயர் மனத்தை உறுத்திக் கொண்டுதான் இருந்தது. என் பெயர் கொண்ட வேறு ஒரு மாணவி அதை வெட்டிப் பாதியாக்கி சுந்தரி என்று வைத்துக் கொண்டிருந்தாள். அதைக் கண்டு எனக்குப் பொறாமையாகத்தான் இருந்தது.

நான் வைத்தியக் கல்லூரியில் முதல் ஆண்டு மாணவியாகப் படிக்கும்போதே எழுதத் தொடங்கி விட்டேன். முதலாவதாக ஒரு சிறு கதையை எழுதி ஆசிரியருக்கு அனுப்ப நினைத்தபோது என் உண்மைப் பெயரைப் போட்டுக் கொள்ள நான் விரும்பவில்லை. முதலாவது அந்தப் பெயர் நீட்டமாக இருந்தது. இரண்டாவது காரணம் கூடப் படிக்கும் மாணவர்களுக்கு நான் கதை எழுதுவது தெரிந்து விட்டால் வகுப்

பிலே என்னைக் கேலி செய்து கலாட்டா செய்வார்கள் என்றதொரு அச்சம்! லக்ஷ்மி என்ற புனை பெயருக்குள் (என் பாட்டியின் பெயர்) புகுந்துகொண்டு விட்டேன். இன்னொரு பிரச்னை கல்லூரி வகுப்புப் பெயர்ப் பட்டியலில் என் பெயர் ஆங்கில எழுத்து வரிசைப்படி மூன்றாவது பகுதியில் வந்து நின்றது. அதனால் நேர்முக வினா விடைத் தேர்வின்போது நான் 'சி' என்ற பகுதியில் ஒதுக்கப்பட்டேன்.

ஆரம்பத்தில் தேர்வு அதிகாரிகள் மாணவ மாணவிகளிடம் அத்தனை கடுமையான கேள்வியைக் கேட்க மாட்டார்கள். காலை ஆகாரம் சாப்பிட்டுக் குஷியான மனநிலையில் இருப்பார்கள். சிரித்துக் கொண்டே கேள்விகள் கேட்பார்கள், நேரம் செல்லச் செல்ல, கேள்விகள் கேட்டு வாய் அலுத்து வயிறு பசியில் சுருளும்போது எரிச்சலோடு இருப்பார்கள். அப்போதுதான் 'சி' பகுதி மாணவ மாணவிகள் கேள்விகளுக்காக உள்ளே அனுப்பப்படுவார்கள். பரீக்ஷை அதிகாரிகள் கடைசியாக வரும் அந்த மாணவ மாணவிகளைக் கேள்விகள் கேட்டுப் புலியாகச் சீறுவார்கள். சில சமயம் அந்தக் கடைசி மாணவக் குழந்தை சட்டென்று பதிலளிக்கத் தொடங்கிய காரணத்திற்காகப் பெயில் ஆக்கி விடுவார்கள். இப்படியெல்லாம் எங்களுக்குள் பரீட்சை அதிகாரிகளைப் பற்றி ஒரு கணிப்பு இருந்தது.

ஐய்யய்யோ! என் பெயரால் நான் 'சி' பகுதிக்குத் தள்ளப்பட்டு விட்டேனே என்று புலம்பிக் கொண்டு சிங்கத்தின் குகையில் நுழைவது போல ஒவ்வொரு தேர்வின் போதும் நடுநடுங்கிக் கொண்டு நேர்முக வினா விடைக்குப் போய் வெற்றியோடு வெளி வந்ததை இப்பொழுது நினைத்துச் சிரித்துக் கொள்கிறேன்.

டாக்டர் திரிபுரசுந்தரியும் எழுத்தாளர் லக்ஷ்மியும் ஒருவர்தான் என்பது அப்போது பலருக்குத் தெரியாது.



வைத்ய உலகில் திரிபுரசுந்தரியாக இருந்த போதுதான் மதிப்பு ஏற்பட்டது. லக்ஷ்மியை நோயாளிகள் கண்டு கொள்ளவில்லை. எழுத்து உலகில் 'லக்ஷ்மி' என்ற முத்திரைக்குத்தான் மதிப்பு இருந்தது. திரிபுரசுந்தரி என்று போட்டிருந்தால் கதைகள் பிரசுரிக்கப்பட்டிருக்குமோ என்னமோ சந்தேகம்!

தென் ஆப்பிரிக்காவுக்குப் போனபோது அங்கேயும் என் பெயர் எனக்குப் பெரும் பிரச்னையாகத்தான் இருந்தது. என்னுடன் கூட வேலை பார்த்த டாக்டர்கள் (வெளி நாட்டவர்கள்) அவர்கள் வாயில் பெயர் புரள மறுத்தது.

ஒருசிலர் என்னை டாக்டர் சுந்தா...தா...ரீரீ... என்று அழைக்கத் தலைப்பட்டனர். ஆனால் நான் வேலை பார்த்த ஆஸ்பத்திரியின் தலைவர் எனக்கு ஒரு புதுப் பெயர் கொடுத்துவிட்டார். பெயரில் உள்ள 'முக்கிய எழுத்துக்களை' மட்டும் வைத்து டாக்டர் 'டி.பி.எஸ்.' என்று அழைக்க ஆரம்பித்தார். பின்னர் வைத்தியர், நண்பர்கள், தொழிலதிபர்கள் எல்லோருக்கும் நான் டாக்டர் டி.பி.எஸ். ஸாக மாறிவிட்டேன். இன்னமும் இந்தப் பெயரில் எனக்கு நண்பர்கள் அன்புடன் கடிதம் எழுதிக் கொண்டிருக்கின்றனர்.

முதல் முதலாகப் பல ஆண்டுகளுக்குப் பின்னர் என் பெயர் எனக்கே இனிமையாக ஒலித்த ஒரு புது அனுபவம் அந்த நாட்டில் தான் ஏற்பட்டது.

காச நோய் ஆஸ்பத்திரியிலிருந்து ஸ்கூல் மெடிகல் இன்ஸ்பெக்ஷன் எனும் பகுதிக்குப் பணி செய்ய என் வேலையை மாற்றினார்கள். ஆயிரக் கணக்கான பிரைமரி ஸ்கூல் பள்ளி மாணவ மாணவிகளைப் பரிசோதனை செய்து நான் கல்வித் தலைமை அதிகாரிக்குப் பள்ளிக் குழந்தைகளின் ஆரோக்கியம் — கட்டிடங்களின் அமைப்பு இத்யாதி பற்றிப் பொறுப்பான நீண்டதொரு அறிக்கையை அனுப்ப வேண்டிய வேலை அது.

ஒரு பள்ளிக்கூடத்தில் நான் மாணவ–மாணவிகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்த போது என்னுடன் கூட வேலை செய்த நர்ஸ் உள்ளே வந்தாள்.

உங்களுக்கு ஒரு சிறு அதிசயம் தரப் போகிறேன். சொல்லிக் கொண்டே பள்ளிச் சிறுமி ஒருத்தியை உள்ளே அழைத்து வந்தாள்.

பளிச்சென்ற சீருடையுடன் சிரித்த முகத்துடன் பட்டாம்பூச்சியாக உள்ளே வந்த மாணவியைப் பார்த்தேன்.

திக்கு வாய் என்பது போன்ற ஊனம் உள்ளதா என்று அறியப் பரிசோதனையின் போது நான் பேச்சுக் கொடுத்துக் கொண்டிருப்பது வழக்கம்.

அதே போல 'உன் பேர் என்னம்மா குழந்தை?' கேட்டுக் கொண்டே ஸ்டெதஸ்கோப்பைக் கையில் எடுத்தேன்.

'திரிபுரசுந்தரி' என்றாள். தூக்கி வாரிப் போட்டது எனக்கு. தென் ஆப்பிரிக்காவில் மாகி, ஜாய், ரோஸி என்று பெயர் வைத்துக் கொள்ள விரும்பும் கூட்டத்திலே... வாயில் நுழைய முடியாத கடினமான பேர் என்று பிரசித்தி பெற்றிருந்த என் பெயரை இந்தக் குழந்தைக்கு ஏன் வைத்திருக்கிறார்கள்? இதனால் வருங்காலத்தில் இந்தக் குழந்தைக்கு எத்தனை பிரச்னை... கல்லூரி, அலுவலகம் என்று எல்லா இடத்திலும் இந்த நீண்ட பெயர் குளறுபடி செய்யுமே?

''யாரும்மா உனக்கு இந்தப் பேர்வச்சா?'' வேடிக்கையாக நான் கேட்டேன்.

''எங்கம்மாதான் வச்சாங்க இது சாமி பேர். அத்தோட இந்த ஊரில் இதே பேரில் இந்தியாவிலிருந்து வந்த ஒருடாக்டரம்மா இருக்காங்களாம். அவங்க ரொம்பத் தமிழ் படிச்சவங்களாம். அம்மா சொன்னாங்க. எனக்குஇந்தப் பெயர் ரொம்பப் பிடிக்கிறது. இதே பேரில் இந்த நாட்டில் நாங்கரெண்டே பேர்தான் இருக்கோம்.....'' சிறுமி சொல்லி விட்டு மகிழ்ந்தாள்.

''திரிபுரசுந்தரி! நீ கெட்டிக்காரி. நல்லா படி.... ஒரு சங்கதி தெரியுமா? நான்தான் உங்கம்மா சொன்ன அந்த டாக்டர்.'' சிறுமியிடம் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

மறுநாள் அந்தச் சிறுமி தன் தாயுடன் ஒரு கொத்து ரோஜா மலருடன் என்னைப் பார்க்க வந்தாள்.

''உங்கள் பெயரைக் கேட்டு ஆசைப்பட்டு என் குழந்தைக்கு அதை வச்சேன். அவளை ஆசீர்வதியுங்கள். அவளும் உங்களைப் போல நிறையத் தமிழ் படிக்கணும்.. டாக்டராகணும்'' என்றாள் தாயார்.

முதல் முதலாக என் பெயர் எனக்குக் கேட்க அன்று மிகவும் இனித்தது.

எழுத்தாளர் உலகில் என் புனை பெயருக்கு ஒரு மகிமை இருப்பதை நான் அறிவேன்.

அது எழுத்துத் திறமையால் ஏற்பட்ட தகுதியல்ல. செல்வத்தை அள்ளித் தரும் திருமகளின் பெயர் என்ற நம்பிக்கை தந்ததொரு பதவி!

பிரபல பத்திரிகை ஒன்றின் முக்கிய மனிதரான ஒருத்தரை நான் அவசரமாகத் தொலை பேசியில் கூப்பிட நேர்ந்தது. அது ஒரு வெள்ளிக் கிழமை காலைவேளை.

யார் அது? அப்பா வேலையா இருக்கார். மறுபக்கம் அவர் பெண்ணின் குரல் வினவியது.

''லக்ஷ்மி கூப்பிடறேன்னு சொல்லும்மா.'' அவ்வளவுதான். ஹலோ... நமஸ்காரம்... என்று மறு பக்கம் வந்துவிட்டார் அவர்.''

''வெள்ளிக் கிழமை லட்சுமி அழைத்தால் வேண்டாம் பிறகு வா என்று சொல்வார்களா?'' என்றபடி தொலைபேசியில் மறு பக்கத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விட்டார்!

பெயரில் என்ன இருக்கிறது? என்று கேட்டால் ரொம்ப ரொம்ப விஷயங்கள் இருக்கின்றன என்பேன் நான்.

---

குடிக்கும் நீர் சிறிது உப்பாக இருந்தால் ஒரு துண்டு படிகாரத்தைப் போட்டுவைத்துப் பிறகு குடியுங்கள்.

ஹோமியோபதி:

# தலைவலி போய் திருகுவலி வராது!



"ஐயோ டாக்டர், மண்டையைப் பிளக்கிறதே தலைவலி! பொறுக்க முடியவில்லை. வாயைத் திறந்தால்கூட வலி அதிகரிக்கிறது" என்று கூறிக்கொண்டே வந்தார் ஒருவர். அவருக்குத் தினமும் காலையில் எழுந்திருக்கும்போதே கூடவே தலைவலியும் வந்துவிடுகிறதாம். முக்கியமாக இடது புறம் நெற்றியில் வலி போடு போடென்று போடுகிறதாம். நேரம் ஆக ஆக வலி அதிகரித்துக்கொண்டே போகிறதாம்.

"எல்லா வைத்தியமும் பார்த்துவிட்டேன். ஒன்றிலும் குணமாகவில்லை. இது குணமே ஆகாதா டாக்டர்? இதோடுதான் நான் அவஸ்தைப்பட்டு வாழ்ந்து சாக வேண்டுமா?" என்று பரிதாபமாகக் கேட்டார் அந்த நோயாளி.

"கவலைப்படாதீர்கள். குணமாகாத தலைவலி என்பது எதுவும் கிடையாது. எல்லாத் தலைவலிக்கும் ஹோமியோபதியில் மருந்து இருக்கிறது. ஆனால் பொறுமையாகத் தொடர்ந்து மருந்து சாப்பிட வேண்டும்" என்று நான் கூறினேன்.

அவர் கூறிய அறிகுறிகளைக் கொண்டு ஸ்பைஜிலியா என்ற மருந்தை கொடுத்து அனுப்பினேன். அடுத்த வாரமே "தலைவலி சரியாகி விட்டது டாக்டர்" என்று சொல்லிக் கொண்டே அகமும் முகமும் மலர வந்து அவர் என்னை வாழ்த்தி விட்டுச் சென்றார்.

"தலைவலியா? எங்கள் கம்பெனி மாத்திரை இரண்டை ஒரு டம்ளர் தண்ணீரோடு சாப்பிடுங்கள். இதோ ஐந்தே நிமிடத்தில் தலைவலி பறந்து விட்டது" என்ற விளம்பரத்தைத் தினசரி பத்திரிகைகளிலும் ரேடியோவிலும் பார்க்கிறோம், கேட்கிறோம். ஆனால் அந்த மாத்திரைகளைச் சாப்பிட்டால் குறையும் தலைவலி, வேறு கோளாறுகளை அல்லவா உண்டாக்கி விடுகிறது? தலைவலி குறைந்தாலும் மண்டை கனத்துக் கொண்டு விடுகிறது. கழுத்துப் பகுதியை ஏதோ அழுத்துவது போல் இருக்கிறது. தலைவலி போய், திருகு வலி ஏற்பட்ட கதை உண்மையாகிவிடுகிறதே! போன தலைவலி மீண்டும் மீண்டும் வருகிறதே. மாத்திரை சாப்பிட்டு பழக்கப்படுத்தி விட்டால் சில நாட்களில் இரண்டு மாத்திரைகள் என்பது நான்காகி அதிகரித்துக் கொண்டே போகிறதே.

ஆகவேதான் தலைவலி மட்டும் அல்ல, எந்த உடல் கோளாறாக இருந்தாலும் அதற்கான மூல காரணம் என்ன என்பதைக் கண்டறிந்து அதைச் சரிசெய்ய ஹோமியோபதி முயற்சி செய்கிறது.

தலைவலி என்றால் எல்லோருக்கும் ஒரே மாதிரி தலைவலியா வருகிறது? இன்று டாக்டர்களிடம் வருகிற நோயாளிகளில் பாதிப் பேருக்கு மேல் தலைவலியால் அவதிப்படுகிறவர்கள் இருக்கிறார்கள். சாதாரண ஜலதோஷ தலைவலியிலிருந்து மூளையில் புண் ஏற்பட்டு அதனால் வருகிற தலைவலி வரை எத்தனையோ ரகமான தலைவலிகள் உண்டு.

தலைவலி எங்கள் பரம்பரைச் சொத்து. அதைக் குணப்படுத்தவே முடியாது என்று எவ்வளவோ பேர் சொல்வதைக் கேட்டிருக்கிறோம். இது முக்கியமாக ஒற்றைத் தலைவலி விஷயத்தில் பெரிதும் நம்பப்படுகிற ஒன்று. இந்த ஒற்றைத் தலைவலி உள்ளவர்கள் பெருமைப்பட்டுக்கொள்ள ஒன்று சொல்ல விரும்புகிறேன். மூளை வளர்ச்சி மிகுந்துள்ளவர்களுக்குத்தான் இந்தத் தலைவலி பெரிதும் வருகிறது என்று ஆராய்ச்சியில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளதால், இதற்கு 'அறிவாளிகள் தலைவலி' என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

ஒற்றைத் தலைவலிக்கு முக்கிய காரணம் கவலையினால் ஏற்படும் மூளைக் கொதிப்புத்தான். பொதுவாகவே எதற்கெடுத்தாலும் கவலைப்படுவதைக் குறைத்துக் கொண்டு, வாழ்க்கையைச் சுலபமாகச் சந்திக்கப் பழகிக் கொண்டாலே தலைவலி ஏற்படுவதைப் பாதி அளவு குறைக்கலாம்.

உடலில் ஏற்படும் அறிகுறிகள் மட்டும் இன்றி, எண்ணத்தில், உணர்வுகளில் ஏற்படும் அறிகுறிகளையும் கவனத்தில் கொண்டு அவைகளுக்கும் ஒட்டு மொத்தமாகத்தான் ஹோமியோபதியில் மருந்து தேர்ந்தெடுத்துக் கொடுக்கப்படுகிறது. எனவே தலைவலியை மட்டும் கவனத்தில் எடுத்துக்கொண்டு மருந்து கொடுத்து விடுவதில்லை. உதாரணத்துக்குக் கூற வேண்டுமானால், தலைவலிக்கு குளோனைன், சைலிக்மென், சாங்குனேரியா ஸ்பைஜீலியா, பெல்லடோனா, நக்ஸ், வாமிகா, பிரையோனியா

இபிகாக்குவானு, மெர்க்கூரியஸ், பல்ஸடில்லா போன்ற ஏராளமான மருந்துகள் ஹோமி யோபதியில் உள்ளன.

தலைவலி என்று சொன்னால் மட்டும் போதாது. முதலில் நோயாளியின் உடல் வாகு பற்றிக் கவனிக்க வேண்டும். தலைவலி வருவதற்கு முன் அந்த நோயாளி என்ன வேலை செய்தார், என்ன சாப்பிட்டார், அவருடைய மனம் எந்த நிலையில் இருந்தது, துக்கமாகவா, சந்தோஷமாகவா, அதிர்ச்சியுடனா, கவலையாகவா என்பது போன்ற விஷயங்கள் கவனிக்கப்பட வேண்டும். அவருடைய குடும்பத்தில் இது போன்ற வியாதி வேறு யாருக்காவது இருந்திருக்கிறதா என்று கேட்டறிய வேண்டும். தலைவலி எந்த நேரத்தில் உச்ச கட்டத்தை அடைகிறது என்பது முக்கியமாகக் கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயம்.

---

## வீட்டுக்கு உதவும் குறிப்புக்கள்



கண்ணாடிப் பாத்திரங்களிலோ பாட்டில்களிலோ எதையாவது சூடாக வைக்கவோ விடவோ வேண்டுமென்றால், அவற்றை ஒரு மரப் பலகையின் மீது ஒன்றோடொன்று இடிக்காமலிருக்கும் வண்ணம் வைத்த பிறகு சூடாக விடவும். இப்பொழுது எவ்வளவு சூடாக விட்டாலும் அவை உடையாது.

பருப்பு தீய்ந்து போய் ஒருவித-வாசனை அடித்தால் இன்னொரு பாத்திரத்தில் அதைப் போட்டுப் புதியதாய் நீர் ஊற்றி இரண்டு வெற்றிலையுடன் சேர்த்துக் கொதிக்க வைத்தால், தீய்ந்து போன வாசனை மறைந்து போகும்.

ஷாம்பூ போட்டுக் குளிக்கும் நுரையில் சீப்பைக் கழுவினால் எண்ணெய்ப் பசை நீங்கி சீப்பு பளபளப்பாக இருக்கும்.

முட்டைக் கோஸைக் கத்தியால் நறுக்குவதைக் காட்டிலும் தேங்காய் துருவியினால் சீக்கிரம் பொடியாகத் துருவி விடலாம். நேரம் அதிகம் பிடிக்காது. விரைவிலும் வெந்துவிடும்.

தயிரை இரண்டு மூன்று நாட்கள் கெடாமல் வைத்திருக்கத் தயிரினுள் தேங்காயைப் பல்லுப் பல்லாகச் சீவிப் போடுங்கள். தயிர் புளிக்கவும் செய்யாது. நாற்றமும் அடிக்காது.

தொகுத்து அனுப்பியவர்:
செல்வி உமா ராமச்சந்திரன்

---

ஆகவே, தலைவலியா, இந்த மாத்திரையைச் சாப்பிடுங்கள் என்று சொல்லக்கூடிய அளவுக்கு ஹோமியோபதி சிகிச்சை அவ்வளவு சுலபம் அல்ல.

ஆனால் ஒன்றை மட்டும் நிச்சயம் சொல்ல முடியும். ஹோமியோபதி மருந்து சாப்பிடுபவர், தலைவலி போய் இருகு வலி வந்து விடுமோ, ஒரு நோய்க்கு மருந்து சாப்பிட்டால், அது இன்னொன்றில் கொண்டு விட்டு விடுமோ என்று அஞ்ச வேண்டியதில்லை. ஏனென்றால், உடலில் உள்ள எல்லாக் கோளாறுகளையும் ஒட்டு மொத்தமாக கணக்கிட்டுப் பழுதடைந்திருக்கும் உடல் செயல் முறைச் சக்தியைச் சரிசெய்யத்தான் ஹோமியோபதியில் மருந்து கொடுக்கப்படுகிறது.

மேலும் ஹோமியோபதி மருந்து சாப்பிடுவதால் இருதய நோய் வந்துவிடுமோ, சர்க்கரை வியாதி வந்துவிடுமோ, கண் கெட்டு விடுமோ என்று பலவாறாக அஞ்ச வேண்டியதில்லை. அப்படி ஏதும் கெடுதல் விளைவிக்கும் குணம் ஹோமியோபதி மருந்துகளுக்குக் கிடையாது. முன்னமே சொன்னது போல் மருந்துப் பொருட்களை அப்படியே கொடுக்காமல் மருந்தின் குணப்படுத்தும் வீரிய சக்தியைத்தான் ஹோமியோபதியில் கொடுக்கிறோம்.

எல்லா அறிகுறிகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டுதான் மருந்து கொடுக்க வேண்டும் என்றாலும், தலைவலியில் சில ரகங்களையும் அதற்கான மருந்துகளையும் உதாரணத்துக்குக் கொடுத்துள்ளேன்.

| | |
|---|---|
| இடது பக்கத் தலைவலி | —ஸ்பைஜீலியா |
| வலது பக்கத் தலைவலி | —சாங்குனேரியா |
| ஜலதோஷத்துடன் கூடிய தலைவலி | —நக்ஸ்வாமிகா |
| தூக்கத்தில் ஏற்படும் தலைவலி | —சீபியா |
| பின் மண்டையில் ஆரம்பித்து முன் பக்கம் மூக்கில் வந்து முடியும் தலைவலி | —பல்ஸடில்லா |
| வெயிலில் போய் வந்தால் ஏற்படும் தலைவலி | —குளோனின் |

இப்படியாகத் தலைவலிக்கு இன்னும் எவ்வளவோ மருந்துகளை, அதோடு கூட ஏற்படும் அறிகுறிகளுக்கு ஏற்பக் கொடுக்கலாம்.

பெண்களைப் பொறுத்தவரை தலைவலி மட்டும் அல்லாமல் வேறு எந்தவித உடல் கோளாறும் அவர்களது மாதவிலக்கு எப்படியுள்ளது என்பதைப் பொறுத்தே இருக்கும். ஆகவே பெண்களுக்கு ஏற்படும் உடல் நலக் குறைவுக்குச் சிகிச்சை அளிக்கும்போது அவர்களது மாதவிலக்கு பற்றிய விவரங்களைக் கேட்டறிய வேண்டும்.

மாத விலக்கு பற்றி என்னென்ன கோளாறுகளுக்குப் பெண்கள் ஆளாகிறார்கள் என்பதையும் அவைகளுக்கு என்ன மருந்து கொடுக்கலாம் என்பதையும் அடுத்த இதழில் பார்க்கலாம்.

# தாய்ப் பாலுக்குப் பின்...

'மாயா'

வீட்டு வேலை செய்யும் ராணி பெருக்கிக் கொண்டிருந்தாள். பின்கட்டில் ஒரு குழந்தை அழும் சத்தம். ''யாரு அது குழந்தை? நம்ம வீட்லயா?'' என்றதும் ''ஆமா.எம் புள்ளெ தான். கோவாலு'' என்றாள் ராணி. ஆவலோடு ஓடினேன், அந்தக் குழந்தையைப் பார்க்க.

கொழு கொழுவென்று, கரளை கரளையாகக் கையும் காலும், கருட்டை முடியும், கொட்டைப் பாக்கு விழிகளுமாக, நாலு மாதத்திலிருந்த கோபால், இப்போ பத்து மாதத்துக்கு எப்படி வளர்ந்திருப்பான்? எட்டிப் பார்த்தவள் திடுக்கிட்டுப் போனேன். மங்கலாக, பிசிறு பிசிறான தலைமுடி, தோள்கள் சிறுத்து, மார்பு கூடுகட்டி, வயிறு உப்பி, குச்சி கால் கையும் உதற, வியாதியாக உப்பியிருந்த முகத்தில் சிடுசிடுப்பும் அழுகையும் குமுற வாயோர வெளுப்புடன்—

''அடிப் பாவி! நல்லா இருந்த குழந்தையைக் குச்சியாப் பண்ணிட்டியே இப்படி?'' நான் அலறியதற்குச் சாவகாசமாகப் பதில் அளித்தாள் அவள்.

''அட போ, நீ ஒண்ணு! முழுவாம இருந்து கூட இன்னும் பாலு குடுக்கறேன். என்னக் கூடச் சாப்பிட விடாம தட்டுச் சோறு திங்குது. கண்டதையும் பொறுக்கி வேறே திங்குது. ஒரு மாசமா வயத்தாலே போகுது. தோசம் பட்டிருக்கும்னு முடி கயிறு கூடப் போட்டிருக்கேன்....''

அவள் பேசப் பேச என் எரிச்சல் இன்னும் அதிகமாயிற்று. 'இந்த அறியாமைகளை நாம் என்று, எப்படி விரட்டப் போகிறோம்?'

'எதிர்கால இந்தியப் பிரஜைகளை நோஞ்சான்களாகத்தான் நெளிய விடப் போகிறோமா?'

உணவு — உயிர் வாழ்வதற்காக மட்டுமல்ல. அறிவிலும் ஆரோக்கியத்திலும் வலிமை பெற்றுத் திட வாழ்வு வாழவே நாம் உண்கிறோம். அதிலும் நூற்றுக்கு நூறு நம்மையே நம்பி இருக்கும் இளம் சிசுக்களை ஆரோக்கியமான சிறுவர்களாக வளர்க்க வேண்டியது நம் கடமை இல்லையா?

விலைவாசிக் கொடுமை, பலவித சமூக, சமுதாயப் பிரச்னைகள், துரித வாழ்க்கை, போன்ற சிக்கல்களின் நடுவே நாம்; அந்த ஒன்றுமறியா இளம் குருத்துக்களை, ''கேட்கவா போகின்றன? ஒரு வேளைதானே, தவறினால் என்ன?'', ''வயிறு நிரம்பி விட்டதே போறுதா... என்ன தொண தொணப்பு?'' என்கிற மனப்போக்கில் சிறிது அசட்டை செய்து விட்டோமானால் கூட—

நம் நாட்டின் எதிர்காலத்தையே பயங்கரமானதொரு பள்ளத்தில் தள்ள ஒரு விரலசைத்துவிட்ட படு பாதகத்துக்கு உள்ளாகிறோம். உலக ஏழை நாடுகளை விடவும் மோசமான நிலையில் இந்தியக் குழந்தைகள் இன்று வளர்கின்றன. இயற்கையிலேயே பாரம்பரியமாக, குள்ள உருவம் கொண்ட ஜப்பானியர், தங்கள் குழந்தைகளின் சத்துணவில் தீவிர கவனம் செலுத்தியதன் பலன் — இன்றைய தலைமுறையையே அதிக உயரம் கொண்டவர்களாக்கி விட்டனர்.

இந்தியாவிலோ ஊட்டச் சத்துக் குறைவினால் கண் பார்வை இழத்தல், உடல் ஊனமுறுதல், மன வளர்ச்சி குன்றுதல்,



◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# ஓரிகமி வாழ்த்து

(பழைய காலண்டர், புத்தகங்கள், வாழ்த்து அட்டைகள் செய்யும் விதம்)

கவர்ச்சிகரமான வாழ்த்து அட்டைகள் தயாரிப்பதற்கு இது ஒரு விநோதமான முறை. ஜப்பான், தாய்லாந்து, மற்றும் இந்தோனேஷியாவின் அழகான பெண்கள் இவ் அட்டைகளின் விநோதத்தையும் கவர்ச்சியையும் குறிக்கின்றன.

**தேவையான பொருட்கள் :**

பழைய காலண்டர், புத்தகம், வாழ்த்து அட்டைகள், கலர் காகிதம், பல் குத்தும் குச்சி, பெவிகால், ஸ்கெட்ச் பேனா.

**செய்முறை :**

மூன்றும் ஒரே விதமாகச் செய்யப்படுகின்றன:

தலைக்கு:

தடிமனான பேப்பரில் தலையையும், மற்றும் அந்தந்த நாட்டுக்குத் தகுந்த தலைமுடி மாதிரி வெட்டிக்கொண்டு, பல் குத்தும் குச்சியின் தட்டையான பாகத்தில் பெவிகால் வைத்து ஒட்டவும்.

உடம்பு:

நீண்ட சதுரமுள்ள 5—3'' அளவில் கலர் பேப்பரை எடுத்துக் கொண்டு, படத்தில் கொடுத்துள்ள மாதிரி மடித்துக் கொள்ளவும். மடிப்பு கலர் இல்லாத பக்கத்தில்தான் இருக்க வேண்டும். அந்த நாட்டுக்குத் தகுந்த மாதிரி கலர் பேப்பரால் அலங்கரிக்கவும். உதாரணம்: ஜப்பான் தேசத்து பெண்மணிக்கு அகலமான பட்டையும், மீதி இரண்டுக்கு மெல்லிதான பட்டையும் இருக்க வேண்டும். பல் குத்தும் மறு முனையை அதற்காக இருக்கும் இடத்தில் நுழைத்து விடவும். தலை மயிர், உடம்பு உருவம் வரையவும். வரைந்ததை வெள்ளை பேப்பரில் ஒட்டி இரண்டாக மடித்து உள்ளே உங்களுக்குப் பிடித்த வாழ்த்துக்களை எழுதவும். செலவில்லாத கவர்ச்சிகரமான வாழ்த்துக்-கார்டு தயாராகி விட்டது.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தொற்று நோய் — என்றெல்லாம் நாளைக்காயிரம் குழந்தைகள் பாதிக்கப்பட்டு எதிர் காலத்தில் பெருமைப்படத் தக்க பிரஜைகள் நஷ்டமாகிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தத் தொடரிலேயே மிக முக்கியமான பகுதியாக, ''தாய்ப் பாலுக்குப் பின் குழந்தையின் உணவு'' என்னும் இப்பகுதியை நான் கருதுகிறேன். சகோதரிகளே, இதை நீங்கள் படித்து, ஒருவேளை, ''நமக்குத் தெரிந்ததுதான்'' என்று நினைக்கலாம். ஆனால் ஒவ்வொருவரும் இதையறியாத பத்துப் பேருக்கு இதன் முக்கியத்துவத்தை எடுத்துப் புரியும்படி விளக்க வேண்டும் என விரும்புகிறேன்.

''வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா'' என்பது எத்தனை மாதம் வரையில்? சுமார் மூன்று, நான்கு மாதத்துக்கு மேல், அசுர வேகத்தில் வளரும் — வளரக் கூடிய — ஒரு சிசுவுக்குத் தாய்ப் பால் மட்டுமே முழுத் தேவையைச் சமாளிக்க முடியாது. தேவையான கோலரிச் சத்து முழுமையும் அளிக்கவும் இயலாது. மூன்று மாதம் வெறுமே படுத்திருக்கும் சிசு, அதற்குப் பின் திரும்பி, விளையாடி, தவழ்ந்து, நீந்தி, எத்தனையோ வளர்ச்சிப் படிகளில் ஏறுகிறது. அந்த நிலையில், வைட்டமின்கள், புரத சத்துக்கள் தாதுப் பொருள்களை இதர உணவுகள்தான் அந்தக் 'குட்டி மனிதனுக்கு' அளிக்க முடியும்.

படிப்படியாக அதன் நாலாம் மாதத்திலிருந்து ஒரு குழந்தைக்குத் தாய்ப் பாலைக் குறைத்து, மற்ற குழைவு உணவு மற்றும் திட உணவுகளையும் தகுந்த அளவில் சேர்க்க ஆரம்பிப்பது அவசியம். இதை weaning stage என்கிறோம். இந்த நிலையில் காட்டப்படும் அசட்டை அல்லது அறியாமையே குழந்தையின் ஆரோக்கியக் கேட்டுக்கு அடிகோலி விடுகிறது.

தாய்ப் பாலிலோ, மற்ற எந்த டப்பா உணவிலோ வளர்ந்து வரும் ஒரு குழந்தைக்கு மூன்றும் மாதத்திலிருந்து வேறு உணவுகளைச் சிறிது சிறிதாகச் சேர்க்க வேண்டும். ஆனால் அடிப்படை பாலுணவு 500 மில்லி லிட்டர் அளவில் கட்டாயம் தொடர வேண்டும்.

மூன்றும், நான்காம் மாதத்தில் தானிய உணவை ஆரம்பித்து விடலாம். நொய்யரிசி, சன்னமாய் உடைத்த கோதுமை, கேழ்வரகு, கம்பு இவற்றில் ஏதேனும் ஒன்றை நன்றாக வேகவிட்டுக் கஞ்சியாக்கி, சர்க்கரை அல்லது சுத்தமான பனங்கற்கண்டு சேர்த்துக் கொடுக்க ஆரம்பிக்கலாம். பழச்சாறு, பழக் கூழ் கொடுக்க ஆரம்பிக்கலாம். ஆப்பிளை வேகவைத்து மசிப்பது, வாழைப் பழத்தை மசிப்பது, 2, 3 களை சாத்துக்குடியைப் பிழிந்த சாறு அல்லது தக்காளியைப் பிழிந்து வரக் கூடிய சாறு இவை இந்தப் பட்டியலில் அடங்கும். இப்போது இந்தத் தானியக் கஞ்சித் தூள் கை படாமல் தயா

ரிக்கப்பட்டு டின்களிலும், விற்பனையாகிறது. வெளிப் பிரயாணங்களுக்குச் செல்கையிலோ அல்லது வேலையைச் சுலபமாக்கவோ பெரும்பாலோர் இந்த cereal food களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். வசதி உள்ளவர்கள் இவற்றை உபயோகப்படுத்துவதில் நன்மையே. பொதுவாகப் புழுங்கரிசியைக் களைந்து சுத்தம் செய்து சன்ன நொய்யாக்கி அவ்வப்போது காய்ச்சிக் கொள்வது உகந்தது.

குழந்தை ஐந்தாம் மாதத்தில் நுழையும் போது மேற்கண்ட உணவுகளுடன் கீரை, பட்டாணி, காரட், உருளை போன்ற காய்கறிகளைச் சுத்தமாக வேக விட்டு மசித்துக் கஞ்சியுடன் கலந்தோ, 'சூப்' போலச் செய்தோ கொடுக்கலாம். இப்போது முட்டையின் மஞ்சள் கருவை மிகச் சிறிய அளவில் கொடுத்துப் பார்க்கலாம். பழச்சாற்றின் அளவு சிறிது சிறிதாக உயர்த்தப்பட்டு ஒரு டம்ளர் அளவில் பழச்சாறு இந்த மாதங்களில் கொடுக்கலாம்.

ஆறு முதல் எட்டு வாரங்கள் ஆன குழந்தை தானிய, பருப்புக் கலவை (பருப்பு) சாதம், பொங்கல், மற்ற ஏதோ தானியமும் கலந்த கஞ்சி, தயிர், முட்டை, ரொட்டி, தரமான பிஸ்கெட் – பாலுடன் கலந்து மிருதுவாக்கிய பின் – கொடுக்கலாம்.

முட்டையை முன் கூறியதுபோல் மிகச் சிறிய அளவில் மஞ்சளும், பிறகு படிப்படியாக அதிக அளவில் மஞ்சளும் பின்பு வெள்ளையும் மிகச் சிறிய அளவில் கலந்து கொடுக்க வேண்டும். அதையும் நன்றாகச் சமைத்த முட்டையே கொடுப்பது முக்கியம்.

ஒன்பது மாதத்தில் கரகரப்பான பிஸ்கட், ரஸ்க் முதலியவற்றைக் கொரிக்கவென்று கையில் கொடுக்கலாம். இந்த நிலைக்கு நன்கு மசித்த மாமிசத் துண்டுகளைச் சிறிய அளவில் கொடுக்க ஆரம்பிக்கலாம்.

ஒரு வயதில் மசாலாக்களைத் தவிர்த்து அதிக எண்ணெய் வைத்துப் பொரித்தவை, மிகக் கடினமான ஆகாரம் தவிர, சாதாரணமாகத் தனக்குப்பிடித்தவைகளை மற்ற சாதாரணப் பெரிய குழந்தையைப் போலவே சாப்பிடும்படி விட்டு விடலாம். ஆனால் எப்போதுமே குழந்தைகள் உணவில் நாம் நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டிய விஷயம்– சிறிய அளவில் அடிக்கடி உணவூட்டலாம். ஆனால் ஒரே சமயத்தில் கட்டாயப்படுத்தித் திணிப்பது தவிர்க்கப்பட வேண்டிய விஷயம்.

வேலை செய்யும் பெண்கள், சீக்கிரம் தாய்ப்பால் வற்றிவிடும் பெண்கள், தாய்ப்பாலுக்குப் பின் தன் குழந்தையின் பால் தேவையை எப்படி ஈடுகட்டலாம்? மூன்று மாதமும் தாய்ப் பால் அருந்திய குழந்தைக்குப் பசும்பாலை மாற்று உணவாக ஆரம்பிக்கும்போது கொதிக்க வைத்து, ஆறிய வெந்நீர் கலக்க வேண்டும். போகப் போக நீரின் அளவைக் குறைத்து முழுப் பாலாகவே கொடுக்கலாம்.



**யோசனை**

உடலில் நெருப்புப் பட்ட அல்லது கொதிக்கும் பதார்த்தம் பட்ட இடத்தில் பெருங்காயத்தை உரைத்துப் பூசவும். கொப்பளம் கிளம்பாது. எரிச்சலும் நிற்கும்.

உங்கள் கை நகம் பார்க்கச் சிறிதாகவும் விகாரமாகவும் இருந்தால் மூன்று, நான்கு நாள் அவற்றின் மீது ஸ்பிரிட் பூசி வரவும். அவை அழகாகவும் பெரிதாகவும் வளரும்.

துணிக்கு நீலம் போடும்போது நீலம் கரைத்த ஜலத்தில் சிறிது வாஷிங் சோடா கலந்துகொண்டால் நீலம் இட்டுத் திட்டாகவோ, அல்லது புள்ளி புள்ளியாகவோ துணியைப் பற்றாது.

எலுமிச்சம் பழத் தோலைக் காயவைத்து இடித்து உப்புச் சேர்த்து வைத்துக்கொள்ளவும். தினசரி அப்பவுடரில் நல்லெண்ணெய் சேர்த்துப் பல் துலக்கி வரவும். பல் பளபளவென்று ஆவதோடு வாய் நாற்றமும் நீங்கிவிடும்.

—சாந்தி இராமசாமி.

தாய்ப் பாலோ, டின் பாலோ எதுவானாலும் அருந்தும் குழந்தைக்கு மூன்று முதல் ஆறு மாதத்துக்குள் பழச் சாறு கொடுக்க ஆரம்பித்து விடுவது நலம். பலமான எலும்புகள், நோயில்லாத சுறு வளர்ச்சிக்கு வேண்டிய வைட்டமின், தாதுப் பொருள்கள் அப்போதுதான் குழந்தைக்குக் கிடைக்கும். பச்சைத் திராட்சை, தக்காளி, சாத்துக்குடி, கமலா ஆரஞ்சு என அந்தந்த சீஸனுக்குக் குறைவான விலைக்குக் கிடைக்கும் பழங்களை இதற்கு உபயோகிக்கலாம். பழங்கள் கிடைக்காத ஊரிலிருப்பவர்கள், பழம் வாங்க வசதியற்றவர்கள் கீரை, முட்டைகோஸ் போன்ற இலைக் காய்கறிகளை வேகவைத்த சாற்றை வடிகட்டி, 'சூப்' செய்து கொடுக்கலாம்.

இந்தியக் குழந்தைகள் பெரும்பாலும் தாக்கப்படுவது வைட்டமின் 'ஏ' சத்துக் குறைவினால்தான். கர்ப்பிணிகளும் பால்

கொடுக்கும் தாய்மார்களும் உண்ணும் உணவில் இந்தக் குறைபாடுகள் பெரிய அளவில் உள்ளதாலேயே குழந்தைகளுக்கும் இது நேரிடுகிறது. பாலிலும் இந்த 'ஏ' அதிக அளவில் இல்லை. ஆதலால் மீன் எண்ணெய் (காட்லிவர் ஆயில், ஷார்க்லிவர் ஆயில்) ஏதாகிலும் கால் ஸ்பூன் அளவில் நாலு மாதக் குழந்தையிலிருந்து கொடுக்க வேண்டும்.

தாய்ப் பாலுக்குப்பின் மாற்றுணவு ஆரம்பிக்கும்போது கவனிக்கப்பட வேண்டியவை:

1. ஒரு சமயத்தில் ஒரு புதிய உணவை மட்டுமே அறிமுகப்படுத்துங்கள். அந்த உணவைச் செரித்துப் பழக்கமான பின் மற்றதைச் சேர்க்கலாம். இந்த முறையினால், எந்த உணவு உங்கள் குழந்தைக்கு ஒத்துக் கொள்ளவில்லை என்பதையும் புரிந்துகொள்வது சுலபம்.

2. புதிதாகச் சேர்க்கப்பட்ட உணவு குழந்தைக்குப் பிடிக்கவில்லையெனில் உடன் சில நாட்களுக்கு நிறுத்திவிட்டு மறுபடி தொடரவும். கட்டாயப்படுத்தி எதையும் திணிக்க வேண்டாம்.

3. எந்த உணவாவது ஒத்துக் கொள்ளாமல், ஜுரம், மேல் தோலில் கொப்பளம், பேதி போன்றவை ஏற்பட்டால் உடனே அதை நிறுத்திவிட்டு, மருத்துவரிடம் குழந்தையைக் காட்டுங்கள்.

4. மசாலாப் பொருட்கள், முழு இனிப்புப் பட்சணங்கள், மிளகாய் இவை குழந்தை உணவில் சேரக் கூடாதவை. பால், கஞ்சியில் கூட சர்க்கரை மிகத் தேவைக்கு மட்டுமே சேரலாம். உப்பு சிறு அளவில் சேர்ப்பது கெடுதல் இல்லை.

புட்டிப் பால் கொடுக்கும் பெண்கள், சுத்தமான பாத்திரங்கள், பாட்டில், ரப்பரை உபயோகப்படுத்துங்கள். (கொதிக்கவைத்த நீரில் கழுவுங்கள்)

---

## யோசனை

கத்திரிக்கோல் மழுங்கி விட்டதா? உப்புக் காகிதத்தைக் கத்திரியுங்கள்! கூர்மை வந்து விடும்!''



கொதிக்கவைத்து ஆறிய சுத்தமான தண்ணீரைத் தினமும் மூன்று முறையாவது குழந்தைக்குச் சிறிய அளவில் பருகக் கொடுக்கவும்.

பேதி, காய்ச்சல் குழந்தையைத் தாக்கும் போது தினசரி உணவு முறையை, மருத்துவரைக் கலந்து தக்க முறையில் மாற்றிக் கொள்ளுங்கள். அந்தச் சமயத்தில் நீங்களாகவே குழந்தையைப் பட்டினி போட வேண்டாம். உடல் நலம் சீரடைந்த பின் பழையபடி தொடருங்கள்.

சாதாரண முறைகளுக்கு மிக வித்தியாசமான குழந்தைகள் உண்டு. சிலவற்றுக்குப் பாலே ஒத்துக்கொள்ளாது. வேறுசில இம்மாதிரி சராசரி உணவு ஒத்துக் கொள்ளாத குழந்தைகளுக்குக்கென்றே சில உணவு வகைகள் உள்ளன. வேர்க்கடலைப் பால், சோயா பீன்ஸ்பால் போன்றவை பாலுக்கு மாற்றாகத் தரப்படுகின்றன. இப்போது மருத்துவ மனைகளிலும் இவற்றைத் தயாரிக்கிறார்கள். இது போன்ற குறைபாட்டினால் அவதியுறும் குழந்தைகளின் உணவு விஷயத்தில் அதிகமான கவனம் தேவை. ஒரு குழந்தை வைத்திய நிபுணரையோ, உணவுத் துறை நிபுணரையோ கலந்து உங்கள் குழந்தையின் இயலாமைகள், மாற்றுணவு முறைகளைப் பற்றி மிக நன்றாகக் கேட்டுப் புரிந்துகொள்ளுங்கள்.

உங்கள் குழந்தைக்காக நீங்கள் எடுக்கும் கவனம் போதுமானதா, தேவையான சத்துக்களைப் பெற்று அது ஆரோக்கியமாக வளருகிறதா என எப்படி அறிவது?

உங்கள் வைத்தியரிடம் மாதா மாதம் குழந்தையின் உயரம், எடை இவற்றில் போதுமான வளர்ச்சி, மாற்றம் தென்படுகிறதா எனச் சோதிக்கக் கூறுங்கள். குழந்தையின் தலை சுற்றளவு, புஜத்தின் சுற்றளவு, தேவையான சதைப் பிடிப்பு உள்ளதையும் சரி பார்க்கக் கூறுங்கள்.

ஆரோக்கியமான குழந்தையின் மேல் தோல் மிருதுவாகவும் இயற்கையான, லேசான பளபளப்புடனும் இருக்கும். சொர சொரப்பான, மங்கலான, கடினப்பட்ட மேல் தோல் சத்துக் குறைவைக் காட்டும். சரியான அளவு பால், பச்சைக் கறிகாய்கள் உண்ணும் குழந்தைக்குச் சரியான நேரத்தில் பலமான பற்கள் வளர்ச்சி பெறும். புழுங்கலரிசி நிறத்தில் பளபளப்பாக அவை இருக்கும். நல்ல ஊட்டம் பெறும் குழந்தையின் கண்கள் பிரகாசமாக, மிருதுவாக, காணும். தலை முடி ஆரோக்கியமாக, மிருதுவாக, பளபளப்பாகக் காணப்படும். எலும்பு பலமாக, தேவையான, சரியான உருக்கொண்டு, வளைவுகள், தொய்வு இல்லாமல் வளரும்.

பொதுவாகக் குழந்தை சிடுசிடுக்காது. உடலளவிலும், மனத்தாலும் நிறைவாக, சந்தோஷமாக, மாதத்திற்கேற்ற அறிவுவளர்ச்சி விளையாட்டுக்களுடன் இருக்கும்.

## உங்களுக்கு உதவியாக, ஒரு வருஷத்திற்கான குழந்தை உணவு அட்டவணை :—

| உணவுப் பொருட்கள் | முதல் 4 வாரங்கள் | முதல் மாதம் | இரண்டாம் மாதம் | மூன்றும் மாதம் | 4 ம் மாதம் | 5 – 6 மாதங்கள் | 7 வது மாதம் | 8 – 10 மாதங்கள் | 10 – 12 மாதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தாய்ப்பால் அல்லது வேறு பால் உணவு | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ (அளவு | ✓ குறைகிறது) | ✓ | ✓ |
| பழச்சாறு (வடிகட்டியது) | | | | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| மீன் எண்ணெய் அல்லது வைட்டமின் 'ஏ' டானிக் | | ✓ | ✓ கால் | ✓ டீஸ்பூனிலிருந்து | ✓ உங்கள் | ✓ மருத்துவர் | ✓ | ✓ ஆலோசனைப்படி | ✓ |
| சுூழாக்கிய காய்கறிகள், பழங்கள் | | | | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| மசித்த கீரை முதலியன | | | | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| கூழாக்கிய தானிய உணவு | | | | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |
| முட்டையின் மஞ்சள் கரு | | | | | | ✓ ¼ | ✓ ½ | ✓ ½ | ✓ ¾ |
| மசித்த முட்டை அல்லது மசித்த பருப்பு வகைகள் | | | | | | | ✓ | ✓ | ✓ |
| மீன், மாமிசம்—மசித்தவை | | | | | | | | ✓ 1 டேபிள் ஸ்பூன் | ✓ 1½ – 2 டேபிள் ஸ்பூன் |
| சப்பாத்தி, அல்லது கடை ரொட்டி – மசித்து பாலுடன் | | | | | | | ✓ | ✓ | ✓ |
| சர்க்கரை, தேன், பனங்கற்கண்டு, சுத்தமான வெல்லம் முதலியன | | | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ | ✓ |

# மேஜை விரிப்பு




**தேவையான பொருட்கள்:**

கோட்ஸ் ஆங்கர் முறுக்கப்பட்ட பருத்தி நூல் Coats Anchor Standard Cotton (மதுரை கோட்ஸ் தயாரிப்பு)

பச்சை நிறத்தில் Mascat green 0279 6 சிட்டம். 6 Skeins

ஜேட் (Jade) 4 சிட்டம்-0188

பச்சை நிறத்தில் Mascat green 0281 3 சிட்டம்.

ஜேட் (Jade - 0186)

அரஞ்சு 0326.

முழு அமைப்புக்கும் நூலை நான்காக உபயோகிக்கவும். 1.50 மீ.மீ. சரியாக நெய்யப்பட்ட எம்பிராய்டரி துணி 21 நூலிலிருந்து 2.5 செமீ, 150 செமீ. அகலம். எம்பிராய்டரி ஊசி எண் 24 (Tapestry needle) மையத்தை இருபுறமும் ஒட்டுத் தையலால் குறிக்கவும். வரை படமானது ஏ மற்றும் பி என்று குறிக்கும். மூலைத் திருப்பம் சி என்று குறிக்கும். மையமானது காலியான அம்புக் குறியில் குறிக்கப்பட்டுள்ளது. அது ஒட்டுத் தையலுடன் சேர்ந்து இருக்க வேண்டும்.

துணியில் இரண்டு நூலை மேல் எடுத்து அதில் அமைப்பு முழுவதும் குறுக்குத் தையலால் செய்ய வேண்டும். முக்கியமானது என்னவென்றால் மேல் பாதியிலுள்ள எல்லா குறுக்குத் தையல்களும் ஒரே பக்கமாக அமைய வேண்டும். வரைபடத்திலுள்ள அடிப் பக்கச் சதுரமானது துணியிலுள்ள 2 நூல்களைக் குறிக்கும். சின்ன கருப்பு அம்புக் குறியிலிருந்து அமைப்பை ஆரம்பித்து 119 நூல்கள் கீழே மற்றும் 29 நூல்கள் ஒட்டுத் தையலின் வலது பக்கத்திலிருந்து ஏ மற்றும் பியையும், கொடுத்தபடி செய்து மறுபடியும் உட்புற எல்லையை ஒரு முறை இடதுபுறமாகச் செய்யவும்.

ஏ மற்றும் பியை மறுபடியும் செய்துவிட்டு மூலை திருப்பம் சியை அமைக்கவும். அமைப்பின் கால் பாகத்தை முடிப்பதற்கு ஒட்டுத் தையலை வரிசைக் கிரமமாக செய்ய வேண்டும். எம்பிராய்டரி முடிந்ததும், பின் பக்கம் திருப்பி, இஸ்திரி செய்யவும். திருப்பி 2.5 செமீ. அகலத்திற்கு ஹெம் செய்து, நழுவுத் தையலால் முனையை முடிக்கவும்.

நிர்மலா தேசிகன்



முழு நாவல்—

# கமனீய கனவுகள்..

—இந்திரா பார்த்தசாரதி

தில்லி மாரிஸ் நகர் பஸ்டாப்பில் காத்துக்கொண்டிருந்த கல்யாணியின் மனம் சந்தோஷத்தால் நிறைந்திருந்தது. அவள் முதலில் அகில இந்தியப் பல்கலைக் கழகக் கவிதைப் போட்டியில் கலந்து கொள்வதாகவே இல்லை. போட்டி எதுவானாலும் அது ஒருவகை விலங்கினப் போராட்டம்தான் என்பது அவள் எண்ணம். இலக்கியம் என்பது ஒவ்வொருவருடைய தனிப்பட்ட கலை அநுபவம். இவ்வநுபவங்களைத் தராசிலிட்டு, எதனுடைய எடை அதிகம், எதனுடைய எடை குறைவு என்று தீர்மானம் செய்வது எவ்வளவு கொச்சைத்தனமானதுஎன்றுதான் அவள் ஆரம்பத்தில் நினைத்தாள். ஆனால் அவள் இனிய தோழி ரேணுவின் நச்சரிப்புத் தாங்க முடியாமல் போட்டிக்கு ஒரு கவிதையை அனுப்பி வைத்தாள். அதற்குத்தான் முதல் பரிசு என்று கல்லூரித் தலைவர் காலையில் நடந்த கூட்டத்தில் அறிவித்தபோது, சக மாணவர்களும், மாணவிகளும் கைதட்டி இச் செய்தியை வரவேற்றபோது, போட்டிகளைப் பற்றிய அவளுடைய கொள்கை எதுவாக இருந்தாலும், அவள் மனத்தைத் திடீரென்று ஆக்கிரமித்த அந்த மகிழ்ச்சி உணர்வு, அவளுக்குச் சிறிது ஆச்சரியத்தைத் தந்தது. ஒவ்வொருவருக்குள்ளும் இந்த விலங்கு உணர்ச்சி எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கின்றது என்பதை ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்.

வெளிச்சம் தன்மீது படாமல், ஒதுங்கியே நின்று பழகிய அவளுக்கு, அரங்கத்தின் மத்தியில் ஒளிப் பிழம்பு அவளை ஆவேசமாய் அறிவிக்க, எல்லோருடைய பார்வையும் அவள் மீது லயித்திருக்கிறதென்ற அநுபவம் கூச்சத்தைத் தந்தது. மாணவர்களும், மாணவிகளும் அவளிடம் வந்து தனிப்பட்ட முறையில் பாராட்டுக்கள் தெரிவித்தபோது, இயந்திர ரீதியாகப் புன்னகை செய்து அவள் அவற்றை ஏற்றுக் கொண்டாளே தவிர, அவள் அடி மனத்தில் ஏற்பட்ட ஒரு சங்கட உணர்வை அவளால் தவிர்க்க முடியவில்லை. கவிதைகளாக வெளிவந்த அவளுடைய சின்னச் சின்னக் கனவுகள் வியாபாரச் சந்தைக்கு வந்து விட்டன. முதல் பரிசு பெற்றிருக்கும் இக்கனவின் விலை மூவாயிரம் ரூபாய்.

இருப்பினும் அவள் மனம் சந்தோஷத்தால் நிறைந்திருக்கின்றது என்பதை அவளால் மறுத்துவிட முடியுமா? சந்தோஷத்துக்குக் காரணம் அவள் கனவுக்குச் சமூக அந்தஸ்து ஏற்பட்டிருக்கிறது என்பதுதான்... வணிக பாஷையில் இதைச் சொல்ல முடியுமென்பதுதான் மனத்தை லேசாக உறுத்துகிறது.

ரேணு அவளை இறுகக்கட்டிக்கொண்டாள். பரிசு அவளுக்குக் கிடைத்துவிட்டாற்போன்ற ஆனந்தம். கல்யாணி போட்டியில் கலந்து கொள்ள முதலில் மறுத்தது பற்றியும், பிறகு, தான் எப்படி அவளைக் கட்டாயப்படுத்திப் போட்டியில் பங்கேற்கச் செய்தாள் என்பது பற்றியும், அலுப்புச் சலிப்பு இல்லாமல் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருந்தாள். ரேணுவின் இலக்கிய ரஸனையைப் பொறுத்த விஷயமல்ல இது. சொல்லப்போனால் அவளுக்கு இலக்கியத்தில் ஈடுபாடே கிடையாது. காமிக்ஸ், மில்ஸ் அண்ட் பூன், எனிட் ப்ளிட்டன் — இந்தப் புத்தகங்களைத் தாண்டி, இலக்கிய உலகத்துக்குள் அவள் எட்டிப் பார்த்ததே கிடையாது. ஆனால் கல்யாணியிடம் அவளுக்கு அப்படியொரு பிடிப்பு — அவள் எழுதும் கவிதை நன்றாகத்தான் இருக்க வேண்டும் என்ற அப்படியொரு அசாத்திய நம்பிக்கை.

கவிதையைப்படித்து, 'இது மிகவும் நன்றாக இருக்கிறது. அனுப்பு' என்று தான் சொன்னதாகவும் அவள் ஜம்பம் அடித்துக்கொள்ளவில்லை. 'கல்யாணி எழுதும் கவிதை எனக்குப் புரியாவிட்டாலும் கல்யாணியை நான் புரிந்து கொண்டிருக்கிறேன். அதனால்தான் அனுப்பு என்று அவளை வற்புறுத்தினேன்' என்று அவள் எல்லோரிடமும் சொன்னாள்.

இரண்டு பெண்களுக்கிடையே ஆழ்ந்த நட்புணர்வு இருக்க முடியாதென்று அவள் எங்கேயோ படித்திருக்கிறாள். தற்காப்புணர்விலேயே பெண்கள் வளரும்படியாகச் செய்துவிட்ட, ஆண் ஆதிக்கம் செலுத்தும் சமுதாயப் பாரம்பரியப் பிரக்ஞைதான் இதற்குக் காரணம் என்று சொல்லுவார்கள். ரேணுவுக்கும் அவளுக்கும் இடையே உள்ள சிநேகிதம், மனித வாழ்க்கையை இத்தகைய வறட்டுக் கொள்கைகளுக்குள் அடைத்துவிட முடியாது என்பதைத்தான் காட்டு

கிறது. முதல் சந்திப்பிலேயே இருவரும் நெருங்கிய சிநேகிதிகளாகி விட்டனர். குணப் பண்புகளும் இருவருக்கும் வேறு வேறானவை. ரேணு வெளிப்போக்கான மன இயல்புடையவள். உணர்ச்சிகளை ஆரவாரமாகத் தெரிவிப்பவள். அவள் எத்தனை தூரத்திலிருந்தாலும், அவள் சிரிப்பினின்றும் அவள் எங்கிருக்கிறாள் என்று கண்டு கொள்ளலாம். மனத்தடை ஏதுமில்லாமல் அவளால் பேச முடியும். அவளுக்கு நூற்றுக் கணக்கான நண்பர்கள் உண்டு. ஆண், பெண் என்ற பாகுபாடில்லை. என்றாலும் கல்யாணி தான் அவளுடைய 'பிரத்யேக சிநேகிதி!'

ரேணுவுக்கும் அவளுக்குமிடையே இருந்த பிணைப்பு பலரை ஆச்சரியத்துக்குள்ளாக்கியது என்பதும் அவளுக்குத் தெரிந்ததுதான். ஒரு சமயம் பல்கலைக் கழக 'காஃபி ஹவுஸில்' நடந்த சம்பவம் அவளுக்கு ஞாபகம் வந்தது.

...ஐந்தாறு பெண்களுடன் அங்கு உட்கார்ந்திருந்த ரேணு, 'காஃபி ஹவுஸ்' வழி குறுக்கு வழி என்பதால் அதைத் தாண்டிச் சென்று கொண்டிருந்த கல்யாணியைப் பார்த்ததும், அவளைக் கூப்பிட்டாள்.

கல்யாணி வந்து உட்கார்ந்ததும் ரமா சோப்ரா சொன்னாள்: ''ரேணு, எனக்கு ஒன்று புரியவில்லை. நீ தூங்கும் சமயங்களில் தவிர மற்றைய பொழுதில் வாயைமூடுவதில்லை. கல்யாணி வாயைத் திறந்து பேசி நான் பார்த்ததில்லை. எப்படி நீங்கள் இருவரும் இணை பிரியாத சிநேகிதிகளாக இருக்கிறீர்கள்?''

''உங்களுடைய அசட்டுத்தனமான பேச்சைக் காட்டிலும், அவளுடைய புத்திசாலித் தனமான மௌனம் எனக்குப் பிடித்திருக்கிறது'' என்றாள் ரேணு.

''அப்படியானால் உன் மீதே உனக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்க வேண்டுமே?'' என்றாள் கீதாஞ்சலி.

எல்லாரும் சிரித்தார்கள்.

''நீ சொல்வது சரிதான். உங்களுடைய அசட்டுப் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டு நானும் அசட்டுத்தனமாகப் பேசிக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறதே என்று நினைக்கும் போது என்மீதே எனக்கு வெறுப்புஏற்படுவதுண்டு. கல்யாணியின் பூப்போன்ற மென்மையான சுபாவம்தான் என் அடி மனத்துக் கனவாக இருக்க வேண்டும். அதனால்தான் அவள் மீது எனக்கு இவ்வளவு ஈடுபாடு'' என்று சொல்லியவாறு, கல்யாணியின் தோளைத் தொட்டாள் ரேணு.

''ஒரு வேளை....''என்று சொல்லி விட்டு, மேலே தொடராமல் நிறுத்தினாள் வீணா.

'' 'ஒருவேளை'... என்ன சொல்வேன்.''

''உன்னிடம் 'மேல் ஹார்மோன்ஸ்' கொஞ்சம் கூடவே இருக்கலாம்.''

''ஷட் அப்'' என்று சீறிக் கொண்டு எழுந்த ரேணுவின் கையைப் பற்றி இழுத்து உட்கார வைத்தாள் கல்யாணி. காஃபி ஹவுஸில் இருந்த மற்றவர்கள் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்று கல்யாணி உணர்ந்தாள். சிரிப்பும் கொம்மாளமுமாய் இருந்த அந்த அறையில் திடீரென்று ஏற்பட்ட அமைதி அதை உணர்த்தியது. ✱

''ஐ ஆம் ஸாரி, கல்யாணி. லெட் அஸ் கெட் அவுட். திஸ் ஜாயின்ட்...'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள் ரேணு.

கல்யாணியின் வீட்டிலும் அவளுக்கும் ரேணுவுக்கும் இடையே இருந்த நட்பு, அடிக்கடி விமரிசிக்கப்பட்ட ஒரு விஷயம். கல்யாணியின் அப்பா, அம்மா, கார் விபத்தில் திடீரென்று போய்விட்டார்கள். அப்பொழுது அவளுக்கு எட்டு வயது. அன்று முதற் கொண்டு அண்ணன் பொறுப்பில் வளர்ந்தவள். அவளுக்கும் அவள் அண்ணனுக்கும் பதினாறு வயது வித்தியாசம். அப்பா அம்மா போனபோது, நல்லவேளை, அண்ணா வேலையிலிருந்தான். அப்பா அம்மா



போய், இரண்டு வருஷங்களுக்குப் பிறகு கல்யாணம் செய்து கொண்டான். மன்னிக்கும் அப்பா கிடையாது. அம்மாதான். ஒரே பெண். ' அவளும் பெண்ணுடன் அந்த வீட்டில் குடியேறிவிட்டாள்.

அண்ணாவுக்கு இரண்டு குழந்தைகள். மூத்தவன் சுரேஷ், பத்து வயது. அடுத்தவள் பெண் சுமதி. ஆறு வயது. குழந்தைகள் பிறந்த பிறகுதான் மன்னியின் அம்மாவினுடைய குணம் தெரியத் தொடங்கியது. மன்னி அடிப்படையில் நல்லவள்தான். ஆனால் அம்மாவுக்கு அடங்கிய பெண்.

மன்னியின் அம்மா படித்திருந்தால் ஒரு பெரிய ராஜதந்திரியாக ஆகியிருப்பாள். அவளுக்கு எத்தனை முகங்கள் என்று அளவிட்டுச் சொல்ல முடியாது. 'இந்தத் தாயில்லாப் பெண்ணின் மீது எப்படிப் பாசத்தைப் பொழிகிறாள்' என்று உலகத்துக்குத் தோன்றும். அவளுடைய நிஜமான முகத்தைக் கண்டு பிடிக்கக் கல்யாணிக்கே பல வருஷங்களாயிற்று. ஆனால் இதைப் பற்றி அவள் அவளுடைய அண்ணனுடன் விவாதித்ததே கிடையாது. ''ஹல்லோ கல்யாணி.. கன்கிராட்ஸ்....''

கல்யாணி திரும்பிப் பார்த்தாள். ஷோபா தவான். அவள் வழக்கம்போல் தன் பாய் ஃப்ரெண்ட் விநோத்துடன் மோட்டார் சைக்கிளில் பிலியன் ஸீட்டில் உட்கார்ந்து-கொண்டு வந்தவள், அவனை வண்டியை நிறுத்தச் சொல்லி, தன் பாராட்டைத் தெரிவித்தாள்.

விநோத்தும் தன் பாராட்டைத் தெரிவித்தான்.

''தாங்க்ஸ்...''

''அப்பொழுதே புறப்பட்டு விட்டாயே, இன்னுமா பஸ் வரவில்லை?''

''ஒன்றரை மணி 'ஸ்பெஷல்' 'கான்ஸல்' செய்து விட்டார்கள் போலிருக்கிறது. மணி இரண்டாகிறது. முக்கால் மணியாக நின்று கொண்டிருக்கிறேன்...''

''எங்கே போகவேண்டும்?'' என்றான் விநோத்.

''கல்யாணி உன்னுடன் வரமாட்டாள். எதற்கு வீணாக அலட்டிக் கொள்கிறாய்?'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள், ஷோபா.

''ஒரு 'மொபைக்கி'ல் இரண்டு பேர்தான் போக முடியும் என்று நினைக்கிறேன்...'' என்றாள் கல்யாணி.

''நான் பக்கத்தில் 'ஸிவில் லைன்ஸ்'தான் போகவேண்டும். மூவருமாகப் போனால் என்னை அங்கே இறக்கி விட்டு 'சௌத் டெல்லிக்கு உன்னை அழைத்துச்செல்ல விநோத் தயார்... நீ தயாரா?'' என்றாள் ஷோபா.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே விநோத் ''இட் ஈஸ் நோ ப்ராப்ளம்.''

''நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?'' என்றாள் கல்யாணி.

''அவளிருப்பது 'மாடல் டவுனி'ல். எதிர்த்திசை. ஆனால் இதுவரை அழகான பெண்களுக்கு மட்டும் 'லிஃப்ட்' கொடுத்துக்கொண்டிருந்தவன், ஒரு மாறுதலுக்கு அழ



கான, கெட்டிக்காரப் பெண்களுக்கும் 'லிஃப்ட்' கொடுக்க விரும்புகிறான்... அப்படித்தானே வினோத்?''

''டோன்ட் பீ ஸில்லி'' என்று அவள் சொன்னதை ரசித்தவாறு, பொய்க் கோபம் குரலில் தோன்றச் சொன்னான் வினோத்.

''அதோ 101 வருகிறது. ஜந்தர் மந்திரில் இறங்கி கிரீன் பார்க் போகிறேன்... தாங்க்யு ஷோபா, தாங்க்யூ வினோத்...'' என்று கூறிக் கொண்டே பஸ்ஸை நோக்கி விரைந்து சென்றாள் கல்யாணி.

பஸ்ஸில் நல்ல வேளையாக உட்கார இடம் கிடைத்தது. அவள் அநேகமாக ரேணுவுடன்தான் வீட்டுக்குத் திரும்புவது வழக்கம். ரேணு முனீர்காவில் இருந்தாள். ஆனால் இன்று அவளுடைய மாமாவின் பிள்ளைக்கு 'முண்டன்' கல்யாணம், சக்தி நகரில். போவதை ரத்துச் செய்து விட்டுக் கல்யாணியின் வீட்டுக்கு வந்து அவள் பரிசு பெற்ற சந்தோஷச் செய்தியை அவள் மன்னியிடம் தானே சொல்லப் போவதாகத்தான் ரேணு முதலில் சொன்னாள். கல்யாணி, அவள் 'முண்டன்' கல்யாணத்துக்குப்போகாவிட்டா நன்றாக இருக்காது என்று சொல்லி அனுப்பி வைத்தாள்.

ரேணுவைப் பற்றி அவள் மன்னியின் அம்மா என்ன நினைக்கிறாள் என்று கல்யாணிக்குத் தெரியும். ரேணுவைப் பற்றி அவளுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை என்பது முக்கியமில்லை. ரேணுவின்சகவாசத்தினால் கல்யாணி கெட்டுவிடக் கூடும் என்று நினைக்கிறாள் என்பது கூட முக்கியமில்லை. ஆனால் ரேணுவை ஒரு காரணமாகக் காட்டி, வேறு ஒன்று சாதிக்க விரும்புகிறாள் என்பதுதான் முக்கியமான விஷயம்.

கல்யாணிக்கு அந்தச் சம்பவம் நினைவுக்கு வந்தது. மன்னியின் அம்மாவை அப்பொழுதுதான் அவளுக்குப் புரிந்து கொள்ளமுடிந்தது.

கல்யாணி அறையில் தூங்குவதாக நினைத்துக் கொண்டு பாகீரதி மாமி— அவள்தான் மன்னியின் அம்மா — மகளுடன் பேசிக்கொண்டிருந்தாள்



''தோ பாரு சியாமளி, நான் பழங் காலத்து மனுஷிதான்....நல்லது பொல்லாது நாலும் தெரிஞ்சவ. மாப்ளே கிட்டே சொல்லி, கல்யாணியோட கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணச் சொல்லு. வயத்திலே நெருப்பைக் கட்டிக் கொண்டு யாராலே இருக்க முடியும்!''

'' 'இப்போத்தானே எம். ஏ. சேர்ந்திருக்கா... அதுக்குள்ளே என்ன அவசரம்?'ம் பார் அவர்.''

''என்னடி, எம். ஏ. படிச்சாத்தான் ஆச்சோ? இப்பத்தான் கையிலே தடி யூனிண்டு, கிழவிங்கள்ளாம் பரிட்சை எழுதறுளே...கல்யாணம்பண்ணிண்ட்டுபடிக்கிறது, யார் வேண்டாம்ணு? தோ பாரு... கல்யாணி நல்ல பொண்ணுதான். இல்லேங்கலே... ஆனு அவ சிநேகிதின்னு ஒத்தி வராளே, அவ பேரென்ன, ரேணுவோ, கூணுவோ, அது போடற 'ஸ்டைல்' இருக்கே எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலே... ஹிந்திக்காரப் பொண்ணு. இவளைத் தவிர கல்யாணிக்கு நம்மூர்க்காரப்பொண்ணு யாருமே சிநேகம் இல்லியோ? அவதானே அடிக்கடி வரா, போறு. அதன். குதிப்பும் கொம்மாளமும்... நாளைக்குத் தாறுமாறு ஏதான்னு ஆயிட்டுதுன்னு நாமதாண்டி பொறுப்பு... யோசிச்சுப் பாரு...''

''கல்யாணி அப்படியெல்லாம் ஒண்ணும் பண்ண மாட்டா.''

''கல்யாணி நல்ல பொண்ணுதான். வாஸ்தவம். ஆனு வயசும், சகவாச தோஷமும் ஒண்ணு சேர்ந்துட்டா... எனக்கு என்ன மோடிம்மா, பகிரென்கிறது. நினைச்சுப் பார்த்தாலே... நான் சொல்றதைக் கேளு... பேசாமெ, நாணுப் பிள்ளை இருக்கானே மணி, அவனுக்குக் கொடுத்துடலாம் கல்யாணியை....''

''மணிக்கா?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள் மன்னி. அவ்வாறு திடுக்கிட்டுக் கேட்டது, கல்யாணிக்கு ஓரளவு ஆறுதலாக இருந்தது. திடுக்கிட வேண்டிய விஷயம்தான்.

''ஏண்டி மணிக்கு என்ன குறைச்சல்? கொஞ்சம் பூசின மாதிரி இருக்கான் அவ்வளவுதானே?''

''என்ன குண்டு? 'பூசின மாதிரி'ங்கிறியே? அதுவும் ரெண்டாந் தாரமாக் கொடுக்கணும்கிறியே, என்னம்மா இது?''

''அவனுக்கு என்ன வயசுன்னு நினைச்சே? முப்பத்தாறு. கடங்காரி கல்யாணமான ஆறு மாசத்துக்குள்ளேயே போயிட்டா, முப்பது வயசிலே அவன் கிழவனுயி விடுவானு? ஏராளமா சொத்து. அவன் கடையிலே ஒரு நாளைக்கு ஜவுளி எத்தனை வியாபாரமாறது தெரியுமா உனக்கு? குறைஞ்சது பத்தாயிரம் ரூபா. 'கல்யாணியைக் கொடுப்பாளா'ன்னு நாணுவே போன வருஷம் என்னைக் கேட்டான்... ஒரு காலணு செலவில்லே, எல்லாம் அவனே பார்த்துப்பான். இது நேர்ந்ததுன்னு கல்யாணிக்கு அதிர்ஷ்டம்னு வச்சுக்கோ.''

''கல்யாணி படிச்சிருக்கா... அவ மணியைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிப்பாளா?''

''ஏன், அவன் படிப்புக்கென்ன குறைச்சல்? பி. ஏ. பரிட்சை எழுதினுன். ஒரு தடவை தவறிடுத்து. அப்புறம் எழுதலே... கடை வச்சுக் கொழிச்சுண்டிருக்கான். எம். ஏ. ஐ. ஏ. எஸ். படிச்சாத்தான் ஆச்சா? அப்படிப் படிச்சவான்ளாம் மூணு நாலு மாசத்திலே சம்பாதிக்கிறத்தை அவன் ஒரு நாள்லே சம்பாதிக்கிறுன்.... பேசாம, சொல்றதைக் கேளு... உன் ஆம்படையான் கிட்டே சொல்லி....''

''அவரும் சம்மதிக்க மாட்டார்...''

''ஏன்? ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை தேடறுரோ? செலவழிக்கக் காசு கையிலே ஏராளமா இருக்கோ?... உனக்கும் ரெண்டு குழந்தைங்க இருக்கு. ஞாபகம் இருக்கட்டும்....''

....மணியைத் தன் கணவனுக எண்ணிப் பார்த்தபோது, கல்யாணிக்குச் சிரிப்பு வந்தது. அளவுக்கு மீறிய ஆரோக்கிய உடம்பு. சின்னக் கண்கள், பிரபல தமிழ் வாரப் பத்திரிகைகளில் வரும் நகைச் சுவைத் துணுக்குகளைப் பார்த்துவிட்டுக் கண்களில் நீர் வரும் வரை சிரிக்கும் அட்டகாசமான ஆரவாரம், சாப்பிடும்போது அதை ஒரு போராட்டமாக நினைத்துப் பல முனைகளில் தாக்கி, வெற்றி ஏப்பமாக வெளிவரும்போது, அதை தானே ரசிக்கும் ஆனந்தம்... அவனை மணந்தால் தினம் ஒரு புதுப் பட்டுப் புடவை கட்டிக் கொள்ளலாம்... கவிதை எழுத முடியுமா?—

மன்னி, அவள் அண்ணனிடம் இந்தச் சம்பவத்தைப் பற்றிப் பேசியதாகத் தெரியவில்லை. ஆனல் அவளால் எத்தனை நாட்களுக்கு அம்மா சொல்றதைப் பொருட்படுத்தாமல் தாக்குப்பிடிக்க முடியும்? அண்ணு இதற்குச் சம்மதிக்க மாட்டானென்று அவளுக்கு நிச்சயம் தெரியும்.

---

துருப்பிடித்திருக்கும் ஆணி, தாழ்ப்பாள் போன்றவற்றின் மீது வினிகர் என்ற காடியை ஊற்றினல் எளிதில் துரு அகன்று விடும்.





பாகீரதி மாமி ரேணுவைப் பற்றி இப்படியொரு அபிப்பிராயம் வைத்திருக்கிறாளே, ஆனால் அவள் வீட்டுக்கு வந்தால், அதுவும் அவள் காரில் வந்து விட்டால் போதும், அவள் ரேணுவை வரவேற்கும் விதம், செய்யும் உபசாரங்கள்... ரேணு கூட அடிக்கடி சொல்வாள்: 'தட் ஓல்ட் லேடி சஸ் ஆல் ஸ்வீட்னஸ் அண்ட் லீட்...' பாகீரதி மாமியின் உண்மையான முகத்தைப் பற்றி அவள், ரேணுவிடம் கூடச் சொன்னதில்லை.

'ஸ்க்ரீன் பார்க்'வந்ததும் கல்யாணி இறங்கினாள். அவள் வீட்டுக்குச் சென்று மணியை அடித்ததும், முரளி கதவைத் திறந்தது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''என்ன அண்ணா, சீக்கிரம் வந்துட்டே?'' அவன் இந்த நேரத்தில் வீட்டில் இருப்பான் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை.

முரளி பதில் சொல்லாமலேயே உள்ளே போனான்.

மன்னி பிரமை பிடித்தாற்போல் சோபாவில் உட்கார்ந்திருந்தாள். வீட்டில் ஏதோ ஓர் அசாதாரணமான அமைதி நிலவுவது போல் அவளுக்குப் பட்டது.

முரளி ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு மன்னியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தான்.

கல்யாணி தன் அறைக்குச் சென்று புத்தகங்களை வைத்தாள். அண்ணா இவ்வளவு சீக்கிரத்தில் ஏன் வீட்டுக்கு வந்துவிட்டான்? சாதாரணமாக சாயந்திரம் ஏழு மணி, அல்லது எட்டு மணிக்குத்தான் திரும்புவான். ஒரு நிறுவனத்தில் இன்ஜினியராக இருந்தவன், வேலையை இரண்டு வருஷங்களுக்கு முன் ராஜிநாமாச் செய்துவிட்டு, சொந்தமாகத் தொழில் ஆரம்பித்து நடத்திவருகிறான்.

ஏன் அவளுடைய கேள்விக்கு அவன் பதில் சொல்லவில்லை? மன்னியும் மௌனமாய் பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருக்கிறாள்? என்ன நடந்து விட்டது?

அவள் அறையை விட்டு வெளியே வந்தாள். பாகீரதி மாமி வெராந்தாவில் உட்கார்ந்தவாறு வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மௌனமும் கல்யாணியை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

தனக்குப் பரிசு கிடைத்திருக்கிறது என்ற சந்தோஷச் செய்தியைச் சொல்ல வந்தவளுக்கு வீட்டுச்சூழ்நிலை எத்தகைய ஏமாற்றம்?

''என்ன மாமி, ஏன் எல்லோரும் இப்படி உட்கார்ந்திருக்கீங்க, என்ன ஆச்சு?'' என்றாள் கல்யாணி, பாகீரதியிடம்.

பாகீரதி ஒன்றும் பேசாமல், 'அவனுடைய அண்ணனைப் போய்க் கேட்டுக்கொள்' என்பதற்கு அடையாளமாகக் கையைக்காட்டினாள்.

கல்யாணி ஹாலுக்குள் நுழைந்தாள்.

'' 'ஆல் இண்டியா யுனிவர்ஸிட்டி பொயட்ரி காம்பெடிஷன்'லே எனக்கு ஃபர்ஸ்ட் ப்ரைஸ் அண்ணா...''

''எத்தனை ரூபா?'' என்று வெராந்தாவிலிருந்து குரல் வந்தது.



யோசனைகள்:

தர்பூசணிப் பழத்தின் மேலே இருக்கும் சிவப்புப் பகுதியைச் சாப்பிட்டு, வெள்ளைப் பகுதியை எறிந்து விடுகிறோம். அந்த வெள்ளைப் பகுதியைத் தோல் சீவாமல் சீவி வைத்துக் கொண்டு அரிசியுடன் சேர்த்து அரைத்து தோசை வார்த்தால் தோசை சுவையாக இருக்கும். உளுத்தம் பருப்பும் தேவைப்படாது.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''குட்...'' என்றான் முரளி.

''இன்னிக்குத்தான் சொன்னான்'' என்றாள் மன்னி.

''ஆமாம்.''

பாகீரதி அறை வாசல்லே நின்றாள். ''முதல்லே உள்ளே வா. சுத்திப் போடறேன். எத்தனை ரூபா?''

''மூவாயிரம்.''

''அப்போ நிச்சயமாச் சுத்திப் போடணும். எப்போ கொடுப்பாளாம்?''

''தெரியாது.''

''உள்ளே வந்து முதல்லே சாப்பிடு... கைகால் அலம்பிண்டு வா...''

முரளி சொன்னான்: ''கல்யாணி... ஐ ஹாவ் எ ப்ராப்ளம்''

''குழந்தை சாப்பிட்டுட்டு வரட்டுமே'' என்றாள் பாகீரதி.

''சரி... சாப்பிட்டுட்டு வா...''

கல்யாணி சாப்பிடும்போது கேட்டாள்: ''என்ன ப்ராப்ளம் மாமி?''

''எனக்கு என்ன தெரியும்? வெளியிலே போய்ச் சம்பாதிக்கப் போறவாளுக்கு நூறு இருக்கும்.''

''அதுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?''

''அதுவும் எனக்குத் தெரியாது. சாப்பிட்டுட்டுப் போய்க் கேளேன்.''

கல்யாணிக்கு ஒன்றுமே புரியவில்லை. அண்ணாவும் அவளைப் போல்தான். வாயைத் திறந்து ஒன்றும் பேச மாட்டான். அவளிடத்தில் அவனுக்குள்ள பாசம் உணர்ந்து கொள்ள வேண்டிய விஷயம்தான். வேலை

யில் கெட்டிக்காரன் என்று மற்றவர்கள் சொல்லித்தான் அவனுக்குத் தெரியும். இந்தக் கெட்டிக்காரத்தனத்தின் காரணமாகத்தான் சொந்தத்திலேயே தொழில் செய்வதென்று அவன் ஆரம்பித்தான். ஒக்லாவில் ஃபாக்டரி.

பாகீரதி மாமிக்கு விஷயம் தெரியும்போல் தான் படுகிறது. எவ்வளவு சிக்கலான பிரச்னையாயிருந்தாலும், அவளால் புரிந்து கொள்ள முடியும். மன்னிக்கு அந்தத் திறமை கிடையாது. 'எனக்கென்ன தெரியும்' என்று கேட்கும்போதே முகத்தில் தெரிந்த பாவனை அவளைக் காட்டிக்கொடுத்து விட்டது. இது தன்னைப் பற்றிய விஷயமாக இருக்க வேண்டும். அண்ணனும் தங்கையும் பேசி முடிவு செய்து கொள்ளட்டும் என்று அவள் நினைக்கிறாள்.

கல்யாணி கையை அலம்பிக் கொண்டு ஹாலுக்கு வந்தாள்.

முரளி இரண்டாவது சிகரெட்டை மறுபடியும் பற்ற வைத்துக் கொண்டிருந்தான்.

கல்யாணி அவன் எதிரே போய் உட்கார்ந்தாள்.

முரளி ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தான். ''நான் ஒரு பெரிய வியாபாரக் குழப்பத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். இதிலிருந்து மீள வேண்டு மென்றால் மூன்று லட்ச ரூபாய் உடனடியாகத் தேவைப்படுகிறது...''

இதைச் சொல்லிவிட்டு அவன் சிறிது நேரம் அமைதியாக இருந்தான். இதை அவன் தன்னிடம் எதற்காகச் சொல்ல வேண்டும் என்று கல்யாணிக்குப் புரியவில்லை. 'எத்தனை ரூபாய் பரிசு' என்று பார்வதி மாமி கேட்டபோது, மூன்று லட்ச ரூபாயாக இருக்கும் என்று எதிர்பார்த்திருப்பாளோ? இது அவளுக்கு வேடிக்கையாகப் பட்டது.

வேலையில் கெட்டிக்காரன் என்கிறார்கள். அண்ணா எப்படி இந்த மாதிரியான ஒரு வியாபாரக் குழப்பத்தில் மாட்டிக் கொண்டான்? நல்ல இன்ஜினியர் என்றால் வியாபார நுணுக்கங்கள் தெரிந்திருக்க வேண்டுமென்று அவசியமா?

மூன்று லட்ச ரூபாய்! மை காட், எத்தனைப் பெரிய தொகை!

முரளி தொடர்ந்தான். ''நான் பல இடங்களில் முயற்சி செய்து பார்த்து விட்டேன். கிடைக்கவில்லை. 'பாங்க்' 'ஓவர் ட்ராஃப்ட்' டுக்கும் ஓர் எல்லை உண்டு. கையை விரித்து விட்டார்கள். இதைச் சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொண்டு என்னை ஒரேயடியாக அழுத்திவிடப் பார்க்கிறார்கள் பெரிய தொழில் நிறுவன முதலைகள். மூன்று லட்ச ரூபாய் இருந்தால்தான் என்னால் நிமிர்ந்து நிற்க முடியும்... இது ஒரு நெருக்கடியான நிலைமை. இரண்டு நாட்களுக்குள் சமாளித்தாக வேண்டும். ஆஃபீஸிலிருந்து நான் சீக்கிரம் வந்து விட்டதற்குக் காரணம், உன் மன்னியின் மாமா இருக்கிறாரே, நாணு அய்யர், அவருடன் தொடர்பு கொண்டு அவரைக் கேட்கலாம் என்றுதான். அவர் தரத் தயாராக இருக்கிறார்... ஆனால்...''

கல்யாணிக்குப் புரிந்து விட்டது. 'அளவுக்கு மீறிய ஆரோக்கியமான உடம்பு, சின்னக் கண்கள்.....' இப்பொழுது இது சிரிப்பதற்கு விஷயமில்லை. அண்ணா அவளைத் தினம் ஒரு புதுப் பட்டுப் புடவை கட்டிக் கொள் என்கிறார்... கவிதை எழுத வேண்டாமாம்....

''எனக்கு அவருடைய நிபந்தனை பிடிக்கவில்லை. முதலில் பணம் வேண்டாம் என்று சொல்லிவிட்டு ஃபோனைக் கீழே வைத்து விட்டேன்.... ஆனால்....''

கல்யாணி பேசாமல் இருந்தாள். வெள்ளைப் புரவியில் ஏறி, மேக மண்டலத்திலிருந்து ஒரு நெடிய உருவம் அவளை நோக்கி வருவது போல் அவள் அடிக்கடி கனவு காண்பதுண்டு. அந்த உருவம் நிச்சயம் ஜவுளிக் கடை வைத்திருக்காது; அசட்டு ஹாஸ்யங்களுக்குச் சிரிக்காது. உரக்கச் சப்த மெழுப்பி ஏப்பம் விடாது...

அவள் கண்களில் நீர் பனித்தது.

''உனக்குத் தெரியுமா, கல்யாணி, அந்த நிபந்தனை என்னவென்று?'' என்றான் முரளி.

அவள் கண்களில் பனித்த நீர், அவளுக்குத் தெரியும் என்பதைப் பூசலிட்டது.

''தெரியும்'' என்றாள் கீழ்க் குரலில். அவன் பார்வையை அவள் சந்திக்க விரும்பவில்லை.

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது. அண்ணனும் தங்கையும் ஆங்கிலத்தில் பேசிக்

---

**யோசனை**

பாத்திரங்களின் அடியில் கரி அதிகமாகப் படிந்து விட்டால், சோறு வடித்தக் கஞ்சியை அந்த இடங்களில் தடவி, வெய்யிலில் காய வையுங்கள். நன்றாகக் காய்ந்ததும் கஞ்சியோடு கரி வந்துவிடும்.

- ஏ. நூர்ஜஹான்



கொண்டது. பாகிரதிக்குப் பிடிக்கவில்லை என்பது அவள் முகத்தினின்றும் தெரிந்தது. அவள் அடிக்கடி மன்னியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மன்னியின் முகத்தில் ஏற்படும் மாறுதல்களினின்றும் அவர்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ள முடியுமா என்று முயற்சி.

கடைசியில் ஆவல் பொறுக்க மாட்டாமல் கேட்டே விட்டாள்: ''ஸ்யாமளி, கல்யாணி என்னடி சொல்றா?''

''மணியைப் பண்ணிக்க உனக்கு இஷ்டமில்லையா, கல்யாணி?'' என்றாள் மன்னி.

''இதென்ன கேள்வி? அவள் மாட்டேன்னு சொன்னாளா? மணிக்கு என்ன குறைச்சல்? சூது, வாது தெரியாத பிள்ளை. பட்டணத்திலே பெரிய்ய கடை... மாளிகை மாதிரி வீடு. மூத்தா — கடன்காரி போனவுடனே கல்யாணமே பண்ணிக்க மாட்டேன்னுட்டான்.... நம்ப கல்யாணியைப் பார்த்தப்புறம்தான் மனசு மாறி, இப்போ சரிங்கறான். இந்த மூணு லட்ச ரூபா, நாணுவுக்கு ஒண்ணும் பெரிய காசில்லே.... மாப்ளே திருப்பித் தரேன்னு சொன்னாரே தவிர, கல்யாணி அவாத்துக்குப் போயிட்டா திருப்பித் தான்னு கேட்கக் கூட மாட்டான். அவன் ஒரு மாசத்திலே சம்பாதிக்கிற காசு இது...'' என்றாள் பாகிரதி.

''என்னோட விலை மூணு லட்ச ரூபாயா? இப்போத்தான் என் மதிப்பு எனக்குத் புரியறது'' என்றாள் கல்யாணி ஒரு வறட்சிப் புன்னகையுடன்.

''யாரடி உன்னை விக்கறா? நீ அந்தாத்துப் பொண்ணா வரணும்னு நானு சந்தோஷத்தோட தரான்.... தோ பாரு, ஸ்யாமளி, கல்யாணிக்கும் அவ அண்ணாவோட கஷ்ட நஷ்டத்திலே தனக்குப் பங்குண்டுன்னு நன்னாத் தெரியும்.... அப்பா அம்மா போனவேத்தனை தெரியாம இத்தனை நாள் அருமையா வளர்த்திருக்கார்... இந்தக் காலத்திலே, சொந்த அப்பா, அம்மா கூட, இவர் மாதிரி கண்ணும் கருத்துமா இப்படி வளர்த்திருக்க மாட்டா... அப்பேர்ப்பட்ட அண்ணாவுக்கு ஒரு கஷ்டம்னா கல்யாணி மனசைத் துடைச்செறிஞ்சுட்டு இந்தச் சம்பந்தம் வேண்டாம்னு சொல்லிடுவாளோ? நம்ம கல்யாணியை நமக்குத் தெரியாதா?''

''நீங்க கொஞ்சம் சும்மா இருக்கேளா மாமி... இது நானும் அண்ணாவும் சேர்ந்து முடிவு பண்ண வேண்டிய விஷயம்'' என்றாள் கல்யாணி.

''இதென்னடி, வேத்து மனுஷாள் கிட்டே பேசற மாதிரி பேசறே? உனக்குப் புடவை கட்டிக்கக் கத்துக் குடுத்தது நான்... ஒரு நிமிஷத்திலே தூக்கி எறிஞ்சுட்டயே! இன்னொண்ணு வச்சுக்க... நான், உன் மன்னி, அண்ணா எல்லோரும் உன் நலத்தைத் தவிர வேறொன்றும் நினைக்க மாட்டோம். நாங்க உனக்கு ஒரு கிழவனைப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கலே... மணிக்கு முப்பது வயசுதான் ஆறது. கவடு தெரியாத பையன். உடம்பு வஞ்சனை யில்லாமக் கொஞ்சம் வளர்ந்திருக்கு... நீயே ஓடிசலா ஒரு பையனைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு வச்சுக்கோ, அவன் கல்யாணம் ஆனப்புறம் குண்டாப் போக மாட்டான்னு என்ன நிச்சயம்? பத்து வயசு வித்தியாசம் இருக்கேன்னு நீ சொல்லலாம். எனக்கும் உன் மன்னியோட அப்பாவுக்கும் எத்தனை வயசு வித்தியாசம் தெரியுமா? இருபது வயசு... பத்து வருஷம்தான் குடித்தனம்நடத்தினோம். சந்தோஷமா இருந்தோம். முப்பது வருஷம் எலியும் பூனையுமாக் குடித்தனம் நடத்துவதை விட இது எவ்வளவோ மேல்... நான் எம். ஏ. படிக்கிறேன், அவன் என்ன படிச்சிருக்கான்னு கேட்பே... அவன் படிப்புக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லே. பி.ஏ. மட்டும் படிச்சிருக்கான். ஆறு ஆம்படையான் பெண்டாட்டின்னு குடித்தனம் நடத்தச்சே, இந்தப் படிப்பா உங்களுக்கு உதவப் போகிறது? காசுதான் எல்லாத்துக்கும் வேணும்... இந்தக் கிழவிக்கு என்ன தெரியும்னு நீ நினைக்கலாம். நான் சொல்றதைச் சொல்லிட்டேன். அப்புறம் உன்பாடு, உன் அண்ணா பாடு...'' என்று பொரிந்து தள்ளிவிட்டு உள்ளே சென்றாள் பாகிரதி.

முரளி இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

சிறிது நேரம் கழித்துக் கல்யாணி சொன்னாள்: ''மணி குண்டா யிருக்கார், ரெண்டாந் தாரம்கிறதெல்லாம் என்னுடைய தயக்கத்துக்குக் காரணமில்லே... வந்து... வந்து....''

''சொல்லேன்'' என்றாள் மன்னி.



இருப்பில் வைத்திருக்கும் அரிசியில் வண்டு வராமல் தடுக்க, சிறிது வசம்பைப் பொடி செய்து அரிசியுடன் வைத்து விடுங்கள்.

புளியை நீண்டநாட்களுக்கு வைக்க விரும்புவோர், பாத்திரத்துக்கு அடியிலும், பாத்திரத்தில் புளியை போட்டபின் மேலேயும் சிறிதளவு உப்பைப் போட்டுவைத்தால் புளி கெடாமல் இருக்கும். ஏ. நூர்ஜஹான்

கல்யாணி ஆங்கிலத்தில் சொன்னாள்: ''எங்களுடைய சிந்தனை ஒரே அலை வரிசையில் இருக்காது....''

''உன் அண்ணாவோட பிரச்னை உனக்கு அவ்வளவு முக்கியமாப் படலியா?'' என்றாள் மன்னி.

கல்யாணி முரளியைப் பார்த்தாள். அவன் கண்களை மூடிய நிலையில் யோசனையில் ஆழ்ந்திருந்தான். அவனைப் பார்த்துக் கொண்டேயிருந்தால், உணர்ச்சி வயப்பட்டு, இந்த ஏற்பாட்டுக்கு இணங்கி விடுவோமோ என்று பயந்தாள். அப்படி இணங்கி விட்டால், இதற்கு விலையாக அவள் தரப் போவது என்ன? அவளுடைய கனவுகள்— அவள் கனவுகளின் விலை மூன்று லட்ச ரூபாயா?

இது ஆண்களின் சமூகம். சந்தேகமேயில்லை. வரலாற்று ரீதியாக இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. வலிமை மிக்க அரசர்கள் தங்கள் மீது படையெடுத்துவிடப் போகிறார்களே என்று அஞ்சி — அவர்களுக்கு ஏற்கனவே திருமணமாகி எத்தனை மனைவிகள் இருந்தாலும் — தங்கள் தங்கள் பெண்களையோ, தங்கைகளையோ மறுபடியும் அந்த வலிமை மிக்க அரசர்களுக்குக் கல்யாணம் செய்வித்துத் தங்களுடைய பாதுகாப்பைத் தேடிக்கொண்ட கோழை மன்னர்கள் எத்தனை பேர்! தருமன் சூதாடியபோது, பாஞ்சாலியைக் கேட்டா அவளைப் பணயம் வைத்தான்?

'கடிகமழ் மின்னுருவை — ஒரு
கமனியக் கனவினைக் காதலினை
வடிவுறு பேரழகை — இன்ப
வளத்தினைச் சூதினிற் பணயமென்றே
கொடியவ ரவைக்களத்தில் — அறக்
கோமகன் வைத்திடல் குறித்துவிட்டான்'

பாரதியின் ஆவேசம் அவளுக்குப் புரிகிறது. ஆனால் அந்த பாரதியாலும் வரலாற்று ரீதியாக வந்த பண்பாட்டுப் பிரக்ஞையைத் தவிர்க்க முடியவில்லை. 'வீரமிலா நாய்கள்' என்றெல்லாம் சீறும் அவன், 'நெட்டை மரங்களென நின்று புலம்பினார், பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ' என்று பெண் இனத்தைத் தன்னை அறியாமல் குறைவு படுத்திப் பேசியிருக்கிறானே! பெண்கள் புலம்பலாமே யன்றி, அவர்களால் செயலாற்ற முடியாது என்றுதானே அர்த்தம்?

முரளி நல்லவன்தான்... தருமன் மாதிரி. ஆனால்' அவன் அவளைப் பணயம் வைத்தா அவனுடைய தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்?

இதை ஒரு 'பணயமாக' அண்ணாவோ, மன்னியோ அல்லது பாரேதி மாமியோ நினைக்கவில்லை என்பதுதான் இதன் துன்ப உணர்வை இன்னும் அதிகமாக்குகின்றது. அவளைப் பொறுத்தவரையில் மணியின் உடலமைப்போ, அவன் இரண்டாந் தாரம் என்பதோ இரண்டாம் பட்சமான குறைகள். ஆனால் அடிப்படை ஆட்சேபனை — மணி மணியாக இருக்கிறான், கல்யாணி கல்யாணியாக இருக்கிறாள் என்பதை அவர்கள் புரிந்து கொள்ளப் போவதில்லை.

இந்த வயசில் — இப்பொழுதே — அவள் தன்னுடைய கனவுகளை அகற்றத் தயாராக இல்லை. 'நன்றிக் கடன்' என்று சொல்லிக் கொண்டு, அண்ணாவின் ஏற்பாட்டுக்கு இணங்கி, தன்னளவில் அவள் தன்னை ஒரு 'தியாகி'யாகப் பாவித்துக் கொண்டு இந்த 'சென்டிமென்டலிஸம்' தருகிற அசட்டுச் சுகத்தில் வாழ்க்கை முழுவதும் இளைப்பாற வேண்டியது அவசியம்தானா? — 'வாழ்க்கை முழுவதும்' என்று சொல்ல முடியாது... இன்னும் நாலைந்து வருஷங்களுக்குள் இப்பொழுதிருக்கிற கல்யாணியை அழித்து விட்டு, புதுக் கல்யாணியாக ஆகிவிடலாம். இது சூழ்நிலையால் அவள் எப்படிப் பாதிக்கப் படுகிறாள் என்பதைப் பொறுத்த விஷயம்.

''என்ன கல்யாணி... என்ன சொல்றே?'' என்றாள் மன்னி மீண்டும்.

''கொஞ்சம் 'டயம்' கொடுங்கோ... யோசிச்சுச் சொல்றேன்...''

மன்னி அண்ணாவைப் பார்த்தாள். அவன் கண்கள் மூடியிருந்தன.

'' 'டயம்'னா, எப்பச் சொல்லுவே?'' என்றாள் மன்னி.

''இதைச் சமாளிக்க வேற வழியே இல்லியா அண்ணா?''

முரளி கண்களைத் திறக்காமலேயே சொன்னான்: ''ஃபாக்டரியை அழிக்க வேண்டியதுதான். அப்படின்னா அது என் தோல்

---

ரொட்டி காய்ந்துபோய் தூர எறிய மனம் வராவிட்டால் இட்லி தட்டில் வைத்து ஆவியில் சிறிது நேரம் வைத்து எடுத்தால் புது ரொட்டி மாதிரி ஆகிவிடும்.



(பக்கத்து வீட்டு மாமி, வீட்டுக்குள் அவசரமாக நுழைந்து கொண்டே)

''ஏண்டி கமலா! அதுக்குள் ளாற டி.வி. வைச்சுட்டாயா....? பத்து நிமிஷம் நான் வர்றதுக்காகக் காத்திருக்கப்படாதோ....? சினிமாவை ஆரம்பத்திலிருந்து பார்க்க முடியாமப் போச்சே...''

ஏ. நூர்ஜஹான்



வியை ஒப்புக் கொண்ட மாதிரி. இட் சஸ் மாரல் டெத் ஃபார் மீ... நான் என்னைப் பத்தி நினைச்சுண்டதெல்லாம் பொய்னு ஆயிடும். நான் தொழில் துறையிலே என்னவெல்லாம் செய்யணும்னு பாக்கறேன்.... அதுக்கு முதல்லே தன்னம்பிக்கை வேணும். ஆரம்பத்திலேயே அது போயிடுத்துன்னா... ஐ டோன்ட் நோ...''

முரளிக்கும் கனவுகள் இருக்கின்றன — தொழில் துறையைப் பற்றிய கனவுகள். அவளுடைய கனவுகளைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. கனவுகள் வர்ஸஸ் கனவுகள்... கனவுகளில் எவை உயர்ந்தவை, எவை தாழ்ந்தவை என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆனால் முரளியின் கனவுகள் 'ப்ரொடக்டிவ்': இது பொருளாதார உலகம். வணிக பாஷை தான் தெரியும்.

''சரி... நாளைக் காலம்பறப் பதில் சொல், போதும்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் முரளி.

## 2

''ஹல்லோ... ரேணுவா?... மை காட்வாட் எ ஸர்ப்ரைஸ்... எப்பொழுது சென்னைக்கு வந்தாய்? நேற்றா? குட்... நாமிருவரும் சந்தித்து எத்தனை வருஷங்கள் இருக்கும்? எஸ்... பத்து வருஷங்கள்.. நீ ஒரு 'ட்ராவல் ஏஜென்ஸிஸ் நிறுவனத்தில் மானேஜராய் இருக்கிறாய் என்றார்கள். அப்படியா? வெரி குட்... நானா? ஆமாம். யூ ஆர் ரைட்... கல்யாணமான பிறகு கூட நான் எழுதுவதில் அவருக்கு ஆட்சேபணை இல்லை என்றார் என் கணவர்.... இப்பொழுது ஆங்கிலத்தில் எழுதுவதில்லை. தமிழில்தான் எழுதுகிறேன். தமிழில் கவிதை எழுதினால் பேர் வராது... நாவல்கள் எழுதுகிறேன். மூன்று நான்கு நாவல்கள் திரைப்படங்களாகி விட்டன... எஸ்... யூ ஆர் ரைட்... நான் இப்பொழுது ஒரு நட்சத்திர எழுத்தாளர்... என் புகைப் படங்களைப் பத்திரிகைகள் பிரசுரிக்கின்றன... படத்தில் நடிக்கக்கூடக் கூப்பிட்டார்கள்... 'அழகு இருக்கிறது... ஆற்றல் இருக்கிறது... ஏன் நீங்கள் நடிக்கக் கூடாது?' என்று வற்புறுத்தினார்கள். நான் மறுத்து விட்டேன். எனக்கு இரண்டு குழந்தைகள்... 'ஸ்வீட் டார்லிங்ஸ்....' நீ வந்து அவர்களைப் பார்க்க வேண்டும்... ஆமாம்.... பெண்கள்... எட்டு வயது, ஆறு வயது... வீட்டுக்குக் கட்டாயம் வா... ஹாடோஸ் ரோட்... அங்கு வந்து, 'எழுத்தாளர் கல்யாணி' வீடு எது? என்று கேட்டாயானால் ஒரு சின்னக் குழந்தைகூட அழைத்துக் கொண்டு வந்து விடும்.... நான் என்ன செய்ய முடியும்? அவ்வளவு பிரபலம் நான்... உன் கணவர் உன்னுடன் வரவில்லையா? ஏன்? பிரிந்து விட்டீர்களா? மை காட்!... எப்பொழுது? எனக்குத் தெரியாதே! ஐ ஆம் ஸாரி... ஓ. கே. இன்று சாயந்திரம் வருகிறாயா?... ப்ளீஸ்... பை... பை....''.

அன்று மாலை ரேணு கல்யாணியின் வீட்டுக்கு எந்தச் சின்னக் குழந்தையின் உதவியுமின்றித் தானாகவே போய்ச் சேர்ந்தாள்.

மாளிகை மாதிரி வீடு இருந்தது.

அவள் போனபோது ஹாலில் கல்யாணி இரண்டு மூன்று பேர்களுடன் பேசிக் கொண்டிருந்தாள். ரேணுவைக் கண்டதும், எழுந்து போய் அவளைக் கட்டிக் கொண்டாள்.

''என் சிநேகிதி ரேணு... இவர் ஃபிலிம் ப்ரொட்யூஸர் திருநாவுக்கரசு... மற்றவர்கள் அவருடைய நண்பர்கள்... நான் சமீபத்தில் எழுதிய நாவல் ஒன்றைத் திரைப்படமாக்க விரும்புகிறார்கள். நான் தில்லியிலிருந்தபோது ரேணு என்னுடைய நெருங்கிய சிநேகிதி...''

கல்யாணி இவ்வாறு படபடவென்று பேசி ரேணு பார்த்ததே யில்லை.

திருநாவுக்கரசுவின் முகத்தில் பற்கள்தாம் பளிரென்று தெரிந்தன. அவர் எழுந்து கைகளைக் கூப்பியவர் புன்னகைத்துக் கொண்டே இருந்தார்.

ரேணு உட்கார்ந்தாள்.

''அம்மா... குட் ரைட்டர்... 'ஏ' சென்டர், 'பி' சென்டர், 'ஸி' சென்டர், ஸக்ஸஸ்....'' என்றார் திருநாவுக்கரசு.

ரேணுவுக்கு அவர் என்ன சொல்கிறார் என்று புரியவில்லை.

திருநாவுக்கரசு தொடர்ந்தார். ''அம்மா யுவர் ஃப்ரெண்ட், குட் ஃபேஸ்கட்... ஃபிலிம் ட்ரை....''

ரேணு கல்யாணியைப் பார்த்தாள். 'ஃபேஸ்கட்' என்றால் என்ன அர்த்தம்? அவள் தன் முகத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டாள். ஏதாவது காயம் ஏற்பட்டிருக்கிறதா?....

''அம்மா ஆல்ஸோ குட் ஃபேஸ் கட்... ஆக்ட், ஆக்ட் ஐ ஸே... நோ நோ, அம்மா ஸே.....''

கல்யாணி ஒன்றும் பேசாமல் ரேணுவைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''என்ன சொல்கிறார், எனக்கு ஒன்றும் புரியவில்லை'' என்றாள் ரேணு.

''உனக்கு முகம் அழகாக இருக்கிறதாம். நீ படத்தில் நடிக்க வேண்டுமென்கிறார்...''

ரேணு வாய் விட்டுப் பலமாகச் சிரித்தாள்.

''இவர் மிகவும் நல்லவர். கதையை முழுப் பணமும் கொடுத்து வாங்கிக் கொண்டு போய் விடுவார். அவர் எடுக்கும் படத்துக்கும் என் கதைக்கும் எவ்விதச் சம்பந்தமில்லாமலும் இருக்கலாம்... ஆனால் திரைப்பட உலகில் இது சகஜம். பணம் கிடைக்கிறது, விளம்பரம் கிடைக்கிறது... நான் எதற்காகக் குறை சொல்ல வேண்டும்?'' என்றாள் கல்யாணி.

''யுவர் ஃப்ரெண்ட் விஷ் ஆக்டிங்?'' என்றார் திருநாவுக்கரசு.

''நோ... தாங்க்யூ...'' என்றாள் ரேணு.

''அம்மா ஸ்டோரி குட்... நோ ஸைட்-ஹீரோயின்... ஹீரோயின் ப்ராமிஸ்...''

''நோ... தாங்க் யூ...''

திருநாவுக்கரசுவின் முகத்தில் ஏமாற்றம் படர்ந்தது.

''எப்படி என்னைத் தமிழ்ப் படத்தில் நடிக்கத் தைரியமாக இவர் கூப்பிடுகிறார்?'' என்றாள் ரேணு.

''இதுதான் இப்பொழுது தமிழ் நாட்டில் நடந்து கொண்டிருக்கிறது. தமிழ் தெரியாதவர்கள் நடித்தால்தான் படம் ஓடுகிறது. பின்னணியில் குரல் கொடுக்கப் பலர் இருக்கிறார்கள்.... சரி... நீ வா... என் அறைக்கு அழைத்துச் செல்கிறேன்... இவர்களைப் பேசி அனுப்பிவிட்டு வருகிறேன்.''

கல்யாணி அவளைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள்.

பெரிய அறைதான். பல புத்தக அலமாரிகள், ஏராளமான புத்தகங்கள்.

அறைக்கு வெளியே ஒரு மரம் கிளைகளுடன் பூத்துக் குலுங்கியது. அறையில் பரவிய இதமான நறுமணம்.

சுவருக்குச் சுவர், பெர்ஷியன் கார்ப்பெட் கல்யாணி ஒரு ஸ்விட்சைப் போட்டாள். மெல்லிய இசை காற்றில் மிதந்து வந்தது.

''நீ புத்தகங்களைப் பார்த்துக் கொண்டிரு. வந்துவிடுகிறேன்... சரி... என்ன குடிக்கிறாய் காஃபி?... ம..... கூல் ட்ரிங்க்ஸ்...''

''காஃபி.''

''சரி... அனுப்புகிறேன்'' என்று சொல்லி விட்டு வெளியே சென்றாள் கல்யாணி.

அங்கிருந்த புத்தகங்கள் பெரும்பான்மையானவை தற்காலத்திய அமெரிக்கன் 'ப்ளாக் பஸ்டர்ஸ்'. இந்தப் புத்தகங்களையா கல்யாணி இப்பொழுது படிக்கிறாள்? ஒரு காலத்தில் தன்னை 'மில்ஸ் அண்ட் பூன்' படிப்பதற்காகக் கேலி செய்தவள்....

'க்ளாஸிக்ஸ்' புத்தகங்களும் இருந்தன. ஆனால் அவை வைக்கப்பட்டிருந்த அலமாரி பூட்டப்பட்டிருந்தது.

ஏராளமான தமிழ்ப் பத்திரிகைகள். அறையில் கண்ட படங்கள் வர்ண ஆபாஸங்களாக இருந்தன. கல்யாணியின் கதைகள் இப்பத்திரிகைகளில் பிரசுரமாகியிருக்கின்றன என்று அவளால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை.

'ஃஸ் மாரேஜ் ஸோ டிமாரலைஸிங் ஆஸ் ஆல் தட்....?'

ஒரு காலத்தில் போட்டிக்குக் கவிதை அனுப்புவது விலங்கினப் போராட்டத்தின் அறிகுறி என்று சொன்னவள், இரைந்த சொல் பேசுவது ரசனைக் குறைவு என்று வாதாடியவள், வெளிச்சத்தில் நின்றால், அதுவே ஒருவருடைய நுண்ணுணர்வின் சாவு என்று கூறியவள், சொற்களின் இடையே அர்த்த புஷ்டியான மௌனத்தை உருவாக்க முயன்றால், அதுவே ஒரு சிறந்த கவிதை என்றவள், உலகத்தில் கீட்ஸைக் காட்டிலும் ஓர் உயர்ந்த கவிஞன் இல்லை என்ற கொள்கை உடையவள்....

அவளா இப்பொழுது ஹாலில் உரக்கக் குரல் எழுப்பிச் சிரித்து, ஆர்ப்பரித்து...

மை காட்!... அந்தக் கல்யாணி எங்கே?

ரேணுவின் இதயத்தில் ஒரு பெரிய சுமை ஏறிவிட்டாற் போல் தோன்றியது.

---

### யோசனை

''சிமெண்ட் தரையில் கறை படிந்திருந்தால், ஒரு வாளித் தண்ணீரில் டர்பண்டைனைக் கலந்து நன்றாகத் தேய்த்து விட்டால், சிமெட்டித்தரையில் படிந்துள்ள கறைகள் போய்விடும்!''



**சில நாடுகள் சில பெண்கள்:**

**தாய்லாந்து:** இந்நாட்டு மணமான பெண்கள் கணவனின் அனுமதியைப் பெறாமல் பாஸ்போர்ட், வேலை முதலியவை வாங்க முடியாது. சொத்துக்களை விற்கவோ வாங்கவோ இயலாது. ஆண்கள் விவாகரத்து செய்து கொள்ளலாம். பெண்கள் விவாகரத்து செய்து கொள்ள முடியாது.

**ஜோர்டான்:** ஒரு ஆடவன் குறிப்பிட்ட கட்டணம் செலுத்தினால் மறுமணம் செய்து கொள்ளலாம்.

**லெபனான்:** தன் மனைவி ஒழுக்கம் தவறியவளாகக் கருதி அவள் கணவன் அவளைக் கொலை செய்தாலும் குற்றமில்லை.

**சவூதி அரேபியா:** வெளிநாட்டுப் பெண்கள் ஆடவர் துணையின்றி வந்தால் நுழைய அனுமதி வழங்குவதில்லை.

**இஸ்ரேல்:** போக்குவரத்து மற்றும் செய்தி ஒலிபரப்பில் பணியாற்றும் பெண்களுக்கு ஆண்களின் ஊதியத்தில் பாதி அளவுதான் கொடுக்கப்படுகின்றது.

— யூத்டைம்ஸிலிருந்து



அறையில் கல்யாணி பல பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டதற்கு அடையாளமான புகைப்படங்கள் ஆங்காங்கு வைக்கப்பட்டிருந்தன.

பல பரிசுகள் வாங்கியிருக்கிறாள் போலிருக்கிறது. மந்திரிகளுடன் எடுத்துக் கொண்ட படங்கள்... கையை உயர்த்தி ஆரவாரமாகப் பேசும் படங்கள்....

சிறிது நேரம் கழித்துக் கல்யாணி உள்ளே வந்தாள். அவளுடன் இரண்டு பெண் குழந்தைகள். அவளுடைய பெண்கள் போல் இருக்கிறது....

''ஆண்டிக்கு நமஸ்தே சொல்லுங்கள்.''

'' 'நமஸ்தே.... 'நமஸ்தே'...''

''உங்கள் பேரைச் சொல்லுங்கள்.''

'' 'ரமா....'உமா'....''

'' 'ஆண்டிக்கு ஒரு பாட்டுப் பாடிக் காண்பியுங்கள்.''

அவர்கள் கீச்சுக் குரலில் பாடிக் காண்பித்தார்கள்.

''கெட்டிக்காரப் பெண்கள்... வகுப்பில் முதல்'' என்றாள் கல்யாணி.

''அப்படியா? வெரி குட்.''

''சரி... நீங்கள் விளையாடப் போகலாம்.''

அவர்கள் போன பிறகு கல்யாணி ஓர் அடுக்குப் புத்தகங்களைக் கொண்டு வந்தாள்.

''நான் எழுதிய புத்தகங்கள்....''

ஒவ்வொரு புத்தகத்திலும் தன் கையெழுத்திட்டு அதை ரேணுவிடம் கொடுத்தாள்.

''எனக்குத் தமிழ் படிக்கத் தெரியாதே!''

''தெரியாவிட்டால் என்ன? ஒரு பிரபல தமிழ் எழுத்தாளருடைய சிநேகிதி என்பது உனக்குப் பெருமை இல்லையா?''

''பத்து வருஷத்தில் இத்தனை புத்தகங்களா எழுதியிருக்கிறாய்?''

''இன்னும் சில புத்தகங்கள் என்னிடம் இல்லை. மறு பதிப்பு வரவேண்டும்...''

''கவிதை எழுதுவதே இல்லையா?''

''கவிதைக்குத் தமிழில் மதிப்பும் இல்லை... எனக்குக் கவிதை எழுதுவதென்பதும் மறந்தே போய்விட்டது....''

ரேணு தன் கைப் பையைத் திறந்து ஒரு கசங்கிய — நாள்பட்டுப் போன — ஒரு காகிதத்தைக் கொடுத்தாள்.

''அந்தக் கவிதையைப் பார், எப்படி இருக்கிறதென்று சொல்...'' என்றாள் ரேணு.

ஆங்கிலக் கவிதை.

''நாய்
மண்ணைத் தோண்டுகிறது
எலும்பு கிடைத்த ஆனந்தத்தில் அது
எம்பிக் குதிக்கிறது.
யுக யுகாந்திரங்களுக்கு முன்
அது புதைத்திருந்த
ஆத்மா அதுதானென்று
அதற்குத் தெரியாது.....''

''இது யார் எழுதின கவிதை?'' என்று கேட்டாள் கல்யாணி. ''நீயா?''

''நானா?... நான் கவிதை எழுதுவதில்லையென்று உனக்குத் தெரியுமே?''

''அப்படியென்றால் யார் எழுதிய கவிதை இது?...''

ரேணு பதில் சொல்லவில்லை. அங்கு அலங்காரமாக வைக்கப்பட்டிருந்த கல்யாணியின் புகைப்படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.




வாணிய செட்டியார் வகுப்பைச் சேர்ந்த 18 வயதும், படிப்பும், சிவந்த நிறமும், அழகும், ஓரளவு வசதியும் உள்ள மணப் பெண்ணுக்கு அதே சாதியில் நல்ல குணமும், எஸ். எஸ். எல். சி.க்கும் குறையாத படிப்பும், அளவான வசதியும் கொண்ட மணமகன் தேவை. வயது, தகுதி விவரத்துடன் புகைப் படப் அனுப்புதல் நன்று.

**பெட்டி எண் 26**

பிரஹசரணம், கௌண்டில்ய கோத்ரம் தமிழ் பேசும் 36 வயதுடைய டாக்டர் மணமகளுக்கு ஏற்ற வரன் தேவை. (வயது 45க்குள்).

**பெட்டி எண் 27**

பிராமணன், ஆஸ்வாயன கோத்திரம் முக்காணிய வகுப்பைச் சேர்ந்த பிரைவேட் பேங்கர் மகன் வயது 21, நல்ல அழகு, மெட்ரிகுலேஷன் பாஸ். பட்டப் படிப்பும், நல்ல வேலையும் உள்ள 30 வயதுக்குட்பட்ட மணமகன் தேவை.

**பெட்டி எண் 28**

பி.ஏ. பட்டதாரியான வாணியர் வைசிய செட்டியார் வகுப்பைச் சேர்ந்த 23 வயதுள்ள 5, 3'' உயரமும், நல்ல அழகும் நல்ல குடும்பப் பாரம்பரியமும் உள்ள பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த டிகிரி பெற்று நல்ல உத்தியோகத்திலோ அல்லது சுய தொழிலில் நல்ல வருவாய் உள்ள மாப்பிள்ளையோ தேவை. வரதட்சிணை இல்லை. ஆனால் ஆடம்பரமற்ற திருமணம். விவரங்களுடன் ஜாதகமும் போட்டோவும் தேவை.

**பெட்டி எண் 29**

எம்.ஏ. பி.இ.டி. படித்து, அரசாங்க வேலையில் ரூ. 800 மாத வருமானம் பெறும் 27 வயது செட்டியார் வகுப்பு வாலிபருக்கு 25 வயதுக்குட்பட்ட அரசாங்க வேலையில் பணி புரியும் (அ) வசதி உள்ள மணப் பெண் தேவை. ஜாதி, மதம் பொருட்டில்லை.

**பெட்டி எண் 30**

எம்.டி., டி.ஜி.ஓ. பட்டதாரியாகி, தமிழக அரசாங்கத்தில் டாக்டராகப் பணி புரியும் 33 வயது பிருஹச்சரண, காசியப கோத்ர பெண்ணுக்கு டாக்டர் வரன் தேவை. ஜாதகத்துடன் பதில் போடவும்.

**பெட்டி எண் 31**

ஷடவர்ஷண கோத்ரம், பிரஹசரணம் வகுப்பைச் சேர்ந்த 26 வயது ஆயில்யம் 3-ம் பாதம் பட்டதாரிப் பெண்ணுக்கு நல்ல நிலைமையில் உள்ள மணமகன் தேவை.

**பெட்டி எண் 32**

தற்சமயம் தனியாக ஆஸ்பத்திரி நல்ல முறையில் நடத்தி வரும், பார்வைக்கு அழகாக உள்ள, நல்ல நிறமுள்ள, ஹோமியோபதி பட்டம் (டி.எச்.எம்.எஸ்.) பெற்ற டாக்டருக்கு நாடார் வகுப்பைச் சார்ந்த 27 வயது பட்டதாரியான மாப்பிள்ளைக்கு அதே வகுப்பைச் சார்ந்த எம்.பி.பி.எஸ். படித்த பெண் அல்லது எம்.எஸ்ஸி., எம்.ஏ. படித்த அழகான பெண் தேவை.

**பெட்டி எண் 33**

எந்த விதமான கெட்ட நடத்தையும் இல்லாமல் கௌரவமாக நல்ல பெயருடன் இருக்கும் ஆர்.ஐ.எம்.பி. டாக்டரும், தேர்ச்சியான டிரைவருமான, தாய், தந்தை இல்லாத 34 வயது நாயுடு ஜாதி. 20 வயது முதல் 33 வயதுக்குள் உள்ள பெண்கள், விதவை, விவாகரத்து, கால், கை, பார்வை, ஊமை போன்ற ஊனம் உள்ள பெண்களும் விண்ணப்பிக்கவும். ஊனம் உள்ள பெண்களுக்குக் கண்டிப்பாக முதலிடம் உண்டு. ஜாதி, மதம் இல்லை.

**பெட்டி எண் 34**

அரசாங்க வங்கியில் ரூ. 800 சம்பளம் வாங்கும் 30 வயது பட்டதாரிக்கு எஸ்.எஸ்.எல்.—சி.க்கு மேல் படித்த 23 வயதுக்குட்பட்ட பெண் தேவை. தகப்பனார் கள்ளர், தாய் பிள்ளை. விருப்பமுள்ள கள்ளர், பிள்ளை, தேவர், அகம்படியார் விண்ணப்பிக்கலாம். (குணம், ஒழுக்கம் முக்கியம்)

**பெட்டி எண் 35**

21 வயது பட்டதாரி, கம்பெனி செகரடரி கடைநிலை மாணவி (A.C.S./Final) நட்டெழுத்து சுருக்கெழுத்தில் உயர்நிலைத் தேர்ச்சி பெற்ற பாரத்வாஜ கோத்ர வடகலை அய்யங்கார் பெண்ணுக்கு படித்த நல்ல வருவாயுள்ள 27 வயதுக்குட்பட்ட வரன் தேவை. பெண்ணின் உயரம் 5 அடி 5½"— பூராட நட்சத்திரம். ஜாதகம் தேவை.

**பெட்டி எண் 36**

தமிழக அரசு சர்வீஸில், உதவியாளராக மாதம் ரூ. 680 சம்பளத்தில் வேலை பார்த்து வரும் வடமாள், ரோஹிணி, ஹரித கோத்ரம் உள்ள பிராமண பிரமச்சாரிப் பையனுக்கு (40) சென்னையில் வேலை பார்க்கும் அல்லது வசதி உள்ள பெண்களிடமிருந்து ஜாதகம் வரவேற்கப்படுகிறது. வடமாள் ஜாதியில் குழந்தைகள் இல்லாத இளம் விதவைகள் வேலை பார்க்கும் அல்லது பணக்காரப் பெண்களும் விண்ணப்பிக்கலாம்.

**பெட்டி எண் 37**

"நான் செக்ரெட்டரி
ஆகையால் ஸ்மார்ட்டாக இருக்கத்தக்க உடை அணிய வேண்டுமல்லவா."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

ம:.பத்லால்
:.பேப்ரிக்ஸ்



ம:.பத்லால் இண்டஸ்ட்ரீஸ் ம:.பத்லால் :.பைன்

MF-4-TAM

Regd. No. TN MS (S) 231